# வின்ஸ்டன் சர்ச்சில்





நவயுகப் பிரசுராலயம் லிமிடெட்

# வின்ஸ்டன் சர்ச்சில்

ஆ. காசிவிசுவநாதன்
உதவி ஆசிரியர், 'பாரத தேவி'




சென்னை



[ ரூ. 1-8-0

# பொருளடக்கம்

## படங்கள்

# பதிப்புரை

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் சரித்திரத்திலும், உலக சரித்திரத்திலும் இது மகத்தான நெருக்கடியான காலம்: இப்பொழுது சாம்ராஜ்யத்திற்குத் தலைமை வகிப்பதும், வெற்றிப் பாதையில் அதை நடத்திச் செல்வதும், கைதேர்ந்த ஒரு மாலுமிக்கே சாத்தியமாகும்.

ஸ்ரீ வின்ஸ்டன் சர்ச்சில் ஒரு கைதேர்ந்த மாலுமி. எத்தனையோ புயலிலும், மழையிலும், கொந்தளிப்பிலும், அவர் வெற்றியுடன் வெளிவந்துள்ளவர். சர்ச்சிலுக்குச் சிறு தோல்வி ஏற்பட்டாலும், அது சரித்திரத்தில் குறிப்பிடவேண்டிய பெரிய விஷயமாய்த்தான் இருக்கும்.

இவருடைய இந்த வாழ்க்கைச் சரித்திரம் உணர்ச்சியும், வேகமும், துடிப்பும் நிறைந்தது. யாவரும் படித்தறிய வேண்டியது. இதை ஸ்ரீ. ஆ. காசிவிசுவநாதன் அவர்கள், தமது பத்திரிகை வேலைகளுக்கிடையே, வெகு விரைவாக எழுதி முடித்துக் கொடுத்ததற்கு எமது நன்றி அவருக்கு உரித்தாகும். இச் சரித்திரம் முழுதும் ஒரு நாவலைப் போல் ரஸிக்கும்படியாக எழுதப்பட்டிருப்பதே அவர் கைத்திறனைக் காட்டும்.

எமது இதர நூல்களை ஆதரித்த தமிழ்நாடு இந்நூலுக்கும் வரவேற்பளிக்கும் என்று நம்புகிறோம்.

பதிப்பாசிரியர்



ஏழாவது வயதில் வின்ஸ்டன் சர்ச்சில்

# வின்ஸ்டன் சர்ச்சில்

## 1. இளமைப் பருவம்

சர்ச்சிலுடைய பெயரைக் கேட்டாலே நாஜிகள் கோபமடைகிறார்கள். ஜெர்மன் தேசத்துப் பிரசார மந்திரியாகிய கோயபெல்ஸ், சேம்பர்லின் பிரிட்டிஷ் பிரதம மந்திரியா யிருந்தபோது கூட, வின்ஸ்டன் சர்ச்சிலைப் பற்றித்தான் கோபமடைந்து மிகுந்த ஆத்திரத்தோடு கண்டித்துப் பேசுவார். இப்படி ஜெர்மானியர் சர்ச்சில்மீது கொண்டிருக்கும் குரோதத்துக்குக் காரணம், சர்ச்சிலுடைய பேரறிவும், சிறந்த போர்த் திறனும், பழிக்குப் பழி வாங்கும் அழுத்தமான சுபாவமுமே யாகும்.

'பிரிட்டனில் எத்தனையோ அரசியல் நிபுணர்கள் இருந்திருக்கிறார்கள், இன்றைக்கும் இருக்கிறார்கள். ஆயினும் பிட் என்பவருக்குப் பின்னால், அந்த ஸ்தானத்தை வகிப்பவர் சர்ச்சிலைத் தவிர வேறு எவருமில்லை' என்று ஏ. ஜி. கார்டினர் எழுதியிருக்கிறார்.

ஜான் கந்த்தர் தமது 'ஐரோப்பாவுக்குள்' என்ற புத்தகத்திலே சர்ச்சிலைப் பற்றி இவ்வாறு குறிப்பிடுகிறார்:

> 'அரசியலில் மட்டுமல்ல, சகல துறைகளிலுமே வின்ஸ்டன் சர்ச்சில் ஓர் அபாரமான பேர்வழிதான். அவர் அரை விநாடிகூட வீண் பொழுது போக்காமல்,

எப்பொழுதுமே சுறுசுறுப்பா யிருப்பவர். எந்த விஷயத்திலும் சர்வாதிகாரம் செலுத்தும் சுபாவமுடையவர். அதற்கேற்ற சாமர்த்தியமும் படைத்தவர். எல்லாத் துறைகளிலும் அநுபவம் பெறவேண்டும் என்கிற ஆர்வம் படைத்தவர். செயற்கரிய காரியங்களைச் செய்யவேண்டுமென்ற ஊக்கமுள்ளவர். அவர் சிறந்த சிப்பாயாக விளங்கிக் கீர்த்தி பெற்றவர். அவர் ஓவியக்காரர், பத்திரிகைக்காரர், சரித்திரக்காரர், நிர்வாகத் திறமுடையவர், பேச்சுச் சமர்த்துடையவர். அவர் பிரதம மந்திரியாகாத ஒன்றுதான் பாக்கியா யிருக்கிறது. இனிமேல் இச் சந்தர்ப்பம் வாய்க்கவும் இடமிருக்கிறது.'

கந்த்தர் கூறிய வாக்கியம் பலித்துவிட்டது. வின்ஸ்டன் சர்ச்சில் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக ஆகிவிட்டார். கந்த்தர் மட்டும் மேற்கண்டவாறு கூறினர் என்று நினைக்க வேண்டாம். நாற்பது வருஷங்களுக்கு முன்னுல், அமெரிக்காவுக்கு சர்ச்சில் விஜயம் செய்தார். அவருடைய வருகையை முன்னிட்டு, அவருக்குத் தெரியாமலே ஓர் அமெரிக்கர் பிரயாணத் திட்டங்களை அமைத்திருந்தார். அவர் ஒவ்வொரு ஊரிலும் வரவேற்புக் கழகங்களை நியமித்திருந்தார். அவர் சர்ச்சிலைப் பற்றி விளம்பரப்படுத்தியது வருமாறு:

> 'ஐந்து யுத்தங்களில் வீரப் புகழ் பெற்றவரும், ஆறு புத்தகங்களை எழுதியவரும், பிரிட்டனின் எதிர்காலப் பிரதம மந்திரியுமான வின்ஸ்டன் சர்ச்சில் உங்கள் நகருக்கு விஜயம் செய்கிருர்!'

இந்த விளம்பரத்தைக் கண்டு சர்ச்சில் ஆட்சேபித்து, 'பிரிட்டனின் எதிர்காலப் பிரதம மந்திரி' என்ற அடைமொழியை நீக்கிவிடவேண்டுமென்று வற்புறுத்தினர்.

இவ்வாறு நாற்பது ஆண்டுகளுக்கு முன்னுலேயே, சர்ச்சிலைப் பற்றி அந்த அமெரிக்கரும் கந்த்தரைப் போல் எதிர்பார்த்திருந்தார்! அமெரிக்கர் குறிப்பிட்ட சில வருஷங்களுக்குப் பின்பு, பிரபல அரசியல் நிருபரான ஸ்ரீ எச். டபுள்யூ. மாஸிங்ஹாம் என்பவர் 'டேய்லி கிராணிகிள்' என்ற பத்திரிகையில், சர்ச்சிலுடைய பார்லிமெண்ட் பிரசங்கத்திலிருந்து சில வாக்கியங்களைக் குறிப்பிட்டு, 'இவர் லிபரல் கட்சியைச் சேர்ந்த இங்கிலாந்தின் பிரதம மந்திரியாக விளங்குவார் என்று எதிர்பார்க்கிறேன்' என எழுதியுள்ளார்.

'பிரிட்டனின் எதிர்காலப் பிரதம மந்திரி' என்று அமெரிக்கர் விளம்பரப் படுத்தியிருந்ததை, சர்ச்சில் ஆட்சேபித்தாராயினும், அந்த அமெரிக்கர் கூறியது உண்மையாயிருக்கிறதல்லவா? இதற்குக் காரணம் என்ன? சர்ச்சிலிடம் இந்த மகோன்னதமான பதவிக்கு வேண்டிய அம்சங்களுக்கு மேலாக அப்போதே தென்பட்டன. விளையும் பயிர் முளையிலேயே தெரியாதா, என்ன!

ஜெர்மனியின் நாஜித் தலைவர் ஹிட்லரின் வாழ்க்கை லட்சியங்களும், அரசியல் நோக்கங்களும், பெரும்பாலும் அவர் எழுதிய 'மேய்ன் காம்ப்' என்ற அவருடைய சுயசரிதையை ஒட்டியே நடந்துவருவதை நாம் காண்கிறோம். அதைப் போலவே நமது சர்ச்சிலும் தாம் எழுதிய 'சவ்-ரோலா' என்ற நாவலின் கதாநாயகனின் வாழ்க்கையை ஒட்டியே நடந்துவந்திருக்கிறார் என்று தெரிகிறது. தம் கொள்கைகளை அமுலுக்குக் கொண்டுவருவதற்கு ஹிட்லர் ஆயுதங்களையும் குண்டுகளையும் முக்கியமாகக் கையாண்டாரென்றால், சர்ச்சிலோ, தம் நோக்கங்களுக்கு வெற்றிமேல்

வெற்றி சம்பாதிக்கத் தம் சொற்பொழிவையும் விடாமுயற்சியையுமே ஆயுதங்களாகக் கொண்டிருந்தார். ஹிட்லரின் ஒவ்வொரு வார்த்தையிலும் செய்கையிலும் சர்ச்சிலுக்குப் புலப்பட்ட அர்த்தத்தின் காரணமாக, அவர் அதிகாரத்திலிருந்த போதும், இல்லாத போதும், பிரிட்டிஷ் மகாஜனங்களுக்கு அவ்வப்போது மறைமுகமாகவும் வெளிப்படையாகவும் எச்சரிக்கைகள் கொடுத்து வந்திருக்கிறார். சர்ச்சிலின் ஒப்பற்ற அறிவையும் ஆற்றலையும் கண்டே ஹிட்லருக்கு அவர் மேல் பயமும் வெறுப்பும் இருந்துவருகிறது. வயிரத்தை வயிரம் அறுத்துவிடு மல்லவா?

சற்று வளைந்து முன் தள்ளிய உடம்பும், இணைபிரியாத் தோழர்களான பல்வகைத் தொப்பிகளும், கைத்தடிகளும், உடைந்த வலது தோளும், பரந்த நெற்றியும், ஆழ்ந்த யோசனையும், விடாமுயற்சியும், சமயம் பார்த்துத் தம்மையோ, தம்மைச் சேர்ந்தவரையோ வஞ்சித்தவரை ஒடுக்கும் தன்மையும் சர்ச்சிலின் முக்கிய லக்ஷணங்கள்.

பல நாட்டு ஜனங்களும் ரஸித்து அநுபவிக்கும்படியான முக்கிய அம்சங்கள் சர்ச்சிலிடம் கிடையாது. அவர் வாழ்க்கைச் சரிதம் பிரிட்டிஷாருக்கு மிக ருசியா யிருக்கும். ஏனெனில், அவருடைய வாழ்க்கைப் போக்கு முழுவதும் சட்டசபையிலும், பதவிகளிலுமே நடந்திருக்கிறது. எனினும், ராஜதந்திரத்திலும், சொல்வன்மையிலும் அவரது ஒப்பற்ற திறமையை அறிந்துகொள்ள எல்லோரும் விரும்ப வேண்டியது அவசியமேயாகும்.

வின்ஸ்டன் சர்ச்சில் ஓர் உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவர். முந்நூறு வருஷங்களுக்கு முன்னால், வின்ஸ்டன்

சர்ச்சில் என்று இவருடைய பெயரைக்கொண்ட முன்னோர் ஒருவர் இருந்தார். 'வின்ஸ்டன்', 'சர்ச்சில்' என்பவை இரு குடும்பங்களின் பெயர்கள். இந்தக் குடும்பங்களுக்குள் பிற்காலத்தில் சம்பந்தம் ஏற்பட்டதால் அவருக்கு வின்ஸ்டன் சர்ச்சில் என்று பெயர் வரக் காரணமாயிற்று. அவர் மிகக் கீர்த்தி வாய்ந்திருந்தார். நமது சர்ச்சில் அவருடைய வழித்தோன்றல். இவ்வாறு 17-ஆவது நூற்றூண்டு முதலாகவே இப்போதுள்ள வின்ஸ்டன் சர்ச்சிலின் குடும்பம் பிரபல்யம் வாய்ந்ததா யிருந்தது.

சர்ச்சிலுடைய முழுப் பெயர் வின்ஸ்டன் லியோனர்டு ஸ்பென்ஸர் சர்ச்சில் என்பதாகும். இவர் 1874-ஆம் ஆண்டில் நவம்பர் 30-ஆம் தேதியன்று பிறந்தவர். இவரது தந்தை லார்ட் ராண்டால்ப் சர்ச்சில் எல்லோராலும் புகழப்பட்ட ஓர் அரசியல்வாதியாக விளங்கினர். சர்ச்சிலுடைய தாய் ஓர் அமெரிக்க ஸ்திரீ.

சர்ச்சிலுடைய தாயார் ஜென்னி ஜெரோம் நியூயார்க் நகரத்தைச் சேர்ந்த ஒரு பிரபலமான குடும்பத்தில் தோன்றியவர். லியோனர்ட் ஜெரோம் என்ற செல்வந்தரின் புத்திரி. லியோனர்ட் உலகப் பிரக்யாதி பெற்ற 'நியூயார்க் டைம்ஸ்' என்ற பத்திரிகையின் சொந்தக்காரரும், ஆசிரியருமாக இருந்தார்.

சர்ச்சில் பிறந்த சமயத்தில்தான், அவரது தந்தை லார்ட் ராண்டால்ப் சர்ச்சில், முதலாவதாகப் பார்லிமெண்ட் தேர்தலில் வெற்றிபெற்றூர்.

வாலிபப் பிராயத்தில் சர்ச்சில் மிகவும் சுட்டித்தனமாக இருந்தார். ஸ்ரீமதி எவரஸ்ட் என்ற நர்ஸ்தான் சர்ச்சிலைப் பராமரித்து வளர்த்துவந்தார். அவருடைய தாயார்

நல்ல ஆடைகளை அணிந்துகொண்டு, விருந்தினரை உபசரிப்பதிலேயே ஈடுபட்டிருப்பது வழக்கம். தந்தையோ அரசியல் அலுவல்களில் மும்முரமா யிருந்தார். ஆகையால் ஸ்ரீமதி எவரஸ்ட்தான் சர்ச்சிலைத் தாய் போல அன்புடன் வளர்த்துவந்தார். சர்ச்சிலும் அவரிடம் மிகுந்த பிரியத்துடன் இருந்தார்.

ஏழாவது வயதில்தான் சர்ச்சில் ஆஸ்காட் என்ற நகரிலுள்ள பள்ளிக்கூடத்துக்குக் கல்வி கற்க முதன் முதலாக அனுப்பப்பட்டார். அங்கே மாணவர்களுக்கு விதிக்கப்பட்டிருந்த கட்டுப்பாடுகளைக் கண்டு சர்ச்சில் வெறுப்படைந்தார். 'சிறுவர்களுக்கு ஏற்பட்ட ஜெயில்கூட இதைவிட மேலானது' என்று கருதினார். உபாத்தியாயர்கள் சொன்னபடி சர்ச்சில் கேட்பதே யில்லை. குறும்புத் தனம் நிறைந்த பையன் என்றே உபாத்தியாயர்கள் இவரைக் கருதிவந்தனர்.

பள்ளிக்கூடத்தில் சர்ச்சில் செய்த துஷ்டத்தனம் சொல்லுந் தரமன்று. ஒரு முறை சர்ச்சில் அவருடைய தலைமையாசிரியரின் குல்லாவை உதைத்து உதைத்துக் கிழித்து எறிந்துவிட்டாராம்! இதற்குக் காரணம், பள்ளிக்கூட உக்கிராணத்திலிருந்து சர்க்கரை திருடினதாக அவர் மேல் குற்றம் சாட்டப்பெற்றது.

ஆஸ்காட் பள்ளிக்கூட உபாத்தியாயர்களில் ஒருவர் சர்ச்சிலுடைய மனத்தில் நீண்டகாலம் வரை குடிகொண்டிருந்தார். இதற்குக் காரணம் அந்த ஆசிரியர் சர்ச்சிலைப் பள்ளிக்கூடத்தில் அடித்துக் கண்டித்ததுதான். சர்ச்சில் இந்த ஆசிரியரைப் பழிக்குப் பழி வாங்கவேண்டுமென்று ஆத்திரங் கொண்டார். இந்த ஆத்திரம் இவர் பள்ளிக்

கூடத்தி லிருந்தபோதும், அதை விட்டுச் சென்ற பின்னரும் கூட இருந்தது. சாந்தர்ஸ்ட் என்ற இடத்தில் இருந்த போது, ஆஸ்காட்டுக்குப் போய் அந்த ஆசிரியரை மாண வர்களுக்கு முன்னுல் கண்டபடி இகழ்ந்து பேசவேண்டு மென்றும், பிறகு தம்மை அவர் அடித்தது போல், அவரைத் திருப்பி அடித்துவிடவேண்டு மென்றும் எண்ணினுர் சர்ச் சில். பல வருஷங்களுக்குப் பிறகு, தமக்குப் போதிய வயது வந்துவிட்டது எனத் தெரிந்து, அவர் அந்த ஆசிரி யரைத் திருப்பி யடித்துவிடுவது எனத் தீர்மானித்தார். அவ்வாறே சாந்தர்ஸ்டிலிருந்து ஆஸ்காட்டுக்குக் குதிரை மீது ஏறிச் சென்று, அப்பள்ளிக்கூடத்தை அடைந்தார். ஆனுல், அந்தப் பள்ளிக்கூடம் பிறருடைய நிர்வாகத் துக்கு மாறிவிட்டதென்றும், அவர் தேடிச்சென்ற ஆசிரியர் இறந்துபோய் வெகுகாலம் ஆகிவிட்ட தென்றும் அறிந்து, சர்ச்சில் மிகுந்த ஏமாற்றத்தோடு திரும்பினுர்!

பள்ளிக்கூடத்தில் சர்ச்சில் கேட்கிற கேள்விகள் ஆசிரியர்களேயும் பிரமிக்க வைப்பதா யிருக்கும். லத்தீன் பாஷையில் விளிவேற்றுமையைப் பற்றிச் சொல்லிக்கொடுக் கும் போது, ‘ஓ மேஜையே!’ என்று மேஜையைக் கூப்பிடு வது அர்த்தமற்ற விஷயம் என்று அவர் விவாதித்து மகிழ்ந் தார் என்று சொல்லப்படுகிறது.

ஒரு நாள் சர்ச்சில் படித்துக்கொண்டிருந்த பள்ளிக் கூடத்தைப் பார்வையிடுவதற்காக ஒருவர் சென்றிருந்தார். விளேயாட்டு மைதானத்தில் ஒரு பையன் சுற்றிச் சுற்றி ஓடிக்கொண்டிருப்பதைக் கண்டு, அவர் அதிசயித்து, ‘இந்தப் பையன் யார்?’ என்று ஆசிரியர்களேக் கேட்டார். ‘ஓ! அவன் சர்ச்சில், அவன் பெரிய வாயாடி.

அவனை வாய் பேசாமல் வைத்திருக்க இதுதான் வழி' என்று ஆசிரியர்களிடமிருந்து அவருக்குப் பதில் வந்தது.

சர்ச்சில் பிற்காலத்தில் கன சரீர முடையவராயினும், இளம்பிராயத்தில் மிக மெல்லிய தேகத்தையே உடையவர். எட்டாவது வயதில் அவர் கடுமையான வியாதி ஒன்றினல் பீடிக்கப்பட்டுக் குணமடைந்தார். பிறகு பிரைட்டன் நகரைச் சேர்ந்த ஒரு பள்ளிக்கூடத்தில் சேர்க்கப்பட்டார். மிஸ் ஈவா மூர் என்ற நடிகை பள்ளியில் நடனம் கற்றுக் கொடுத்துவந்தார். அவர் தம்முடைய வகுப்பில், 'படு சுட்டித்தனம் நிறைந்த' ஒரு பையனைக் கண்டார். உலகத்திலேயே அந்தப் பையன்தான் எல்லோரிலும் அதிகக் குறும்புக்காரன் என அவர் நினைத்தார். அந்தப் பையன் வின்ஸ்டன் சர்ச்சில்தான் என்பதைச் சொல்லவேண்டுமா?

பிரைட்டனில் சர்ச்சில் மூன்று ஆண்டுகள் தங்கியிருந்தார். நல்ல கவிகளை மனப்பாடம் செய்துகொள்வதில் சர்ச்சிலுக்கு மிகுந்த பிரியம் உண்டு. பிரெஞ்சு பாஷை கற்பதிலும் அவர் ஆர்வங் கொண்டிருந்தார். மற்றும், அந்தச் சிறு வயதிலேயே பத்திரிகைத் தொழிலிலும் அநுபவம் பெறத் தொடங்கிவிட்டார்.

சில பையன்களின் உதவியைக்கொண்டு பள்ளிக்கூட ஆசிரியர் ஒருவர் ஒரு பத்திரிகையை ஆரம்பித்தார். மற்றவர்களும் இதே போல் செய்தனர். இவர்கள் ஆரம்பித்த பத்திரிகைகளின் போக்கைச் சர்ச்சில் கவனித்துக் கொண்டேயிருந்து, இவர்கள் செய்த தவறுகளையெல்லாம் மனத்தில் பதித்துக்கொண்டு, இந்த அநுபவத்திலிருந்து சொந்தமாகவே 'கிரிட்டிக்' என்ற பத்திரிகையைத் தொடங்கினர். ஆனல் அப் பள்ளிக்கூடத்திலிருந்த பத்

திரிகை ஆர்வம் மறைந்துவிடவே, 'கிரிட்டிக்' பத்திரிகை முதல் வெளியீட்டோடு நின்றுவிட்டது.

பொதுவாக, சர்ச்சில் தம்முடைய வகுப்பில் சரிவரப் படிப்பதே கிடையாது. ஆகையால் மற்றப் பிள்ளைகளை விட அவர் குறைவாகவே ஆசிரியர்களால் மதிக்கப்பட்டு வந்தார். வகுப்பில் கடைசி ஸ்தானத்தை வகித்தவர் அவரே. இதற்குக் காரணத்தை அவரே கூறியிருக்கிறார்: 'பகுத்தறிவும், யூகமும், உற்சாகமும் பயன்படாத படிப்பில் நான் அக்கரை கொள்ள முடியாது.'

12-ஆவது வயதில் வின்ஸ்டன் சர்ச்சில் ஹார்ரோ கலா சாலையில் சேர்ந்தார். பிரவேசப் பரீட்சையில் அவர் கேள்விகளுக்குச் சரிவரப் பதில் எழுதவில்லை. லத்தீன் பாஷையில் கேட்கப்பட்டிருந்த கேள்விகளில் ஒன்றுக்கேனும் பதில் எழுதத் தெரியாமல் விழித்தார். விடை எழுதவேண்டிய கடிதத்தில் தம்முடைய பெயரை மட்டும் எழுதி, கேள்விகளுக்குப் பதில் எழுதத் தொடங்குபவரைப் போல் (1) என்று ஆரம்பித்து, பிறகு எதுவுமே எழுதாமல் அப்படியே விட்டுவிட்டார்! ஆனால், ஒரே ஒரு முறை மட்டும் மெக்காலே எழுதிய புத்தகத்திலிருந்து 1200-வரிகளை மனனம் செய்து, ஒரு பிழைகூட இல்லாமல் அவர் ஒப்பித்துப் பரிசு பெற்றார். இதைத் தவிர, கல்விப் பயிற்சியில் அவர் பிரகாசிக்கவே யில்லை. பெரியார்களுடைய வாக்கியங்களையும் கவிகளையும் நெட்டுருவாக மனப்பாடம் செய்து கொள்வதில் அவர் மகா சமர்த்தர். தவிரவும், பிறர் ஏதேனும் ஒன்றைச் செய்தால், அதைவிட அதிகச் சிறப்பாகத் தாம் புதிதாக ஒன்றைச் செய்யவேண்டும் என்று தீவிரங் கொண்டுவிடுவார். இதே தீவிர முயற்சியினால் தான் முன்

னர் 'கிரிட்டிக்' என்ற பத்திரிகையைச் சொந்தமாக வெளியிட்டார். பள்ளிக்கூடத்தில் இரண்டு சங்கங்கள் சில நாடகங்களை நடத்தினதைப் பார்த்து, தாமாகவே 'அலாவுத்தீன்' என்ற நாடகத்தை எழுதி, காகிதத்தாலேயே பல வீடுகள் உள்ள ஒரு தெருவையே அந் நாடகத்தின் ஒரு காட்சிக்காகத் தயாரித்திருந்தார். மற்றும் ஒரு பொம்மை ரயில் வண்டியைச் செய்து, அதிலிருந்து புகை கிளம்புகிறது போலவும், காகிதத்தாலேயே குகைகளும் செய்திருந்தார்.

ஒவ்வொரு வருஷக் கடைசியிலும், கிறிஸ்துமஸ் பண்டிகையை முன்னிட்டு அப் பள்ளிக்கூடத்தில் ஒரு நாடகம் நடத்துவதுண்டு. அதில் சர்ச்சில்தான் மிகச் சிறந்த நடிகராக விளங்குவார்.

சர்ச்சிலுக்குக் கணிதமே வராது. ஆயினும் பொது விஷயங்களில் அவருடைய விசேஷ அறிவை உத்தேசித்துத் தலைமையாசிரியர் அவரிடம் தாட்சண்யம் காட்டி வந்தார். எனினும், அவர் படிப்பிலே மிக மோசமாகவும், சுட்டித்தனத்தில் முதல் பையனாகவும் விளங்கியதால், அவரைப் பள்ளிக்கூடத்திலிருந்து விலக்கிவிடலா மென்று கூட ஒரு முறை தலைமையாசிரியர் முடிவு செய்திருந்தார்.

சர்ச்சில் தமது பாடங்களை வாசிக்கும்போது, எப்போதும் உரக்கச் சப்தமிட்டே வாசிப்பார். இது மற்றப் பிள்ளைகளுக்குத் தொந்தரவா யிருக்கும். ஒரு முறை டாக்டர் வெல்டன் என்பவர், மனத்துக்குள்ளேயே படிக்கும்படி சர்ச்சிலிடம் கூறினர். அப்போது சர்ச்சில், 'சரி, என் மனத்துக்குள் நான் படித்துக்கொள்ளுகிறேன். ஆனல், நான்மட்டும் புரிந்துகொள்ளவேண்டு மென்ற சுய

நலம் என்னிடம் கிடையாதாகையால்தான் நான் சப்த மிட்டுப் படித்துக்கொண்டிருந்தேன்' என்று வேடிக்கை யாகப் பதிலளித்தார்.

வாலிபச் சர்ச்சிலைப்பற்றிக் கூறப்படும் விஷயங்களில் ஒன்று மிக ரஸமானது. தண்ணீருக்குள் வீசப்படும் நாணயங்களை அவர் நொடிப் பொழுதில் முக்குளித்து எடுத்துவிடுவாராம். இளமையிலேயே அவர் நன்றாக நீந்தக் கற்றிருந்தார்.

1893-ல் சர்ச்சில் சாந்தர்ஸ்டிலுள்ள ராயல் ராணுவக் கல்லூரியில் சேர்ந்து குதிரைப் படைக்குத் தயாரானார். கவாத்துப் பழகுவதில் நல்ல தேர்ச்சிபெற்றார். பார்ப் போரும் கேட்போரும் புகழும்படி அவர் ராணுவப் பயிற்சி யில் முதன்மையடைந்து வருவதும், இதற்கு நேர் மாறாக ஹார்ரோ முதலிய கலாசாலைகளில் எல்லா மாணவர்களுக் கும் பின்னணியில் நின்றுவந்ததும் வினையின் கூற்றல்லவா?

சாந்தர்ஸ்டுக் கலாசாலையில் படிக்கும்போதுதான் சர்ச்சில் முதன்முதலாக ஒரு பிரசங்கம் செய்தார். அது பத்திரிகைகளுக்கு அனுப்பவோ, அல்லது கீர்த்தியைப் பெறவோ செய்யப்பட்ட பிரசங்கமன்று. அதன் விவரம் வருமாறு................நன்னடத்தையை அபிவிருத்தி செய்ய வேண்டி ஆர்மிஸ்டன் சான்ட் என்ற மாது சில உல்லாச மேடைகளை மூடிவிட முயன்றாள். லீஸ்டர் சவுக்கத்தி லிருந்த எம்பயர் மியூசிக் ஹாலையும் மூடும்படி செய்து விட்டாள். வின்ஸ்டனுக்கும் அவர் நண்பர்களுக்கும் கோபம் வந்தது. உல்லாசத்தையும் சுயேச்சையையும் உடைத்தெறியவே இந்த மாது எத்தனிக்கிறாள் என்றும், அந்தப் பிரயாசையை உடனே கிள்ளி எறியவேண்டு

மென்றும் தீர்மானித்தார்கள். உல்லாச மேடையை மூடிக்கொண்டிருந்த அடைப்பின் மேல் ஏறி, நமது வின்ஸ்டன், ஆவேசத்தைக் கிளப்பும் ஓர் அரிய பிரசங்கம் செய்தார். அதன் விளைவாக அந்த அடைப்பு தகர்த்தெறியப்பட்டது. கட்டிடத்துக்கே சேதமுண்டாகிவிடுமோ என்று பயந்த கொட்டகையின் சொந்தக்காரர் வந்து வின்ஸ்டனைச் சாந்தப்படுத்தி, பழையபடியே உல்லாச வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்தார். இந்த முதல் வெற்றியின் குதூகலத்திற்கு எல்லை ஏது?

சர்ச்சிலின் 20-ஆவது பிறந்த தினக் கொண்டாட்டம் உர்ஸ்டெரில் நடைபெற்றது. அச்சமயம் அவருடைய தந்தையார் நோய்வாய்ப்பட்டு மரண வேதனையில் இருக்கிறார் என்று தந்தி வந்தது. சில தினங்களுக்குப் பிறகு, கொஞ்சம் வசதி ஏற்பட்டதால், ஆரோக்கியத்திற்காக உலகச் சுற்றுப் பிரயாணம் போய்வரலா மென்று அவர் தந்தையார் புறப்பட்டார். கெய்ரோவுக்குச் சென்றதும், மேற் செல்ல முடியாமல் இங்கிலாந்துக்குக் கொண்டுவரப்பட்டார். வின்ஸ்டனும் அவர் சகோதரரும் தந்தையை வரவேற்றார்கள். 1895-ஆம் வருஷம் ஜனவரி மாதம் லார்டு ரான்டால்ப் சர்ச்சில் காலமானர். சொற்பொழிவில் உலகக் கீர்த்தி பெற்ற கிளாட்ஸ்டன் ஒருவருக்கே இணையானவர் எனக் கருதப்பட்ட ரான்டால்பின் பிரேத ஊர்வலம் மிகவும் விமரிசையாக நடந்தேறியதில் ஆச்சரியமில்லை.

## 2. போர் வேட்கை

சர்ச்சில் தம்முடைய பாலியப் பருவத்திலேயே தாம் ஒரு சிப்பா யாகவேண்டு மென்று அதிக விருப்பங் கொண்டிருந்தார். அவரது தந்தைகூட, இறப்பதற்கு முன், தென்னுப்பிரிக்காவிலிருந்த ஒரு நண்பருக்குக் கடிதம் எழுதி, 'சர்ச்சிலுக்குச் சொந்த நாட்டில் நல்ல உத்தியோ கம் கிடைப்பது அரிது. தென்னுப்பிரிக்காவில் சர்ச்சிலே ராணுவத்தில் சேர்த்துக்கொள்ள முடியுமா?' என்று கேட்டிருந்தார். ராண்டால்ப் சர்ச்சில் தம் மகன் வின்ஸ் டன் சர்ச்சிலுக்கு ராணுவத்தில் சிப்பாய் வேலையைத் தவிர, வேறு தகுதிவாய்ந்த வேலே எதுவும் கிடைக்கா தென்று எண்ணினர் போலும்!

ஆனல், சர்ச்சில், சிறு குழந்தையா யிருக்கும்போதே, சிப்பாயாக ஆவதைவிடச் சிறந்தது வேறு எதுவுமில்லே யென்று நினேத்திருந்தார். பள்ளிக்கூட விடுமுறை நாட்களில் அவர் ஏராளமான பொம்மைச் சிப்பாய்களே வைத்துக்கொண்டு விளேயாடுவது வழக்கம். அவரிடம் 1500 பொம்மைச் சிப்பாய்களுக்குக் குறையாமல் இருந் தன. எல்லாப் பொம்மைச் சிப்பாய்களும் பிரிட்டிஷ் படையைச் சேர்ந்தவர்களேப் போலிருக்கும்! இந்தப் பொம்மைச் சிப்பாய்களே முதலில் காலாட்படைகளாகவும், பிறகு குதிரைப் படைகளாகவும் நிறுத்தி, வேறு பொம்மை களேத் துப்பாக்கிகளாகவும், பீரங்கிகளாகவும் அடுக்கி வைத்து விளேயாடுவாராம் சர்ச்சில்.

ஒரு நாள், அவர் தம்முடைய படைகளையும், சிப்பாய் களையும், பீரங்கிகளையும் வந்து பார்க்கும்படி தந்தையை அழைத்தார். மகன் இப்படிப் பொம்மைச் சிப்பாய்களை வைத்து விளையாடுவதைப் பார்த்துத் தந்தை மிகவும் சந்தோ ஷப்பட்டார். ஆயினும், மகன் கல்வி கற்பதில் சிரத்தை காட்டாமல் ராணுவத்தில் மனம் வைத்திருப்பதைக் கண்டு அவருக்கு ஓரளவு வருத்தம் உண்டாயிற்று. 'நீ ராணு வத்தில் சேர்ந்துகொள்கிருயா?' என்று அவர் வின்ஸ் டனைப் பார்த்துக் கேட்டார். வின்ஸ்டன் மிகச் சந்தோஷத் துடன், 'அதுதானே என்னுடைய ஆசை!' என்று பதி லளித்தார்.

'பெரியவன் ஆனல் நீ என்ன செய்யப் போகிருய்?' என்று கேட்டவர்கள் எல்லோருக்கும் சர்ச்சில் இப்படியே தான் பதிலளித்து வந்தார்: 'நான் சிப்பா யாகத்தான் போகிறேன். யுத்தம் நடக்கும்போது நான் சிப்பாயாக இருக்கவேண்டும். பிறகு நான் அரசியலில் ஈடுபடுவேன்.'

ஒரு நாள் வின்ஸ்டன் சர்ச்சில் தொண்டை சிகிச்சை யில் பிரக்கியாதி பெற்ற ஒரு டாக்டரிடம் சென்று, 'எனது தொண்டையை ரண சிகிச்சை செய்யவேண்டும். என்னு டைய குரல் பிரசங்கத்துக்கு ஏற்றதா யில்லை,' என்று தெரிவித்தார். இதற்கு அந்த டாக்டர், 'இதனல் ஒன்றும் பாதகமில்லை. நீதான் ராணுவத்தில் சேரப் போகிருயே!' என்று பதிலளித்தார். உடனே சர்ச்சில், 'உங்களுக்கு ஒன்றும் தெரியவில்லை. நான் முதலில் ராணுவத்தில் சேரப் போகிறேன். பிறகு பொது வாழ்க்கையில் ஈடுபட்டு அர சியல்வாதி யாகப்போகிறேன். நான் ஒரு மந்திரியாயிருக் கும்போது, ஒரு முக்கியமான பிரசங்கத்தில் சரியான உச்

சரிப்பின்றிப் பேசினுல், எப்படியிருக்கு மென்பதை நினைத்துப் பாருங்கள்!' என்று அந்த டாக்டரைக் கேட்டார்.

சிறு வயதிலேயே சர்ச்சில் மிகத் தைரியசாலி. ஹார்ரோவில் ஒருநாள் ஒருவர் தம் கையில் வாளை ஏந்திக்கொண்டு, 'யாராவது ஒரு பையன் தன் தலையில் ஓர் ஆப்பிள் பழத்தை வைத்துக்கொள்ளச் சம்மதிப்பானுயின், அதை வெட்டிப் பல துண்டுகளாக்குவேன்' எனத் தெரிவித்தார். பள்ளிக்கூடத்திலிருந்த காப்டெனும் மற்றவர்களும் இதை ஆட்சேபித்தார்கள். ஆனல், சர்ச்சில் இந்த அபாயத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல், ஆப்பிள் பழத்தைத் தம் தலையில் வைத்துக்கொண்டு அதை வெட்டும்படி சொல்ல முன் வந்தார்.

குத்துச் சண்டையிலும் குஸ்தியிலும் சர்ச்சில் சாமர்த்திய முள்ளவர். எதிரிகளை எதிர்பாராத நிலையில் தாக்கிப் பிரமிக்க வைக்கும் சுபாவமுடையவர். இதே குணந்தான் அவருடைய பிற்கால அரசியல் வாழ்க்கையிலும் அவருக்கு வெற்றியளித்துக்கொண்டு வந்தது. அவருடைய வீரமும் துடிப்பும் அவரை ராணுவத்திற்கு ஏற்றவராகச் செய்திருந்தன. ஆனல், எடுத்த எடுப்பில் ராணுவத்தில் பெரிய பதவி கிடைத்துவிடுமா?

தந்தை இறந்த பொழுது சர்ச்சிலுக்கு இருபது வயது. அவர் தந்தையை இழந்ததில் மிகத் துக்கமடைந்தாராயினும், ராணுவத்தில் சேருவதற்கு அனுமதி கிடைத்ததும், அந்தத் துக்கம் ஓரளவு மாறிவிட்டது. 1895-ஆம் ஞு மத்தியிலே ஆல்டர் ஷாட்டிலிருந்த நான்காவது ஹஸ்ஸார் படையில், காப்டெனுக்கு அடுத்த ஸ்தானத்தில், ஒரு குதிரை வீராக

அமர்த்தப்பட்டார். யுத்தகளத்தில் கீர்த்தி பெறவேண்டு மென்ற வேட்கை அவரை வாட்டியது.

ஆனல், அப்போது பெரிய யுத்தம் எதுவும் நடை பெறப் போவதாக யாருமே எதிர்பார்க்கவில்லை. இங்கி லாந்து இனி போரில் இறங்காதென்றும், பொருளாதார வகையில் நன்றுகச் சீர்திருந்திக்கொள்வதற்கு நீண்டகால சமாதானம் நிலவுமென்றும் ஆங்கிலேயர் நினைத்தனர். ஆனல், பிரிட்டிஷ் ராணுவத்தைச் சேர்ந்தவர்கள் சும்மா இருப்பார்களா? அழகான உடைகளைப் போட்டுக் கொண்டு, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த படைகள் என வாயளவில் பெருமை பாராட்டிக்கொள்ள அவர் களுக்குப் பிடிக்கவில்லை. ஏதேனும் ஒரு காரியத்தைச் செய்துகொண்டிருக்கவேண்டு மென அவர்கள் எண்ணி ஞர்கள். கிரிமியாவில் தோன்றிய குழப்பமும், 1857-ஆம் வருஷத்து இந்தியக் கலகமும் பழைய விஷயங்களாய்ப் போய்விட்டன. ஆப்கானிய, எகிப்திய இயக்கங்கள்கூடப் புத்தகத்தில் படிக்கவேண்டிய விஷயங்களாக ஆகிவிட்டன. ஆகவே, ராணுவத்திலிருந்தவர்கள் ஏதேனும் சுறுசுறுப் பான காரியமொன்றை எதிர்பார்த்துத் துடித்துக்கொண் டிருந்தார்கள்.

வின்ஸ்டன் சர்ச்சிலுக்கும் சரியான வாலிப வயது அல்லவா? அவருக்குச் சமாதான காலம் சிறிதுகூடப் பிடிக்கவில்லை. பூகோளப் படத்தைக்கொண்டு, எங்கே யாவது யுத்தம் நடக்கிறதா என்று தேடிப் பார்த்தார். ஆம், கியூபாவிலே, ஸ்பெயின் தேசத்தாருக்கும் கியூபாவின் கலகக்காரர்களுக்கும் ஒரு யுத்தம் நடந்துகொண்டிருந்தது. மார்ஷல் மாட்டினஸ் காம்போஸ் என்பவர் யுத்தத்தைத்

தீவிரமாக நடத்தும்பொருட்டு கியூபாவுக்கு அனுப்பப்பட்டிருந்தார். அவருடன் 80,000 போர்வீரர் சென்றனர். எனவே, அந்தச் சமாதான காலத்தில் யாரேனும் யுத்தம் புரிய ஆசைப்படுவார்களானுல், கியூபாதான் அவருக்கு ஏற்ற இடமாயிருந்தது.

இதையறிந்து வின்ஸ்டன் சில சிபார்சுக் கடிதங்களுடன் இங்கிலாந்தைவிட்டு 1895, நவம்பரில் புறப்பட்டுவிட்டார். அவருடன் அவரது நண்பர் ரெஜினுல்ட் பார்ன்ஸ் என்பவரும் இதே முயற்சியுடன் போயிருந்தார். சர்ச்சில் அங்கே யுத்தம் எப்படி நடக்கிறதென்பதை நேரில் கண்டார். ஆனுல் யுத்த முறைகள் எதையும் அவர் அங்கே தெரிந்துகொண்டார் எனச் சொல்ல முடியாது. அந்த அநுபவம் இந்தியாவில்தான் அவருக்குக் கிடைத்தது!

நான்காவது ஹஸ்ஸார் படை இந்தியாவுக்குப் புறப்படுவதற்கு முன்னுல், சர்ச்சில் போலோ விளையாடிக் கொண்டு உல்லாசமாகக் காலங்கழித்து வந்தார். அத்தகைய சந்தோஷ வாழ்க்கையைப் பற்றி அவரே பின்வருமாறு வருணித்திருக்கிருர்:

'பொதுவாக இங்கிலாந்தைச் சிற்சில பெரிய குடும்பங்களே பல நூற்றுண்டுகளாக ஆட்சிபுரிந்து வந்திருக்கின்றன. எல்லாக் குடும்பங்களும் ஒன்ருேடொன்று பின்னிக்கொண்டுதான் இருக்கின்றன. எங்கு பார்த்தாலும் நண்பர்களும் உறவினரும் தென்படுவார்கள். சமூகத்திலே முக்கியஸ்தர்களாய் விளங்குபவர்கள் பார்லிமெண்டிலும் முக்கியமான பேர்வழிகளாகவே விளங்குவார்கள். இப்படிப் பார்லிமெண்டிலும் சமூகத்திலும்

சிறந்து விளங்கிய ஒரு குடும்பத்தில்தான் நான் வளர்ந்தேன்.'

வின்ஸ்டன் சர்ச்சில் இந்தியாவுக்குப் புறப்படு முன் ஒரு வேடிக்கையான சம்பவம் நடந்தது. அப்போதிருந்த வேல்ஸ் இளவரசருக்குச் சிலர் விருந்தளிக்க ஏற்பாடு செய்திருந்தார்கள். அவ்விருந்துக்குச் சர்ச்சிலும் அழைக்கப்பட்டிருந்தார். சர்ச்சில் குறிப்பிட்ட நேரத்தில் போய்ச் சேர்ந்துவிடவேண்டும் என்பதை அவ்வளவு கண்டிப்பாக அனுஷ்டிக்கிறவரல்லர். அவர் மட்டும் குறித்த நேரத்தில் வரவில்லை. வேல்ஸ் இளவரசரும் மற்றவர்களும் கூடிவிட்டனர். ஆகையால் விருந்தளித்தவர்கள் சில நிமிஷங்கள் காத்திருந்த பின்னர், விருந்தை ஆரம்பிக்குமாறு வேல்ஸ் இளவரசரை வேண்டிக்கொண்டனர். ஆனல், அப்போது அங்கே மொத்தத்தில் பதின்மூன்று பேரே வந்திருந்தனர். 13 - என்பது துரதிர்ஷ்டம் வாய்ந்த எண் என்று கருதி, வேல்ஸ் இளவரசர், 14-ஆவது பேர்வழியாகிய வின்ஸ்டன் வரும் வரையில் இருபது நிமிஷ நேரம் காத்திருந்தார். சர்ச்சில் வந்ததும், இளவரசர், 'ஏன், உங்களுக்கு ராணுவத்திலே குறிப்பிட்ட நேரத்தில் காலதாமதம் செய்யாமல் எதையும் செய்யவேண்டு மென்று கற்றுத் தரவில்லையா?' என்று கேட்டார். ஆனல் வின்ஸ்டன் இளவரசரைத் தமது பேச்சு சாமர்த்தியத்தால் வசீகரப்படுத்திச் சமாதானப்படுத்திவிட்டார். சிறிது நேரத்தில் இருவரும் அளவளாவிப் பேசிக்கொண்டிருந்தனர்.

சர்ச்சில் பெங்களூரில் இருக்கும்போது, 'போலோ' விளையாடுவதும், வாசிப்பதுமே அவருக்குப் பொழுது போக்காயிருந்தன. இலக்கியப் புத்தகங்களை அவர் படிக்க

ஆரம்பித்தது இந்தியாவிற்கு வந்திருந்த சமயத்தில்தான். பகல் நேரத்தில் அவருக்கு நிறைய அவகாச மிருந்தது. மற்றவர்கள் தூங்குவார்கள், அல்லது சீட்டு விளையாடு வார்கள். வின்ஸ்டன் அந்தச் சமயத்தில் மெக்காலே, கிப்பன், மால்தஸ், டார்வின் ஆகியோர் எழுதிய நூல்களை யெல்லாம் வாசிப்பது வழக்கம்.

இருந்தபோதிலும், சர்ச்சிலுடைய மூல நோக்கம் யுத்தகளத்திற்குப் போகவேண்டும் என்பதுதான். விரை வில் அவர் விரும்பியபடியே ஒரு சந்தர்ப்பமும் கிடைத்தது. அவர் விடுமுறை வாங்கிக்கொண்டு இங்கிலாந்தில் இருந்த சமயத்தில், இந்தியாவின் எல்லைப்புறத்திலிருந்த பட்டாணி யர் கலகம் செய்தார்கள். ஸர் பிண்டன் பிளட் என்பவர், மூன்று சைனியங்களை வைத்துக்கொண்டு பட்டாணியரை அடக்கி அவர்களுக்குத் தக்க பாடம் கற்பித்துக்கொண் டிருந்தார். வின்ஸ்டன் அந்தப் படைத் தலைவருக்குத் தந்தியனுப்பி, தம்மையும் அவருடைய படையில் சேர்த்துக் கொள்ளவேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். இதற்காக லண்டனிலிருந்த முக்கியஸ்தர்களின் உதவியையும் நாடி னார். பிறகு, இந்தியாவுக்குத் திடீரெனப் புறப்பட்டார்.

பம்பாய் வந்து சேர்ந்ததும், அவருக்கு ஒரு தந்தி வந்து காத்துக்கொண்டிருந்தது. எல்லைப்புறத்திலிருந்த அந்த ஜெனரல் அனுப்பிய தந்திதான் அது : 'ரொம்ப சிரமம், எந்த உத்தியோகமும் காலியாக இல்லை. பத்திரிகை நிருப ராக வந்துவிடுங்கள். நான் 'பி.பி'யில் சேர்க்க முயலு கிறேன்.'

அலகாபாத்தில் நடந்துவரும் 'பயனீர்' பத்திரிகை வின்ஸ்டன் சர்ச்சிலை ஒரு நிருபராக எடுத்துக்கொண்டது.

சர்ச்சிலுடைய தாயார், லண்டனிலுள்ள 'டேய்லி டேலி கிராப்' பத்திரிகையில் சர்ச்சிலுடைய கட்டுரைகளை எடுத்துக்கொள்வதற்கு ஏற்பாடு செய்திருந்தார். இப்படியாக ஒரு பத்திரிகைக்காரருக்கு வேண்டிய அம்சங்கள் பொருந்தி, யுத்த முனைக்குச் சென்றார் வின்ஸ்டன்.

எப்போதுமே அரசியல்வாதிகள் ராணுவத்தாரின் விருப்பப்படி நடக்க விட்டுவைப்பதே கிடையாது. சமாதானப் பேச்சு மூலமாக யுத்தத்தை அவர்கள் தவிர்த்துவிடப் பிரயத்தனப்படுவார்கள். ஆனால், இந்தத் தடவை பட்டாணியர்கள் இணங்கவேயில்லை. இரத்தம் சிந்தத்தான் வேண்டியிருந்தது.

பட்டாணியரில் இன்றைக்குக்கூட ஒவ்வொருவரும் ஒரு சிப்பாய்தான். போர்க்குணமும் இரத்த வெறியும் கொண்டவர்கள் என்று இவர்களைப் பற்றிச் சொல்லுவது வழக்கம். 19-ஆம் நூற்றாண்டின் கடைசியில் பிரிட்டிஷ் சர்க்காரிடம் அவர்களுக்கு அதிகத் துவேஷம் உண்டாயிற்று. வெள்ளையர்களைக் கண்டாலே அவர்களுக்கு வெறுப்பு.

1,200 பிரிட்டிஷ் சிப்பாய்கள், மூன்று பிரிவுகளாய்ப் பட்டாணியருடைய பிரதேசத்துக்குள் புகுந்து, பட்டாணியரைத் தாக்கினார்கள். வின்ஸ்டன் சர்ச்சில் இரண்டாவது படையுடன் சேர்ந்து வெகுதூரம் சென்று ஒரு கிராமத்தை அடைந்தார். அந்தப் படையில் 5 - பிரிட்டிஷ் அதிகாரிகளும் 85-சீக்கியரும் இருந்தார்கள். இவர்கள் போய்ச் சேர்ந்த கிராமம் காலியாயிருந்தது. சிறிது நேரத்தில் ஒரு காப்டென் வந்து உடனே அந்தச் சைனியம் அக் கிராமத்தை விட்டுப் பின்வாங்கவேண்டுமென்று கர்னல் உத்தரவிட்டிருப்பதாய்த் தெரிவித்தார்.

பத்து நிமிஷம் ஆயிற்று. அந்தப் படை பின்வாங்க ஆரம்பித்ததும், மலைவாசிகள் புற்றீசல் போல் மலையிலிருந்து வந்து, கீழே அக்கிராமத்துக்குள் புகுந்த பிரிட்டிஷ் சைனியத்தைத் தாக்கினர். வின்ஸ்டனும் அவருடைய சகாக்களும் கீழே தரையில் படுத்தவண்ணமா யிருந்துகொண்டே தாக்கினர். ஆயினும் பிரிட்டிஷாருக்குள் இருவர் மாண்டனர். மூன்று பேருக்குப் படுகாயம். பின்னர் பிரிட்டிஷ் சைனியம் வெகு சாமர்த்தியமாகப் பின்வாங்கிற்று. அப்பால், வேறு உபாயங்களால் பிரிட்டிஷ் சைனியங்கள் மலைவாசிகளைச் சமாளித்து அடக்கின. இதைப்பற்றி சர்ச்சில் கூறியுள்ளதாவது:

'நாங்கள் வெகு ஒழுங்காகக் கிராமத்திலிருந்து கிராமம் சென்று முன்னேறிக்கொண்டே போனோம். வீடுகளையெல்லாம் நாசப்படுத்தி, சுவர்களை யெல்லாம் இடித்து, கோபுரங்களைத் தரைமட்டமாக்கி, மரங்களை வெட்டிப் பாழ்படுத்தி, பயிர் பச்சைகளை யெல்லாம் நாசப்படுத்தினோம். மலைவாசிகள் மலைமீது உட்கார்ந்துகொண்டே இவைகளையெல்லாம் கவனித்துக்கொண்டிருந்தனர். ஆனால் சமவெளிப் பாங்கான கிராமங்களில்தான் எங்களால் இப்படிச் செய்ய முடிந்தது. மலைப்பிரதேசங்களிலுள்ள கிராமங்களில் எங்களால் இவ்வாறு செய்ய முடியவில்லை. ஒவ்வொரு கிராமத்திலும் நாங்கள் 2, 3 பிரிட்டிஷ் அதிகாரிகளையும், 20 இந்தியச் சிப்பாய்களையும் இழந்தோம். இவ்வளவு பேர்களை யிழந்து ஒரு கிராமத்தைப் பிடிப்பதில் ஏதேனும் லாபமுண்டா என்க் கேட்கலாம். இதைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. மொத்தத்தில் இரண்டு வாரங்களுக்குப் பிறகு பள்ளத்

தாக்கு வெறும் பாலைவனமாக ஆகிவிட்டது. கௌரவத்தைக் காப்பாற்றிக் கொண்டதாக ஒரு திருப்தி ஏற்பட்டது.'

'சுவர்க்கமாயிருந்தாலும் அடிமைத்தனம் கூடாது; நரகமாயினும் அங்கே ஆட்சி நடத்தவேண்டும்' என்ற கொள்கை படைத்தவர் வின்ஸ்டன். அதனால்தான் அவர் இந்தியாவுக்கு வந்தார். ஊழியம் செய்து சகல கஷ்ட நஷ்டங்களையும் அநுபவித்துத் தேர்ச்சிபெற்ற பின்பே அதிகாரவர்க்கத் தலைமை ஸ்தானம் பெறவேண்டுமென்ற உண்மையை அவர் நம்பியவர். அவருடைய நாவலில் எழுதியிருக்கும் இவ்விஷயம் கவனிக்கத் தக்கது :

'வாழ்க்கையின் முன்னணிக்கு வரவேண்டி விரும்பினால், பிறருடைய உல்லாசத்தில் ஈடுபடாமல் உழைக்க வேண்டும். வீரத்தில் தலைசிறந்து விளங்கவேண்டுமானால், உயிரைப் பொருட்படுத்தக் கூடாது. புஜபல பராக்கிரமத்திலும், வலிமையிலும், வனப்பிலும், ஆரோக்கியத்திலும், திடகாத்திரத்திலும், நன்னடத்தையிலும் கதிரவன் போன்ற பிரகாசிக்கவேண்டுமானால், வாழ்க்கையில் ஏற்படும் கவர்ச்சிகளை விரும்பலாகாது. இத்தகைய லட்சியங்களே பிற்காலத்தில் எல்லாவித சம்பத்தையும் அளிக்கவல்லவை. தீய செயல்களின் விளைவு துன்பந்தான்.'

தம் வாழ்க்கையிலும் வின்ஸ்டன் மேற்கூறிய முறைகளைக் கையாண்டு வந்தார்.

அவரைப் போன்ற பிரிட்டிஷ் ராணுவ வீரர்கள் பயிற்சிபெறத் தகுந்த இடமாக இந்தியா விளங்கியது.

நீலகிரியும் பெங்களூரும் சிறிதளவு இங்கிலாந்தைப் போன்ற சீதோஷ்ணமுடைய ஸ்தலங்களல்லவா? உதகமண்டலத்தி லிருந்தபோதுதான் வின்ஸ்டன் தமது ‘ சவ்ரோலா ’ என்ற நாவலை எழுத ஆரம்பித்தார். பின்னல் அது இங்கிலாந்தி லும் அமெரிக்காவிலும் புத்தகமாக வெளியிடப்பெற்றது.

1897-ல் நடைபெற்ற ஒரு விஷயத்தை இங்கே குறிப்பிடுவது அவசியம். அப்பொழுது விடுமுறைக்காகத் தாய்நாடு போயிருந்த காலத்தில் கிரீஸ் தேசத்துக்கும் துருக்கி தேசத்துக்கும், கிரீட் என்னும் தீவின் ஆதிக்க விஷயமாகப் போர் நடந்துகொண்டிருந்ததைக் கேள்வி யுற்று சர்ச்சிலும் அவர் நண்பர் கர்னல் அயன் ஹாமில்ட னும் போரில் கலந்துகொள்ள விரும்பினர்கள். அந்நிய நாட்டுக் கலகங்களில் சுயேச்சையாகக் கலந்துகொள்ளும் உரிமை பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கு உண்டு. கர்னல் ஹாமில்டன் கிரேக்கர் பக்கம் சேர விரும்பினர். வின்ஸ் டன் துருக்கிக்கு உதவ ஆசைப்பட்டார். ஆனல் இவர் கள் உதவியே தேவையில்லை யென்று இரு தேசங்களி லிருந்தும் பதில் வந்தது. அயன் ஹாமில்டன், வின்ஸ்டனை விட 20 வருஷம் மூத்தவர். இருவரும் கலைகளிலும், ஊக்கத்திலும், வீரத்திலும் ஒருவரை ஒருவர் ஒத்திருந் தனர். எதிர்க் கட்சிகளில் சேர்ந்து வேற்றுமை உண்டாகி விடாதபடி, தெய்வ சங்கற்பமாக இவர்கள் உதவி தேவை யில்லை யென்று தெரிந்ததும், இருவரும் மனமிளகி, எக் காலத்திலும் இருவரும் ஆப்த நண்பர்களா யிருக்கவேண்டு மென்று பிரமாணம் செய்துகொண்டார்கள். இந்திய வடமேற்கு எல்லையிலும், பிறகு தென் ஆப்பிரிக்காவிலும், துருக்கியைச் சேர்ந்த டார்டனெல்ஸ் பிரதேசத்திலும்

இந்தப் பிரமாணத்தின் உண்மையை இருவரும் பிற்காலத்தில் அநுபவத்தில் காட்டிக்கொண்டிருக்கிறார்கள்.

இந்தியாவில் சர்ச்சில் உயிரையும் மதிக்காது காட்டிய சாமர்த்தியங்கள் சீமையில் உத்தியோக தோரணையில் போற்றப்பட்டன. அவர் ஓர் அதிகாரியாக நியமிக்கப்பட்டார். இந்தியக் காலாட் படைக்கு ஒரு பிரிட்டிஷ் குதிரை வீரர் தலைவராக நியமிக்கப்பட்டது இதுவே முதல் தடவை. ஆபீஸர் உத்தியோகம் கிடைத்துவிட்டதே யென்று அவர் பத்திரிகை நிருபர் என்ற முறையில் தம் ஊக்கத்தைக் குறைக்கவில்லை. எல்லைப்புறப் பிரஜைகளின் உதவியைக் கொண்டும், இன்னும் மற்ற சாதகங்களைப் பயன்படுத்திக்கொண்டும், பிறருடைய விஷயங்கள் செல்வதற்கு முன்னதாகத் தம் கட்டுரைகள் பத்திரிகாலயங்களை அடையும்படி செய்துவந்தார். இதைக் கண்டு எல்லோரும் வியந்தார்கள்.

அவர் எடுத்துக்கொண்டு வந்த லீவும் முடிந்தது. பெங்களூருக்கு வந்து படையைச் சேர்ந்தார். எல்லைப் புறப் போரைப் பற்றி ஒரு புத்தகம் எழுதினார். மறுபடியும் எல்லைப்புறத்தில் வேறு குழப்பத்தினால் போர் நடந்தது. அதிலும் ஈடுபட்டு மேல் அதிகாரிகளின் நன்மதிப்பைப் பெற்றார். பிறகு இங்கிலாந்துக்குப் பிரயாணமானார்.

அச்சமயம் ஆப்பிரிக்காவில் ஒரு போர் நடந்தது. மகம்மதியத் தலைவரான மகதியின் பிரதேசத்துக்குள் பிரிட்டிஷ் படைகள் படையெடுத்துச் செல்ல எத்தனித்துக் கொண்டிருந்தன. இந்த அரிய சமயத்தை நமது வின்ஸ்டன் கைவிடுவாரா? ஆனால், இந்தக் கடும்போரில் வின்ஸ்டனைப் போன்ற இளைஞர்களுக்கு இடம் கிடைக்காது.

இங்கிலாந்திலுள்ள ராணுவ அதிகாரிகள் வின்ஸ்டனை மெச்சியிருந்தார்களே யானாலும், அவர் எல்லைப்புறப் போரைப்பற்றி எழுதிய 'மாலகந்து படையெடுப்பு' என்ற புத்தகத்தில் அவர் கொடுத்திருக்கும் சுய அபிப்பிராயங் களின் விளைவாக, மேல் அதிகாரிகளின் வெறுப்பையும், கீழ் உத்தியோகஸ்தர்களின் பொறாமையையும் அடைந்தார். சர்ச்சில் சுயநலத்தையும் தற்பெருமையையும் விரும்பும் தலைக் கொழுப்புடையவர் என்றும், பிறர் மெச்சுவதற்காகவே பாடுபடுபவர் என்றும், பதக்கங்கள் பெறுவதற்காக வேட்டையாடும் சிறுவர் என்றும், எதொன்றிலும் நிதான மில்லாதவர் என்றும், பெரிய அவசரக் குடுக்கை என்றும் பலர் எண்ணினார்கள். மேலும் அவர் எந்தப் படையை இப்பொழுது சேரவேண்டு மென்று விரும்பினாரோ, அந்தப் படையின் சேனாதிபதியான லார்ட் கிச்னர் நமது வின்ஸ் டன்மீது காரணமில்லாமல் வெறுப்புக் கொண்டவர். நிருபத் தொழிலும் ராணுவத் தொழிலும் சேர்ந்தாற்போல் வின்ஸ்டனிடம் அமைந்திருப்பதை அவர் வெறுத்தார். எனவே, வின்ஸ்டனைத் தம் படையில் சேர்த்துக்கொள்ள மறுத்துவிட்டார். சர்ச்சில் தம் தாயாரின் உதவியைக் கொண்டும், பிரபல நண்பர்களின் உதவியைக் கொண்டும், எவ்வளவோ முயற்சித்தும் லார்ட் கிச்னரை அசைக்க முடியவில்லை. ஆனால் அதிர்ஷ்ட தேவியை யாரால் தடை செய்ய முடியும்? அச்சமயம் பிரதம மந்திரியாயிருந்த லார்ட் ஸாலிஸ்பரி என்பவர், வின்ஸ்டனின் 'மாலகந்த்' புத்தகத் தைப் படித்துவிட்டு, அவரை வரவழைத்து, மெச்சி, தம் முடைய உதவி எந்த விதத்தில் அவருக்குத் தேவை என்று கேட்டார். எகிப்தில் நடக்கவிருந்த யுத்தத்தில் நியமனம்

வேண்டுமென்று கேட்டார் வின்ஸ்டன். பிரதம மந்திரியின் முயற்சியும் வீணாயிற்று. எந்தப் படையிலும் காலியில்லை யென்றும், ஏற்கனவே பல தேர்ச்சிபெற்ற வீரர்கள் இட மில்லாமல் காத்துக்கொண்டிருந்தார்கள் என்றும் கிச்னர் தெரிவித்துவிட்டார். ஆனால், கிச்னருக்குக் கீழ்ப்படியாக, 'அட்ஜுடன்ட் ஜெனரல்' பதவியிலிருந்த ஸர் எவலின் உட் என்பவருக்கு வின்ஸ்டன்பேரில் ஒரு பிரேமை. அவர் கீழிருந்த 21-ஆவது லான்ஸர் படையின்மீது கிச்ன ருக்கு அதிகாரம் கிடையாது. வின்ஸ்டனுடைய சாமர்த்தி யத்திலும் சமயோசித யோசனையிலும் அவருக்கு நல்ல நம்பிக்கையுண்டு. ஆகவே, போக வர சொந்தத்தில்தான் செலவு செய்துகொள்ளவேண்டு மென்றும், யுத்தத்தில் காயப்பட்டாலோ, அல்லது கொல்லப்பட்டாலோ, ராணுவ நிதியிலிருந்து யாதொரு உதவியையும் எதிர்பார்க்கக் கூடா தென்றும் நிபந்தனைகள் ஏற்படுத்தி, வின்ஸ்டனைத் துருப்பு களுக்குப் பின்னால் வரும் ஒரு லான்ஸராக நியமித்தார். கிச்னர் பார்த்துத் திகைக்கும்படி மிலிடெரி கெஜட்டிலும் நியமனம் பிரசுரம் செய்யப்பட்டது. இப்படி முட்டுக் கட்டைகளைத் தகர்த்தெறிந்த வெற்றியே வின்ஸ்டனுக்கு மிகுந்த உற்சாக மூட்டியது.

'மார்னிங் போஸ்ட்' என்ற பத்திரிகைக்கு யுத்த நிருபராகவும் நியமனம் பெற்றுக்கொண்டு, போர்க்களத் துக்கு அவர் புறப்பட்டார். 1898-ஆம் வருஷம், ஆகஸ்டு மாதம் முதல் தேதி கெய்ரோவை யடைந்தார். தமக்குப் பிடிக்காத பேர்வழியை ராணுவத்தில் சேர்த்துக்கொண்டத னால் கிச்னருக்கு ஏற்பட்ட கோபச் சின்னங்களை வின்ஸ் டன் சிறிதும் பொருட்படுத்தவில்லை.

படை புறப்பட்டது. அஸ்வான் என்ற இடத்தில் முக்கிய வேலை யிருந்ததால், சர்ச்சில் மற்றவர்களை அனுப்பிவிட்டுத் தாம் மட்டும் அங்கே தங்கியிருந்து மறுநாள் புறப்பட்டார். மாலை வேளை. படை தங்கியிருக்குமிடம் தெரியவில்லை. அது 15 மைல்களுக்கு அப்பால்தான் இருந்தது. ஆனால் எங்கும் ஒரே பாலைவனம். சூரியனும் மறைந்தான். எந்தத் திக்கை நோக்கிச் செல்வது? உள்ளூர்ப் பாஷையும் தெரியாது. இருட்டியும் விட்டது. வழி தெரியவில்லை. எங்கும் அந்தகாரம். குதிரைக்கும் அவருக்கும் நீர்வேட்கை. தண்ணீர் எது? குதிரையை விட்டிறங்கி, தம் கையில் குதிரையைக் கட்டிக்கொண்டு, கீழே படுத்துத் தூங்க எத்தனித்தார். நாவும் வரண்டு, கவலையும் மேற்கொண்டால் நித்திரை எது? வெள்ளி முளைத்தது. சவாரியை மீண்டும் ஆரம்பித்தார். இரண்டு மணி நேரத்தில் நைல் நதியை அடைந்து நீர் அருந்தினர். குதிரைக்கும் களைப்புத் தீர்ந்தது. சவாரி தொடர்ந்தது. ஆனால் சைனியத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அருகாமையிலுள்ள ஒரு கிராமத்தை யடைந்தார். அரபி பாஷையில் தமக்குத் தெரிந்திருந்த 'பக்ஷிஷ்' (இனம்) என்ற ஒரே வார்த்தையைக் கொண்டும், கை சமிக்ஞைகளைக் கொண்டும் சைனியம் போன திக்கை அறிந்து கொண்டு, கொஞ்சம் பாலும் பேரீச்சம்பழமும் வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, அவர் அங்கிருந்து கிளம்பினர். மாலையில் தம் லான்ஸர் படையை அடைந்தார். துரதிர்ஷ்டவசத்தினலோ, அல்லது முன்னே செல்வதற்குத் தகுதியற்றவர் என்ற எண்ணத்தினலோ, அல்லது அவரை அவமதிக்கவேண்டுமென்ற தீர்மானத்தினலோ, நொண்டிக் குதிரைகளையும் சீக்காளிகளையும் நடத்திக்கொண்டு

போகும் பொறுப்பு அவர் தலையில் விழுந்தது. மணிக்கு ஒன்றேகால் மைல் விதமாக ஊர்ந்து சென்று, கெய்ரோ வில் புறப்பட்ட மூன்ருவது வாரக் கடைசியில், அவர் போர்முனையை அடைந்தார்.

லான்ஸர் படையை ஓர் இடத்தில் இருத்திவிட்டு மற் றப் படைகள் முன்னேறின. பாம்பும், தேளும், இன் னும் மற்ற விநோதமான ஜந்துக்களும் துன்புறுத்தியதால் எல்லோரும் வேறிடத்திற்குப் போய் அன்றிரவைக் கழிக்கலானுர்கள். இரவில் இரண்டு டர்விஷ்காரர்கள் காணப்பட்டார்கள். இவர்கள் விரோதி வகுப்பைச் சேர்ந்தவர்கள். வின்ஸ்டன் அவர்களைப் பார்த்தது அதுவே முதல்முறை. அவர் அவர்களை விரோதிகள் சார்பாய் வந்த ஒற்றர்கள் என்று நினைத்து, அவர்களைக் கைது செய் வித்தார். விசாரித்ததில் அவர்கள் பிரிட்டிஷ் சார்பாக உளவு தெரிவிப்பவர்களென்று தெரியவந்தது. அதனல் வின்ஸ்டன் வெட்கமடைந்தார். எங்கே மற்ற நிருபர்கள் இதைப் பத்திரிகைகளுக்குத் தெரிவித்துத் தம்மை ஏளனஞ் செய்துவிடுவார்களோ என்று பயந்து, அவர்களை அவ்வாறு எழுதாமலிருக்கும்படியும் கேட்டுக்கொண்டார்.

பொழுது புலர்ந்தது. 2-9-1898-ல் அம்டுர்மான் யுத்தம் ஆரம்பித்தது. 3,000 எதிரிகளை 3,00 பேர் முறியடிக்க வேண் டும். வின்ஸ்டனுக்கு அரிய சமயம் வாய்த்தது. பேரும் கீர்த் தியும் கிடைத்தது. விரோதிகள் முறியடிக்கப்பட்டனர்! கிச்னரும் அம்டுர்மான் நகரைக் கைப்பற்றி அதனுள் பிரவேசித்தார். வெகு காலமாகச் சிறையிலிருந்துவந்த பிரிட்டிஷ் ஆபீஸர்களை விடுவித்தார்கள். லான்ஸர்களின் வீரதீரச் செயல்களைக் கண்டு கிச்னரும் ஆச்சரியப்பட்டார்.

யுத்தம் முடிந்ததும் இங்கிலாந்திலிருந்து வந்த உதவிப் படைகள் கலைந்தன. அந்த வருஷத்திலேயே வின்ஸ் டன் இங்கிலாந்துக்குத் திரும்பினார்.

தம் தந்தையின் மறைவினால் காமன்ஸ் சபையில் ஏற் பட்ட காலி ஸ்தானத்தைக் கைப்பற்றவேண்டிய அவா அவரைத் தூண்டிற்று. கன்ஸர்வேடிவ் கட்சியின் காரியா லயத்திற்குச் சென்று உரிய பிரமுகர்களிடம் தம் விருப்பத் தைத் தெரிவித்தார். அந்தச் சமயம் பிரான்ஸ் தேசத்துக் கும் இங்கிலாந்துக்கும் நைல் நதிப் பிரதேச விஷயமாகச் சில மனஸ்தாபங்கள் ஏற்பட்டு, பிரெஞ்சுக்காரர்கள் நைல் நதியின் சில பாகங்களை ஆக்கிரமித்துக் கொண்டார்கள். இது சம்பந்தமாய் வின்ஸ்டன் ஓர் அரசியல் சொற்பொழி வாற்றினார். தம் கட்சிக்கு ஓர் இளம் சிங்கம் தலைமை வகிக்கப்போவதை கன்ஸர்வேடிவ் அங்கத்தினர் உணர்ந் தனர்.

'டேய்லி மேயில்' என்ற பத்திரிகையில் இவரைப் பற்றி முதன்முதலாக ஒரு கட்டுரை பிரசுரமாயிருந்தது. ஐரோப் பாவிலேயே வின்ஸ்டனைவிட வயதில் சிறிய அரசியல்வாதி கிடையாதென்றும், தாம் அடைய விரும்பும் பதவியைச் சேருவதற்காக வேண்டிய திட்டங்களைத் தாமே வகுத்து எந்த விதத்திலும் தம் இலட்சியத்தையும் விருப்பத்தையும் பூர்த்தி செய்துகொள்ளும் ஊக்கமும் ஆற்றலும் உடையவர் என்றும், ஆனால் அவர் முன்னேறும் வேகத்தைக் கவனித் தால் அவரது 30-ஆவது வயதிலாவது சட்டசபையில் உட் கார அருகராவாரா, அல்லது 40-ஆவது வயதிலாவது இங்கிலாந்தின் நிர்வாக சபையில் அவருக்குத் தக்க ஸ்தானம் கிடைக்குமா என்பது சந்தேகம் என்றும்

அந்தப் பத்திரிகை தெரிவித்தது. அந்தச் சந்தேகத்தை நிவர்த்திக்க அவர் தம்முடைய 30-ஆவது வயதில் பார்லிமெண்டில் அங்கத்தினரானார். தம் 40-ஆவது வயதில் இங்கிலாந்தின் முதல் யுத்த சபையில் ஓர் அங்கத்தினரானார். உலகம் முழுவதும் அவரைப் புகழும் சந்தர்ப்பம் ஏற்பட்டது. ஆன்ட்வெர்ப், டார்டெனெல்ஸ் சம்பந்தமாக அவரைப் போற்றாதவர் கிடையாது.

அவர் கடைசியாக ஒரு முறை இந்தியாவுக்கு வரவேண்டியிருந்ததை இங்கே குறிப்பிடுவது அவசியம். அது ஒரு 'போலோ' பந்தயத்தைப் பொறுத்தது. அவர் படையினர் மூன்று வருஷங்களாக அகில இந்தியப் 'போலோ' பந்தயத்தில் கலந்து ஷீல்டு வாங்க முயற்சித்தார்கள். 'எவ்விதத்திலும் இந்தத் தடவை நாம் வெற்றி பெற வேண்டியதுதான்' என்று வைராக்கியம் செய்து அதைப் பூர்த்தி செய்வதற்காகவே வின்ஸ்டன் இந்தியாவுக்கு வந்திருந்தார். விளையாடித் தாமே 3 கோல்களை ஜெயித்து, ஷீல்டையும் வாங்கினார்.

முதன் முதல் அவர் இந்தியாவுக்கு வந்த சமயத்திலும் ஒரு முக்கிய சம்பவம் ஏற்பட்டது. கப்பலிலிருந்து இறங்கிப் படகில் ஏறி அவர் நண்பருடன் கரையை அடையும் தருணம், அலையின் வேகத்தால் படகு நாலைந்து அடி உயரம் ஏற்றி இறக்கி உலுக்கப்பட்டது. அச்சமயம் வின்ஸ்டன், கரையிலிருந்த வேலிக் குழாய் ஒன்றைப் பிடித்து வெளியேறும்போது அவரது வலது தோள்பட்டையின் எலும்பு பிசகி, எக்காலத்திலும் சிகிச்சைக்குக் கட்டுப்படாமல் போய் விட்டது. அவருடைய வலது தோளில் இப்பொழுதும் ஒரு தோல் வார்ப்பட்டை பொருத்தப்பட்டிருக்கும். இப்பேர்ப்

பட்ட கஷ்ட நிலைமையும் அவருடைய 'போலோ' பந்த யத்தின் குறுக்கே நிற்கவில்லை. விளையாடியபோது அடிக் கடி மிகவும் கஷ்டப்பட்டுத் தோள்பட்டையைச் சரிப்படுத் திக்கொண்டார்.

'போலோ' வெற்றியின் பிறகு தம் ராணுவப் பதவியை ராஜீநாமா செய்துவிட்டு, ஸூடானில் நடந்த படையெடுப் பைப் பற்றித் தாம் எழுதிய இதழ்களை எடுத்துக்கொண்டு கெய்ரோவுக்குப் போனார். அங்கே பெர்ஸி கிரார்டு என்பவர் பாலைவன ரயில்வே அதிகாரியாய் இருந்தார். காரண மில்லாமல் கிச்னரால் வெறுக்கப்பட்டவர்களில் அவரும் ஒருவர். அவர் உதவியால் தம் புத்தகத்திற்கு வேண்டிய சில முக்கிய விஷயங்களைக் கிரகித்துக்கொண்டு, வின்ஸ்டன் இங்கிலாந்துக்குத் திரும்பி, ஸூடான் படையெழுச்சியைப் பற்றிய 'தி ரிவர் வார்' (ஆற்று யுத்தம்) என்னும் புத்த கத்தை வெளியிட்டார். 1899-ல் வெளிவந்த இந்தப் புத்த கம் ஆறு மாதத்தில் மறுபடியும் பதிப்பிக்கப்பெற்று, பத்தி ரிகை உலகின் நன்மதிப்பையும், உலகப் பிரமுகர்களின் ஆசியையும் பெற்றது. ஆயினும், அபிப்பிராய பேதம் கொண்டவர்களும் சிலர் இருந்தனர். கிச்னரின் கொடிய கொள்கைகளைத் தாக்கிச் சர்ச்சில் சில இடங்களில் எழுதி யிருக்கிறார். அவர் யுத்தத்தில் படுகாயப்பட்ட எதிரிகளிடம் இரக்கமென்பதே காட்டாத கொடியர் என்று எழுதியிருக் கிறார். மகமதிய மதத் தலைவரான மகதியின் சமாதியைக் கூடப் பார்க்கச் சகியாததனால், கிச்னர் அந்தச் சமாதியைக் கூட இடித்துத் தகர்த்தெறியும்படி உத்தரவிட்டாராம். பிரே தத்தை எடுத்தபின், அதன் துண்டித்த தலை கெய்ரோ போய்ச் சேரும்வரை கைக்குக் கை மாற்றிக்கொண்டு

போகப்பட்டதாம். கிச்னரின் வீரத்தைப்பற்றி மேற்கூறிய வாறு வின்ஸ்டன் தம் புத்தகத்தில் எழுதியிருக்கிறார். ஸூடான் பிரதேசத்தை இந்த முறையில் ஆள்வதென்றால் கிச்னர் வெற்றிபெறாமல் இருந்திருப்பதே சிலாக்கியமென்று அவர் அபிப்பிராயப்பட்டார். பிற்காலத்தில், காமன்ஸ் சபை யிலும் அவர் இந்தத் தீச் செயல்களை எடுத்துக் கூறி ஆவேசத் துடன் கண்டித்திருக்கிறார்.

1899-ல் ஓல்டுஹாம் தொகுதியின் காமன்ஸ் சபை அங்கத்தினர் இருவரில் ஒருவர் இறந்தார். அந்த ஸ்தானத்துக்கு வின்ஸ்டன் பலமாகப் போட்டியிடுவ தென்று தீர்மானித்தார். முதலாவது தேர்தல் பிரசாரத் தின்போது, லிபரல் கட்சியின் சார்பாகத் தம்மோடு போட்டியிட்ட வால்டர் ரன்சிமன் என்பவர் தம்மைப் பற்றிக் கேவலமாகப் பேசியதை அறிந்து அவரைத் தாக்கி னர். ஆப்பிரிக்காவில் அம்டுர்மான் போர்க்களத்தில் தாம் நாட்டின் நன்மைக்காகப் போர் புரிந்துகொண்டிருக் கையில், சுயநலம் ஒன்றையே கருதித் தேர்தலில் போட்டி யிடும் அரிய தொண்டில் ரன்சிமன் உழைத்துவந்தா ரென் றும், போர்முனையில் பிரிட்டன் வெற்றி பெற்றபோது அவர் தேர்தலில் படுதோல்வி யுற்றார் என்றும் வேடிக்கையாகப் பேசி ஜனங்களுக்கு உண்மையை விளக்கினர். தேர்தல் தினம் வந்தது. பலத்த போட்டி. ரன்சிமன் வெற்றி பெற்றார். 1200 ஓட்டுகள் வித்தியாசத்தில் வின்ஸ்டன் தோற்றார். இந்தத் தோல்வியினால் ஜனங்கள் வருந்தினர். வின்ஸ்டன் மட்டும் மனந் தளரவில்லை. எப்படியும் மறு முறை இதே தொகுதிக்கு நின்று எதிர் அபேட்சகர்களை முறியடித்துவிடவேண்டு மென்று சபதம் செய்துகொண்

டார். தோல்வியின் பிறகு மிகவும் ஊக்கமாக வேலை செய்து, ஓல்டுஹாம் தொகுதியின் ஓட்டர்களுக்குப் பாடு பட்டு, பிற்கால உதவிக்கு வேண்டிய அஸ்திவாரத்தைப் பலமாகப் போட்டார். அவருக்குப் பாதகமாக ஓட்டுக் கொடுத்தவர்களெல்லாம் மனம் வருந்தும்படி தம் வல்லமையைக் காண்பித்தார். இந்தச் சமயத்தில்தான் தென் ஆப்பிரிக்காவில் யுத்தம் ஆரம்பித்தது. வின்ஸ்டனும் புறப்பட்டார். அவருக்கு அப்பொழுது வயது 25 பூர்த்தியாகவில்லை. அதுவே ஓர் ஒப்பற்ற புகழ் என்றும், அதற்குச் சமானமாக நெப்போலியன் ஒருவரின் கீர்த்திதான் நிற்கும் என்றும் உலகத்தார் புகழ்ந்தார்கள்.

## 3. தென் ஆப்பிரிக்காவில் — போயர் யுத்தம்

வயிற்றுப் பசியைக்கூடக் கவனிக்காமல், தனக்கு இரைக்கும் உதவாத சர்ப்பங்களையே தேடித் திரியும் கீரிப்பிள்ளைக்குச் சமானமானவர் வின்ஸ்டன். தென் ஆப்பிரிக்காவில் யுத்தம் நடக்கையில், அவர் கேப்டவுன் துறைமுகத்தை யடைந்தார். லேடிஸ்மித் என்னுமிடத்துக்குப் போய்ச் சேரவேண்டும். போயர்கள் அந்த நகரைச் சூழ்ந்துகொள்ளுமுன் அங்கு போகவேண்டும். கேப்டவுனிலிருந்து டர்பனுக்கு கப்பலில் பிரயாணமானுர். டர்பனிலிருந்து ரயில் மார்க்கமாய் எஸ்ட்கோர்ட் என்னுமிடத்துக்குப் போய்ச் சற்று இளைப்பாறிக் கொண்டார். பொழுது புலர்ந்தது. சேனைத் தளகர்த்தர் ஏதோ ஓர் இடத்தில் முன்னேறிவர முடியாமல் தடுக்கப்பட்டிருக்கிறுர். உதவிக்கு ஒரு சிறு ரயில் வண்டி புறப்பட்டது. காப்டன் ஹால்டேன் என்பவர் தலைமை வகித்தார். வின்ஸ்டன் சர்ச்சிலையும் அவர் அழைத்துக்கொண்டு போனுர். லேடிஸ்மித்துக்கும் எஸ்ட்கோர்ட்டுக்கும் 40 மைல்தான். ஆனுல், போகும் மார்க்கமெல்லாம் போயர் வீரர்களின் குண்டுமாரியை எதிர்பார்த்துக்கொண்டே போகவேண்டும். பெரிய சம்பவம் ஒன்றும் ஏற்படாமல் லேடிஸ்மித்துக்கு எட்டு மைல் சமீபத்தில் நெருங்கிவிட்டார்கள். போயர்கள் குண்டுமாரி பொழிந்தனர். உடனே தண்டவாளத்தின் குறுக்கே போடப்பட்ட ஒரு குண்டால் தடுக்கப்பட்டு ரயில் வண்டி

யும் நின்றது. மூன்று வண்டிகள் இணை பிரிந்து அப்பால் விழுந்தன. ஒரு வண்டி பாதையில் விழுந்துவிட்டது.

இந்தப் பேராபத்தில் சிக்கிக்கொண்டு என்ன செய்வார்கள்! பத்திரிகைக்கு நிருபராக வந்த வின்ஸ்டனுக்கு என்ன அதிகாரமிருக்கிறது? உதவி புரியலாம்; அதற்கு அனுமதி வேண்டாமா? காப்டன் ஹால்டேன் அதிகாரம் கொடுத்தார். சர்ச்சில் ஆரம்பித்துவிட்டார். மற்ற வண்டிகளிலிருந்த வீரர்களை வெளியேற்றி, எதிரிகளின் மீது பதிலுக்குப் பதில் குண்டுமாரி பொழியும்படி உத்தரவிட்டார். மற்றவர்களைக் கொண்டு வழி மறித்துக்கொண்டு விழுந்து கிடக்கும் வண்டியைச் சற்று பாதைக்கு அப்புறம் தள்ளியும் போதுமான அளவுக்குச் சௌகரியம் ஏற்படாமல் போயிற்று. இனியும் காத்துக்கொண்டிருந்தால் மோசம் வந்துவிடும். ஏற்கனவே 70-நிமிஷம் தாமதித்துவிட்டனர். காயப்பட்டவர்களும் மற்றவர்களும் இஞ்சினில் அங்குமிங்கும், ஓரிடமும் காலியில்லாமல், தொத்திக்கொண்டு போனார்கள். குண்டுமாரி பொழிந்துகொண்டே மற்ற வீரர்களும் இஞ்சினைப் பின்பற்றினார்கள். ஆனால் என்ன பயன்? காரியம் மிஞ்சிவிட்டது. இஞ்சின் ஓர் ஆற்றுப் பாலத்தை அடைந்ததும் எல்லோரும் ஆற்றில் குதித்தார்கள். ஓடி ஒளிந்தவர் சிலர், பிடிபட்டுக் கைதியானவர் பலர். சிலர் குண்டுகளால் கொல்லப்பட்டனர். சர்ச்சிலோ, ஆற்றங்கரையின் ஒரு புதரில் ஒளிந்துகொண்டார். ஆனால், இந்தச் செய்கை நெருப்புக்கோழி தலையை மணலில் புதைத்துக் கொண்டு உடம்பும் மறைந்து விட்டதென்று நினைப்பது போல்தான். குண்டுகள் வந்து விழுந்தன. எதிரிகளில் இருவர் குண்டுமாரி பொழிந்துகொண்டே கிட்டினர். சர்ச்சில்

சரணடைந்தார். கைது செய்யப்பட்டார். காயமடைந்தவர் களைச் சுமந்துகொண்டு ஓடி மறைந்த இஞ்சினில் அவர் கைத் துப்பாக்கியையும் விட்டுவிட்டதால் வேறு மார்க்க மில்லை. மற்றக் கைதிகளுடன் ஆட்டு மந்தைக் கூட்டத்தில் தாமும் ஓர் ஆடுபோல் சென்றார். 6-மணி நேரம் கொடும் பசிக்கும் தாகத்துக்குமிடையே அவர் நடத்திச் செல்லப்பட் டார். அன்றிரவு மாட்டிறைச்சி கிடைத்தது. குளிர்காயக் கொஞ்சம் நெருப்பும் கிடைத்தது. கொஞ்சம் மூளை வேலை செய்தது. மறுதினம் காலையில், எப்படித் தப்பி ஓடலா மென்று ஆலோசனை செய்தார். தங்கியிருந்த பொட்டலில் படுக்கைக்கென்று பரப்பப்பட்ட வைக்கோலில் மறைந்து படுத்துக்கொள்ள யோசித்தார். பருந்து போல் காத்துக் கொண்டிருந்த காவலர்க்கிடையில் இது சாத்தியமா? மேலும், அவர் மற்றவர்களுடன் அங்கிருந்து வேறிடத்திற் குக் கடத்தப்பட்டார். மறுநாள் முழுவதும் நடந்துசென்று எல்லோரும் எலன்ஸ்லேட் என்ற ரயில்வே ஸ்டேஷனை அடைந்தார்கள். அன்றிரவே ரயில் ஏறி பிரிடோரியாவுக்குப் போய்ச் சேரவேண்டுமென்று ஏற்பாடு. சர்ச்சில் தம்மை விட்டுவிடும்படி எவ்வளவோ மன்றாடினார். தாம் போரில் சம்பந்தப்பட்டவரில்லை என்றும், தாம் ஒரு பத்திரிகை நிருப ரென்றும் எடுத்துக் கூறியும் பயன்படவில்லை. கவனித்த வரையில் சண்டைபோடும் சாமர்த்தியத்தில் அவரே எல் லோரிலும் பெரியவர் என்றும், ஆகையால் விடுதலை செய்ய முடியாதென்றும் பகைவர் சொல்லிவிட்டனர். எவ்வளவோ மன்றாடிக் கேட்டுக்கொண்ட பிறகு, ஆபீஸர்கள் ரகத்தில் அவரையும் சேர்த்து 'ஸ்டேட் மாடல் பாடசாலை'யில் கொண்டுபோய் அடைத்தார்கள். ஏற்கனவே அந்த

இடத்தில் 60-பிரிட்டிஷ் ஆபீஸர்கள் காவலில் இருந்து வந்தார்கள்.

இதற்குள் சர்ச்சிலின் கீர்த்தி எங்கும் பரவலாயிற்று. தப்பிப் பிழைத்தவர்க ளெல்லோரும் சர்ச்சிலே தாங்கள் பிழைத்ததற்குக் காரணமென்றும், காயம்பட்ட வீரர்களைச் சுமந்துவந்த இஞ்சின் தப்பிப் போய்ச் சேர்ந்ததற்கும் அவரே காரணமென்றும் புகழ்ந்து பலவிடங்களுக்கும் கடிதமூலம் தெரிவித்தார்கள். ரயில்பாதை அதிகாரிகளும் அவருடைய ஒப்பற்ற திறமையை மெச்சினார்கள்.

காவலில் இருக்கும்போது, காலத்தைக் கழிப்பதற்காகச் சர்ச்சில் சில புத்தகங்களைப் படித்துக்கொண்டிருந்தார். எனினும் அவர் புத்தியெல்லாம் எப்படித் தப்பித்துக்கொண்டு போவதென்ற ஒரே வழியில் சென்றது. எங்கே பார்த்தாலும் கடுமையான பாரா. சுவருக்கு மேல் ஆறடி உயரம்வரை இரும்பு முள்வேலிகள். சர்ச்சில், காப்டன் ஹால்டேன், ஒரு ஸார்ஜண்டு — இம்மூவரும் சதியாலோசனை செய்துபார்த்தார்கள். ஒன்றும் புலப்படவில்லை.

ஒரு நாள் மாலை நேரத்தில், சர்ச்சில், காவல்காரர்களின் நடமாட்டம் அதிகமில்லாத ஒரு மூலையை அணுகிச் சுவரில் ஏறினார். பதுங்கிப் பதுங்கி, மெதுவாகச் சுவருக்கு அப்புறம் குதித்து, சற்றும் அசையாது ஒரு புதருக்குள் படுத்திருந்தார். மற்ற நண்பர் இருவரும் இதே முறையைக் கையாளுவர் என்று அவர் வெகுநேரம் எதிர்பார்த்து வீணாயிற்று. என்ன செய்வது! போயர் பாஷையும் தெரியாது. காபிர் பாஷையும் தெரியாது. ஏதாவது ஒரு சந்தேகத்தின்

மேல் தம்மைப் பகைவர் தேடப் புறப்பட்டுவிட்டால்? அகப்பட்டுக்கொண்டால் உடனே பலிதான். ஒரு மணி நேரம் புதரில் கிடந்தார். அந்தப் புதர் ஒரு வீட்டுக்குப் பின் புறம் உள்ளது. வீட்டிலிருந்து யாரோ இருவர் வந்து அவர் படுத்துக்கிடக்கும் புதருக்கு வெகு சமீபத்தில் நின்று கொண்டு ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள். தெய்வச் செயலாய் அவர்கள் சர்ச்சிலேக் கவனிக்கவில்லே. அவர்கள் போன பின்பு ஒரு நாய் வந்து அவரைக் கண்டு குரைத்தது. சர்ச்சிலுக்கு உயிர் போய்ப் போய் வந்தது. மெதுவாக அவர் அங்கிருந்து நழுவினர். அவர் மூன்று வாரத்துக்கு மேல் காவலி லிருந்தபோது டச்சுதேசத்துப் பாதிரியார் ஒருவர் அவருடன் கைதியாயிருந்தார். அவருடைய உடைகளேயும் தொப்பியையும் ஏற்கனவே சர்ச்சில் வாங்கிவைத் திருந்தார். அந்த உடுப்புகள் இந்தச் சமயத்தில் அவருடைய அடையாளத்தை மறைத்துக்கொள்ள உதவின. அவர், தைரியத்தைக் கைவிடாமலும், பிறர் கவனத்தைக் கவராம லும், பிரிடோரியா நகரத்தை அடைந்தார்.

பின்பு என்ன செய்வதென்று தோன்றவில்லே. விடிந்துவிட்டால் அவரைத் தேட ஆரம்பித்துவிடுவார்கள். போர்ச்சுகீசிய எல்லே 400 மைலுக்கு அப்பால் இருந்தது. வழியும் தெரியாது. கையில் தேசப் படமும் இல்லே. எப்படி யாவது, ஓடும் ரயிலில் தொத்திக்கொண்டுதான் போய்ப் பார்க்கவேண்டும். அவர் ஸ்டேஷனுக்கு வெகுதூரத்துக் கப்பால் போய் நின்றுகொண்டார். ஒரு ரயில் வந்துகொண் டிருந்தது. ரயில்பாதை வளேயுமிடங்களில் வேகம் சற்று குறைவாயிருக்குமாதலால் ஒரு வளேவுக்கருகில் போய்க் காத்துக்கொண்டிருந்தார். மறுதினம் பகைவர் தம்மைத்

தேட ஆரம்பித்து, அவர்கள் கையில் சிக்கிக்கொண்டால் ஏற்படக்கூடிய துன்பத்தைவிட ரயிலில் தொத்திக்கொள்ள முயற்சிப்பதால் ஏற்படும் விபத்தே சிலாக்கியம் என்று தீர்மானித்தார். ரயில் அவர் அருகில் வரும்போது, அவர் சாதுரியமாகத் தாவி ஏறி, இரண்டு வண்டிகளுக் கிடையேயுள்ள கொக்கியில் உட்கார்ந்துகொண்டார். அப்படியே தூங்கிப்போய்விட்டாராம். பொழுது புலர்வதற்குச் சற்று முன்பு விழித்துக்கொண்டு, ஒரு புதருக்குள் குதித்து மறைந்தார். நல்லவேளையாகக் காயமில்லை.

சூரியோதயமாயிற்று. அவர் காவலில் இருந்துவந்த ஜெயிலில் அன்றைய தினம் அவருக்கு க்ஷவரம் செய்ய வந்த நாவிதன் அவரைக் காணுமல் விசாரித்தான். அவர் குளிக்கப் போயிருக்கிருரென்று காப்டன் ஹால்டேன் தெரிவித்தார். நாவிதன் இந்த விஷயத்தை அதிகாரிகளிடம் தெரிவித்துவிட்டுத் தான் வேறிடத்துக்குப் போய்விட்டான். எங்கும் பரபரப்பு ஏற்பட்டது. எதிரிகள் முகத்தில் கோபாக்கினி ஜொலித்தது. நாலா பக்கங்களுக்கும் ஆட்கள் அனுப்பப்பட்டனர். தந்திகள் பறந்தன. வழியில் நடந்து போகும் ஒவ்வொருவரையும் சோதிக்கலானுர்கள். பத்திரிகைகளில் எல்லாம் சர்ச்சிலுடைய அடையாளங்களை வருணித்து, அவரை உயிருடனே சவமாகவோ ஒப்புவிப்பவருக்கு 25-பவுன் இனும் கொடுக்கப்படுமென்று ராணுவ அதிகாரிகள் விளம்பரம் செய்திருந்தார்கள். ரயில்பாதையின் வழியெல்லாம் தேடினுர்கள். வேறு யார் ஓடியிருந்தாலும் இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்திருக்கமாட்டார்கள். எதிரிகள் பூரணவெற்றி பெருததற்கும், இன்னும் பல்வேறு இடையூறுகளுக்கும் காரணபூதராக விளங்கிய சர்ச்சில்

தப்பித்துக்கொண்டதில்தான் எல்லா அதிகாரிகளுக்கும் விசேஷ வருத்தம்.

பிரிட்டிஷ்காரர்களிடம் அனுதாபமுள்ள ஒவ்வொருவர் வீடும் சோதனையிடப்பட்டது. பல பிரிட்டிஷ்காரர்கள் நாடு கடத்தப்பட்டனர். எங்கும் இதே பேச்சுத்தான். அரசாங்க நிர்வாகம்கூட பல நாட்கள்வரை சரிவர நடைபெற வில்லையாம். யுத்த நிருபர் என்ற முறையில் சர்ச்சிலுக்குச் சுதந்திரம் அளிக்கப்பட்ட தென்றும், அவர் மிகவும் நல்லவ ரென்றும், தந்திரமாகச் சில பத்திரிகைகள் விளம்பரங்கள் வெளியிட்டிருந்தன. ஒன்றும் பலிக்கவில்லை.

உயிரைப் பொருட்படுத்தாது வேகமாய் ஓடிக்கொண் டிருந்த ரயிலிலிருந்து குதித்து ஒரு புதரில் ஒளிந்துகொண் டிருந்த சர்ச்சிலுக்குப் பசிக்காதா? தாக மெடுக்காதா? பட்டப் பகலில் பல போயர்கள் காட்டுச் சாலைகள் மார்க்க மாய் வந்து போய்க்கொண்டிருந்தார்கள். தலையைத் தூக் கினால், யாராவது பார்த்துவிட்டால் என்ன செய்வது? நீர் வேட்கையை அடக்கிக்கொண்டு சோர்வுற்றுக் கிடந் தார் சர்ச்சில். பொழுதுபோயிற்று. சந்திரன் ஒளி பிர காசித்தது. பாதைகளில் ஜனங்கள் நடமாடவில்லை. அவர் மெதுவாக ஊர்ந்து சென்று, அருகாமையிலிருந்த ஓர் அரு வியை அடைந்து, வேண்டியமட்டும் தண்ணீர் குடித்தார்.

எதிரிகளின் பிரதேசத்தைத் தாண்ட இன்னும் பாதித் தூரத்துக்கு மேல் இருக்கும். ரயிலில் தொத்திச் செல் லும் தந்திரமே சிறந்தது. ஆனால், பசிப்பிணியாலும், எதிரி களின் கொடுமைகளால் வருந்தியதாலும் ஏற்பட்ட சோர்வு அதிகரிக்கவே, அவர் வலுவற்றுக் கீழே விழுந்து முழந்தா ளிட்டுக் கடவுளைத் தோத்திரம் செய்தார். அனாதையாகிய

சர்ச்சிலுக்குத் தெய்வமே துணைபுரிந்தது. அருகாமையில் ஒரு கிராமம் இருந்தது. அது சுரங்கத்தொழில் செய்வோர் வசிக்கும் கிராமம். அங்கே போனால் எப்படியாவது பசிப் பிணியையாவது ஆற்றிக்கொள்ளலாம் என்று நம்பினார். கேட்பவர்களுக்குத் தம்மை யாரென்று தெரிவித்துக் கொள்ளவேண்டாமா? ஒரு பொய்க் கதை கட்டி ஒத்திகை பார்த்துக்கொண்டார்.

சுரங்கக் கிராமத்துக்குச் சென்று, ஒரு பெரிய பங்க ளாவின் ஜன்னல் பக்கம் நின்றுகொண்டு, உள்ளேயிருந்த ஒருவரைப் பார்த்து, தாம் போயர் படையில் சேவகஞ் செய்தவரென்றும், தமக்கு ஆங்கில பாஷை தெரியுமென் றும், ரயில் ஓடும்போது தவறிக் கீழே விழுந்துவிட்டதாக வும் சொல்லிவிட்டுச் சோர்ந்தார். மற்ற யாரையும் ஏய்த்து விடலாம். ஆனால் இந்தக் கதையைக் கேட்டுக்கொண் டிருந்தவர் ஓர் ஆங்கிலேயர். அவர் டிரான்ஸ்வாலில் குடி யேறி வெகுகாலமாயிற்று. அவர் என்ன செய்தார் தெரி யுமா? சர்ச்சிலைக் கையைப் பிடித்துப் பரபரப்புடன் உள்ளே இழுத்துக்கொண்டுபோய், ‘நீ வின்ஸ்டன் சர்ச்சில் என்று எனக்குத் தெரியும். உன் கரடியை இங்கே விடாதே!’ என்று சொல்லி, அவருக்கு ஸ்நானம் செய்வித்து, நல்ல உண்டியும் ஆடைகளும் அளித்து உபசரித்தார். அன்று அபயமளித்த இந்தப் பெரியார் ஹவார்டு என்பவர். இவ ருடன் ஒரு நண்பர் இருந்தார். டியூஸ் நாப் என்று பெயர். சில நாட்களுக்கு முன்பு சர்ச்சில் அபேட்சகராக நின்ற ஓல்டுஹாம் தொகுதியைச் சேர்ந்தவர். இருவரும் சேர்ந்து சர்ச்சிலை இரண்டு தினங்கள்வரை சுரங்கத்திலேயே ரகசிய மாய்ப் போஷித்து வந்தார்கள். அருகேயுள்ள மற்றும் சில

ஆங்கிலேயர்களும் சேர்ந்து சர்ச்சிலுக்கு டாக்டர் பென் டாக் என்று போலிப் பெயர் சூட்டி, அவரை டச்சுக்காரர்களின் எல்லையில் சேர்ப்பிக்கவேண்டிய ரகசிய ஏற்பாட்டில் முனைந்தார்கள்.

இந்த உத்தம நண்பர்களுக்கு ஒரு டச்சு வர்த்தகர் சிநேகிதர். அவர் டச்சுப் பிராந்தியத்திற்குச் சில சரக்குகளைக் கூட்ஸ் வண்டியில் ஏற்றுமதி செய்துகொண்டிருந்தார். மூட்டைகளுக்கு அடியில் சர்ச்சிலைப் படுக்கவைத்து டச்சு எல்லையைச் சேர அவர் உதவிபுரிந்தார். மூட்டைகளுக்கு அடியில் கிடந்த சர்ச்சிலின் துன்பங்களைச் சொல்ல வேண்டியதில்லை. கூட்ஸ் வண்டி நகர்ந்து போகும் வேகந்தான் எல்லோருக்கும் தெரியுமே. ஆனால், விரோதிகள் கையில் அகப்பட்டுக்கொண்டு துன்புறுவதைவிட இந்தக் கஷ்டம் பெரிதல்ல. வெகு நேரத்திற்குப் பிறகு வண்டியும் எதிரியின் எல்லையைக் கடந்தது. இந்த உண்மையை அறிந்ததும் சர்ச்சில் அடைந்த குதூகலத்திற்கு எல்லையில்லை. பெருமையுடன் மூட்டைகளுக்கு அடியிலிருந்து கிளம்பினார். தலையை வெளியே நீட்டினார். சந்தோஷத்தின் அளவு மிகுதியால் கைத் துப்பாக்கியை யெடுத்து ஆகாயத்தை நோக்கி இரண்டு வெடிகளைக் கிளப்பினார். ஆனால் எங்கே போயர் ஒற்றர்கள் இதைக் கண்டுவிடப் போகிறார்களோ என்றும், அதனால் தமக்கு அபயமளித்த நண்பர்களுக்கு என்ன துன்பம் விளையுமோ என்றும் பயந்து, ஒருவாறு சந்தோஷத்தை அடக்கிக்கொண்டார். வண்டியும் லவ்ரன்கோ மார்க்விஸ் என்ற ஸ்தலத்தை அடைந்தது. சர்ச்சில் உடனே பிரிட்டிஷ் ஸ்தானீகர் ஆபீஸுக்கு ஓடினார். அவருடைய கதையைக் கேட்ட அந்த ஸ்தானீகர், அவரைச்

சிறப்புடன் வரவேற்ருர். தக்க மரியாதையுடனும், பரிவாரங்களுடனும் துறைமுகத்திற்கு அழைத்துப்போய் டர்பனுக்குப் போகும் கப்பலில் அனுப்பிவைத்தார். சர்ச்சில், மிகுந்த ஆவேசத்துடன் தம்மைத் தேடிக்கொண்டிருந்த போயர் சர்க்காருக்குத் தாம் சௌகரியமாக அங்கு வந்துசேர்ந்த சங்கதியைக் கிண்டலாகத் தந்தி மூலம் தெரிவித்தார்.

டர்பனுக்குச் சென்றதும் சர்ச்சிலை ஒரு பெரிய ஜன சமுத்திரம் வரவேற்றது. சர்ச்சிலின் வாழ்க்கையில் பொது ஜனங்களால் வரவேற்கப்பட்டது இதுவே முதல் தடவை. கப்பலைவிட்டு இறங்கி மறுபடியும் லேடிஸ்மித்தை நோக்கிச் சென்ருர். வழியில், போயர்களால் ரயில்வண்டி தடுக்கப்பட்ட போர்க்களத்தைக் கண்டார். தாம் கைதியான இடத்தையும் கண்டார். சேனைத் தலைவர் அவரை மரியாதையுடன் வரவேற்று அவருடைய தீரத்தைப் புகழ்ந்தார். ஆனல், அந்தச் சமயத்தில் லார்டு கிச்னரின் சூழ்ச்சியினலோ என்னவோ, 'போர் புரியும் ஆபீஸர் ஒருவர் எந்தப் பத்திரிகைக்கும் நிருபரா யிருக்கக் கூடாது' என்ற ஒரு கட்டளை இருந்துவந்தது. ராணுவத் தலைவர் யோசித்தார். ஒரு சூழ்ச்சி செய்தார். சர்ச்சிலைச் சம்பளமில்லாத உத்தியோகஸ்தராக அமர்த்திக்கொண்டார்.

சர்ச்சிலின் தபால் பை நிறைந்து வந்தது. தாய் நாட்டிலிருந்து வந்த கடிதங்கள் எண்ணற்றவை. வேல்ஸ் இளவரசர் எட்வர்டிடமிருந்தும் ஒரு கடிதம் வந்தது. போரில் நடந்த விவரங்களைக் கேட்டு மகிழ்ந்ததாகவும், தமக்கு இன்னும் பல அரிய விஷயங்களைக் கேட்க விருப்பம்

அதிகமென்றும் அவர் எழுதியிருந்தார். சர்ச்சில் தேர்தலில் போட்டியிட்டுத் தோற்றுப்போன ஒல்டுஹாம் தொகுதியின் ஓட்டர்கள் பலரிடமிருந்தும் ஆசி மொழிகள் வந்தன. சர்ச்சில் மறுபடியும் அதே தொகுதிக்குப் போட்டியிட்டால், அவர் பூரண வெற்றி பெறுவது நிச்சயமென்றும் தெரிவித்திருந்தார்கள்.

'எங்களுக்குச் சைனிய பலம் போதாதே, ஏ, ஆங்கிலச் சீமான்களே! என்ன செய்கிறீர்கள்? காடுகளில் நரி வேட்டை ஆடுகின்றீர்களா?' என்று தம்முடைய ஒரு கட்டுரையில் சர்ச்சில் வீரகர்ஜனை செய்திருந்தார். ஆங்கிலேயர்கள் இந்த வீர மொழியை மேற்கோளாகக் கொண்டு பொது ஜனங்களுக்கு அதைப் பல்வேறு முறையில் எடுத்துக் காண்பித்து, பெரிய தொண்டர் படைகள் சேர்த்தனர். சர்ச்சில் கன்ஸர்வேடிவ் கட்சியைச் சேர்ந்தவராயினும், அடுத்த தேர்தலில் அவர் எந்தத் தொகுதிக்கு நின்றாலும், கட்சியின் இலட்சியங்களைப் பொருட்படுத்தாமல் கூடத் தங்கள் ஓட்டுகளைக் கொடுத்து உதவுவதாக லிபரல் கட்சியில் சேர்ந்த பிரமுகர் பலர் வாக்களித்திருந்தனர்.

என்னே, இந்த வாலிபரின் வீரத்தாகம்! கடுங்காவலிலிருந்து தப்பிப் பிழைத்து, கேட்பதற்கும் சகிக்கமுடியாத விபத்துக்களிலிருந்து விடுபட்டு, அன்ன ஆகாரமில்லாமல் காட்டிலும் மலையிலும் ஒளிந்து திரிந்து, அரிதாகக் காப்பாற்றிய தம் உயிரைச் சிறிதேனும் லட்சியம் செய்யாமல், எப்பொழுது தம் தாய்நாட்டைச் சிறப்பிக்க அரிய சந்தர்ப்பங்கள் கிடைக்கும் என்று தேடிநின்றார் சர்ச்சில். இத்தகைய தியாக புருஷர்கள் உலகத்தில் மிகச் சிலரே.

போர் கடுமையாக நடந்துகொண்டிருக்கும் பொழுது, சுத்த வீரர்களென்று பட்டங்கள் தாங்கி, ராணுவ உடுப்புகளைப் பெருமையுடன் அணிந்துகொண்டு, போர்முனைக்கு வெகு தூரத்திற்கு அப்பால் சேமமான இடத்தில் நின்று வேடிக்கை பார்க்கும் 'வீரர்கள்' எண்ணில் அடங்கார். நமது சர்ச்சிலோ அப்படியல்லர். கடுமையான போர்க்களத்தில் நின்று யுத்தம் செய்வதே அவருடைய விரதம். இத்தகைய வீரர்களல்லவோ ஒரு தேசத்தின் ஜீவநாடி!

சர்ச்சில் மட்டுமன்றி அவருடைய அருமைத் தாயாரும் வேறொரு முக்கியமான துறையில் ராணுவத்திற்கு உதவி புரிந்து வந்தார். அவர் அமெரிக்க மாதானதால் நன்கொடைகளை ஏராளமாகத் திரட்டிக் கப்பல் ஒன்று வாங்கினார். யுத்தத்தில் காயப்பட்ட வீரர்களுக்குச் சிகிச்சை புரியும் ஆஸ்பத்திரியாக ஏற்படுத்தி அதை டர்பனுக்கு அனுப்பிவைத்தார். அப்போது போர்களத்தின் முன்னணியில் சர்ச்சில் தம் சகோதரரான ஜான் சர்ச் என்பவர் காயப்பட்டுக் கிடந்ததைக் கண்டு, அவரைச் சுமந்து கொண்டுபோய்த் துறைமுகத்தில் நின்ற சிகிச்சைக் கப்பலில் சேர்த்தார். கப்பலில் தம் தாயைக் கண்டு ஆச்சரியப்பட்டார். இப்படிக் குடும்பம் முழுதுமே தாய்நாட்டுக்காக அபாரமாய் உழைத்துவந்தது. தியாகம் வீண் போகாதல்லவா? லேடிஸ்மித் கைப்பற்றப்பட்டது. எங்கு பார்த்தாலும் பிரிட்டிஷ் கொடி பறந்தது. சர்ச்சில், சிறகுகள் நிறையப்பெற்ற தம் தொப்பியைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு, ஆவேசத்துடன் ஜயகோஷம் செய்தார். அவருடைய உற்சாகத்தின் முறையே அலாதி.

இப்பொழுது புளூம்பாட்டின் என்ற இடத்தில் போர் நடத்த வேண்டும். சர்ச்சில், போர் முன்னணியில் சில போயர்களால் தாக்கப்பெற்றார். அவர் குதிரையின் சேணங்கள் தகர்த்தெறியப்பட்டன. குதிரை அவரை எறிந்துவிட்டு ஓட்டம் பிடித்தது. கையிலுள்ள ஒரு கைத் துப்பாக்கியைத் தவிர வேறு பாதுகாப்புக் கிடையாது. போயர் கூட்டமொன்று சமீபித்துவிட்டது. மீண்டு போக வழி கிடையாது. தெய்வச் செயலாக அந்தச் சம யத்தில் ஒரு பிரிட்டிஷ் குதிரை வீரர் அவர் பக்கத்தில் போய்க்கொண்டிருந்தார். உதவிக்காகக் கத்தினர் சர்ச் சில். குதிரை வீரர் தம் குதிரையில் தமக்குப் பின் சர்ச்சிலே ஏற்றிக்கொண்டு பறந்தார். குதிரை இலக்குவைத்துச் சுடப் பட்டது. எனினும் வீரர்களேக் கொண்டுபோய்ச் சேர்த்து விட்டு அக்குதிரையும் உயிர் துறந்தது.

சேனைகள் வின்பர்க்கை நோக்கிச் சென்றன. அங் கிருந்த போயர் பிரஸிடெண்ட் ஓட்டம் பிடித்தார். சர்ச்சி லும் மற்றவரும் விரட்டினர். அருடைய ஒப்பற்ற தந்திரங் களாலும் விடாமுயற்சியாலும் ஜோஹானஸ்பர்க் விழுந் தது. பிரிடோரியா கைப்பற்றப்பட்டது. பிரிட்டிஷ் முர சொலி வானைப் பிளந்தது. பிரிடோரியாவிலிருந்துதான் சர்ச்சில் காவலிலிருந்து முன்னல் தப்பி ஓடியது. அதே பிரி டோரியாவல் இப்பொழுது முதன் முதல் வெற்றியுடன் நுழைந்தவரும் அவர்தான். கைதியாயிருந்த காப்டன் ஹால்டேன் முதலியவர்களே அவர் உடனே விடுவித்தார். கைதிகளால் ஏற்கனவே ரகசியமாய்த் தயாரிக்கப் பட்ட பிரிட்டிஷ் கொடி பிரிடோரியா மீது புகழுடன் பறந்தது.

சர்ச்சிலைப் புகழாதவரில்லை. தாய் நாட்டுக்குத் தம் கடமையைச் செய்த சர்ச்சிலுக்கு ஞாபகமெல்லாம் தாம் தேர்தல் போட்டியில் ஒல்டுஹாம் தொகுதியில் தோற்றுப்போனது ஒன்றுதான். எனவே, அவர் கேப் டவுனுக்குத் திரும்பி, 1900-ல் கப்பல் ஏறினர். இங்கிலாந்து வந்துசேர்ந்தார். ஆப்பிரிக்கப் படையெழுச்சிகளில் வீர சிங்கமெனப் பெயர் பெற்ற சர்ச்சிலை வரவேற்க ஸௌதாம்ப்டன் துறைமுகத்தில் காத்துக்கொண்டிருந்த ஜனத்திரள் சொல்லும் தகையதன்று. அதைக் கண்டதும் ஒல்டுஹாம் தொகுதியில் நடக்கப்போகும் தேர்தலில் வெற்றி பெற்றுவிட்டதாகவே சர்ச்சில் எண்ணினர். கப்பலில் பிரயாணம் செய்யும் போது, தம்மைக் காமன்ஸ் சபைக்குத் தயார் செய்துகொள்வதற்காக, பிரயாணிகள் நடமாடாத இடமாகத் தேடி நின்றுகொண்டு, அலைகளின் பேரிரைச்சலை ஓட்டர்களின் ஆரவாரமெனக் கற்பனை செய்துகொண்டு தென் ஆப்பிரிக்கப் போரின் விவரங்களை எடுத்துக்கூறிச் சொற்பொழிவாற்றிப் பழகிக்கொண்டார். பின்பு செய்யப் போகும் பிரசங்கங்களைக் கப்பலிலே ஒத்திகை செய்து பார்த்துக்கொண்டார். கப்பலை விட்டிறங்கியதும் நேரே தம் வீட்டுக்குப் போனர்.

# 4. தேர்தல் போர்

வீர சிங்கம் எனப் பொதுமக்கள் கொண்டாடும் தம் மகனை அன்புடனும் பெருமையுடனும் வரவேற்றார் அன்னை. அவர் கார்ன்வாலிஸ் வெஸ்ட் என்பவரை மறு விவாகம் செய்துகொண்டிருந்தார். இது லண்டனில் நடந்தது. சர்ச்சில் ஐந்து தினங்கள் அங்கு தங்கிவிட்டு, ஓல்டுஹாம் நகருக்குச் சென்றார். ஓல்டுஹாம் நகரவாசிகள், அரசர் பெருமானை வரவேற்பது போல், அவரை எதிர் கொண்டழைத்தனர். எங்கும் ஒரே குதூகலம், பேரிரைச்சல். தோரணங்களும் கொடிகளும் கண்கண்ட இடமெல்லாம் பறந்தன. 'பிரிடோரியா வீரனுக்கு வழி விடுங்கள்!' என்னும் இரைச்சலும், 'தோல்வியே அறியாத போர்வீரனைப் பாருங்கள்!' என்னும் இடிமுழக்கமும் பற்பல கூட்டங்களுக்கிடையே ஒலித்தன. 'நம் தாய்நாட்டின் மகா உன்னத புருஷனே வருக!' என்று வரையப்பட்ட வளைவுகள் ஊரெங்கும் காணப்பட்டன.

ஓல்டுஹாம் நகர மண்டபத்தில் சர்ச்சில் நுழைந்தார். முன்பு தேர்தலில் தாம் தோற்றுப்போன பின் நடந்த விஷயங்கள் பலவற்றையும் தெளிவாகக் கூறி, தென் ஆப்பிரிக்காவில் நடந்த போரின் விவரங்களை எடுத்துரைத்து, தாம் காவலிலிருந்து தப்பி ஓடிய வரலாற்றையும் கேட்போர் ரஸிக்கும்படி விவரித்தார். சுரங்கக் கிராமம் ஒன்றில் ஓல்டுஹாம் வாசி யொருவர் தமக்கு அபயம் அளித்ததையும் சொன்னார். கூட்டத்தில் நிலவியிருந்த உற்சாக ஆரவாரத்

தைக் கண்டு சர்ச்சில் தாமும் ஆனந்தித்தார். நடக்கப் போகும் தேர்தலில் வெற்றி நிச்சயம் என்று நம்பிக்கொண் டார். அதிர்ஷ்டதேவி தொடர்ந்து ஓடிவருகையில் சர்ச்சி லுக்கு ஏன் கவலை?

பிரதம மந்திரியான லார்டு ஸாலிஸ்பரியும், அகாலமாக மந்திரி சபையைக் கலைத்துவிட்டார். எங்கும் தேர்தல் போருக்கு வேண்டிய ஏற்பாடுகள் மும்முரமாக நடந்து வந்தன. சர்ச்சிலின் முதல் பிரசங்கங்களைக் கேட்ட அபேட் சகர் பலர் தங்களுக்காகத் தங்கள் தங்கள் தொகுதிகளில் பேசும்படி சர்ச்சிலை வேண்டிக்கொண்டனர். கன்ஸர் வேடிவ் கட்சியின் சார்பாகப் போட்டியிடும்படி 11-தொகுதிகளிலிருந்து ஓட்டர்களும் பிரமுகர்களும் அவரை அழைத்தார்கள். ஆனால் சர்ச்சிலோ, தாம் சென்ற தேர் தலில் தோல்வியுற்ற அதே ஓல்டுஹாம் தொகுதிக்குத்தான் நிற்கப் போவதாகத் தீர்மானித்துவிட்டார். இரண்டு மாத காலத்துக்குள் குறைந்தது 150 இடங்களில் வீராவேசத் துடன் அவர் பேசியிருப்பார்.

ஓல்டுஹாம் தொகுதியில் சர்ச்சிலுக்குப் போட்டியாக நிற்கவிருந்த லிபரல் கட்சியின் அபேட்சகர்கள் சாமான்ய மானவர்க ளல்லர். அவர்களுக்குப் போட்டியாக யாரும் நிற்கத் துணியமாட்டார்கள். தேர்தல் பிரசாரத்தில் கடும் போட்டி நடந்தது. சர்ச்சிலின் எதிர்க்கட்சிப் பிரசாரகர் கள் அவரைக் கண்டவாறெல்லாம் பேசினார்கள். மற்ற நண்பர்களைத் திண்டாட விட்டுவிட்டு, சுயநலத்தையும் தற் காப்பையுமே விரும்பிப் பிரிடோரியா சிறையிலிருந்து தப்பி ஓடிய 'துவேஷி' யென்றும், 'கோழை நெஞ்சன்' என்றும் வசை கூறினார்கள். மகா உத்தம புருஷர் ஒருவரை எதிர்த்து

நிற்கும் மற்ருெருவர் ஏதாவது தம் எதிரியைப் பற்றி அவ தூறு கூறவேண்டுமல்லவா? ஆனுலும் என்ன? உண்மைக் கோர் அழிவில்லே. ஆப்பிரிக்கப் போரில் தம் அரிய செயல் களே மெச்சித் தமக்கு வந்த கடிதங்களில் பலவற்றைச் சர்ச்சில் பிரசுரித்தார். சிலவற்றைக் கொட்டை எழுத்துக் களில் அச்சடித்து, எதிரிகளின் வீண் பழிக்கு மறுமொழி யாக, ஓல்டுஹாம் எங்கும் விளம்பரப்படுத்தினர். ஆப்பிரிக் காவில் வசித்துவரும் ஓல்டுஹாம் வாசிகள், தங்கள் உறவின ருக்கும் நண்பர்களுக்கும் எழுதிய எண்ணிறந்த கடிதங்களே ஓல்டுஹாம் தொகுதி ஓட்டர்களே பிரசுரித்தனர்.

தேர்தல் நடந்தது. வெகு காலமாக, 'ஓல்டுஹாம் என் கோட்டை. இதை யாரும் தகர்க்க முடியாது' என்று பெரு மிதப்புக் கொண்டிருந்த எம்மாட் என்பவர் 12,947 ஓட்டு களால் வெற்றி பெற்ருர். அடுத்தபடியாக, 16 ஓட்டுகள் குறையப் பெற்றவர் நம் வீரகேசரி சர்ச்சில்தான். இருவரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவரைச் சென்ற தேர்தலில் தோற்கடித்த ரன்சிமன் என்பவர் முறியடிக்கப்பட்டார்.

இக்காலத்தைப் போலல்லாமல், சர்ச்சில் தேர்ந்தெடுக் கப்பெற்ற அக்காலத்தில் இங்கிலாந்தில் ஓட்டுகள் போட்டு முடிய வெகுநாட்கள் செல்லும். ஓல்டுஹாம் தொகுதியின் முடிவு வெகுசீக்கிரத்தில் வெளிவந்துவிட்டது. இங்கிலாந்து முழுவதும் இந்தச் சம்பவம் ஓர் ஆச்சரியத்தை உண்டாக் கியது. சர்ச்சிலின் தேர்தல் பிரசார முறையைப் புகழாதவர் கள் இல்லே. கன்ஸர்வேடிவ் கட்சியின் மேடைகளிலெல் லாம் சர்ச்சில் பேசினர். வெற்றியின் அலே எங்குமே மோதிற்று. தேர்தலும் முடிந்தது. சபையின் பெரும் பான்மை அங்கத்தினர் கன்ஸர்வேடிவ் கட்சியினர். இவ்

வாறு சர்ச்சிலின் கட்சி சிறந்து விளங்கிய போதிலும் அக் கட்சியில் அவர் சிறந்து விளங்கவேண்டாமா? இல்லையேல், அவர் ஹார்ரோவில் படிக்கும்போது, தாம் மந்திரி பதவிக் குத்தான் வரவேண்டும் என்று சதா சிந்தித்துக்கொண் டிருந்த கனவும் பொய்த்துவிடு மல்லவா? எவ்வளவோ சொல்ல முடியாத இடையூறுகளுக் கிடையே வெற்றிமேல் வெற்றி பெற்றுவந்த சர்ச்சிலா சும்மாவிருப்பார்? தம் கட் சியின் கூட்டங்களைத் திரட்டினார். தாம் சம்பந்தப்பட்ட போர்களின் விருத்தாந்தங்களைப் பற்றிப் பிரசங்கங்கள் பல செய்தார்.

பின்பு, பொது மேடைகளில் ஏறினார். லார்டு உல்சிலீ, கோனன்டாயில், லார்டு ரோஸ்பரி, லார்டு டப்பரின் முதலிய பெயர்பெற்ற பிரமுகர்கள் அக்கிராசனம் வகித்தனர். அந்தக் காலத்தில் இத்தகைய பேச்சாளர்களைக் கேட்பதற்கென்று நிதி திரட்டிச் சொற்பொழிவாளர்களுக்குக் கொடுத்து உதவுவார்கள். லிவர்பூல் ஸெயின்ட் ஜார்ஜ் மண்டபத்தில் ஒன்றரை மணி நேரம் பேசியதற்காக 360 பவுன் சன் மானம் பெற்றார் நமது சர்ச்சில். அந்தக் காலத்தில் இது மாபெரும் வெகுமதி. இந்த வெகுமதிக்குத் தக்கபடியே அவரவர் சொற்பொழிவின் வல்லமையும் மதிப்புப் பெறும், மேஜர் பாண்டு என்னும் அமெரிக்கர் ஒருவர், சர்ச்சில் கனடாவுக்கும் ஐக்கிய நாடுகளுக்கும் ஒரு சிறு சுற்றுப் பிரயாணம் செய்து வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, செலவுக்காக 10,000 டாலர்கள் கொடுத்துதவினார். சர்ச் சிலின் அன்னை பிறந்த தேசமல்லவா அமெரிக்கா! இந்த அரிய சந்தர்ப்பம் வாய்த்ததைப்பற்றி அவர் மிகவும் சந் தோஷப்பட்டார். தம் 26-ஆவது வயதில், இங்கிலாந்தின்

அரசியல்வாதிகளில் தலைசிறந்த இளம் சிங்கம் என்று எல்லோரும் புகழ, அமெரிக்காவுக்குப் புறப்பட்டார். உலகப் பிரசித்திபெற்ற மார்க் ட்வெய்ன் என்ற அமெரிக்க ஆசிரியரின் துணையைக்கொண்டு எல்லோரும் புகழும்படி பற்பல மேடைகளில் சொற்பொழிவாற்றினார். கனடா முழுவதும் அவரை ஆரவாரத்துடன் வரவேற்றார்கள். எங்கும் அமைதி நிலவியிருந்தது. ஆனல் ஐக்கிய நாடுகளில் மட்டும் சற்று குழப்பம் நடந்தது. குழப்பத்தில் பேர்பெற்றவர்கள் ஐரிஷ்காரர்கள். சர்ச்சில் மேடைமீதேறி போயர்களைப்பற்றிப் பேச ஆரம்பித்ததும், அங்கே கூடியிருந்த ஐரிஷ்காரர்கள் எல்லோரும் கிண்டலாகக் கைகொட்டி நகைத்தார்கள். இவர்கள் மேலோங்காது தடுக்கும் வல்லமை சர்ச்சிலுக்கு உண்டு. உடனே சர்ச்சில், ‘அன்பர்களே, தங்கள் ஆரவாரத்தைக் கண்டு மகிழ்கிறேன். நீங்கள் போயர்களைப் பாராட்டுகிறீர்கள். போயர்கள் சுத்தவீரர்கள், பெரும் தியாகிகள், ஊக்கமும் தைரியமும் நிறைந்தவர்கள். உங்கள் நன்மதிப்பைப் பெற அவர்களுக்கு உரிமையுண்டு’ என்று சொல்லி அவர்களைத் திருப்தி செய்து, மண்டபத்தில் அமைதி ஏற்படுத்தி பொதுஜனங்களின் நன்மதிப்பை அடைந்தார். தாம் பேசுவதை எல்லோரும் அமைதியாகக் கேட்கும்படி செய்யும் வல்லமை சர்ச்சிலுக்கு உண்டு. எதிரிகளுக்கு உண்டாகும் அபிப்பிராய பேதத்தால், தம்மிடம் நேர்முகமாக எதிர் விவாதம் செய்யாதபடி தடுத்து விடும் ஆற்றலும் அவருக்கு உண்டு.

சில ஏஜண்டுகள் பற்பல இடங்களில் சர்ச்சிலை வரவேற்பதற்காக ஏற்பாடுகள் செய்யும்போது பொது மக்களுக்குத் துண்டுப் பிரசுரம் வழங்கினர்கள். அப்பொழுது

தான், நாம் முன்னர் கூறியபடி, சர்ச்சிலைக் குறித்து '5 யுத் தங்களுக்கு நாயகன், 6 புத்தகங்களுக்கு ஆசிரியன்' என் றெல்லாம் விளம்பரம் செய்யப்பட்டது.

1901 ஜனவரி மாதம் 22-ம் தேதி இரவு விக்டோரியா மஹாராணியார் காலமடைந்தார். மறுதினம் ஏழாம் எட்வர்டு சக்ரவர்த்தி சிம்மாசனம் ஏறினர். அன்று பார்லி மெண்டு சபை கூடிற்று. முதன் முதலாக சர்ச்சிலும் தம் ஆசனத்தில் உட்கார்ந்தார். ராஜ விஸ்வாசப் பிரமாணம் செய்துகொடுத்தார். சபையெங்கும் இவருக்கு ஒரு தனிப் பெருமை. லார்டு ராண்டால்பின் ஒப்பற்ற புதல்வர் என் றும், பிரிடோரியாவின் வீரர் என்றும் புகழ்ந்தார்கள். தேர் தல் பிரசாரத்தில் இவருக்குக் கிடைத்தது செலவு நீக்கி 10,000 பவுன். இவரது சொல் வல்லமையே தங்கள் தேர் தல் வெற்றிக்குக் காரணமென்று கன்ஸர்வேடிவ் கட்சி யினர் உணர்ந்தனர்.

இவர் தந்தையாகிய லார்டு ராண்டால்ப் நல்ல பேச் சாளர். விவாதம் செய்வதில் மிக்க சமர்த்தர். கோபக் காரர். கிளாட்ஸ்டன் மந்திரி சபையை 1880-ல் அமைத்த போது, அவர் எதிர்க் கட்சியிலிருந்து விலகி வேறொரு புதுக் கட்சி ஏற்படுத்தித் தீவிரமாக வாதாடினர். நான்கே அங் கத்தினருடன் ஆரம்பித்த இந்தக் கட்சிதான் கிளாட்ஸ்டனை 1885-ல் மந்திரி சபையிலிருந்து விரட்டி நான்காவது மந்திரி சபை அமையும்படி செய்தது. லார்டு ஸாலிஸ்பரி மந்திரி சபை கூட்டியதும் லார்டு ராண்டால்ப் இந்தியா மந் திரியானர். பிரடிரிக் என்ற உதவி யுத்த மந்திரியை அவர் தம் இலாகாவின் செலவைக் குறைத்துக்கொள்ளும்படி லார்டு

ராண்டால்ப் ஒரு முறை கேட்டுக்கொண்டதில், யுத்த மந்திரி மறுக்கவே, முன்பின் யோசியாமலும் நடந்த சம்பவத்தைப் பிரதம மந்திரிக்கு நன்ருக எடுத்துக் கூருமலும், அவர் தம் பதவியை ராஜிஞமா செய்தார்.

அநேகமாய்த் தந்தையைப் போலவேதான் மைந்தரும். தந்தையின் ராஜிஞமாவுக்குக் காரணமாயிருந்த பிரடரிக் என்பவரே சர்ச்சில் சபைக்கு வரும்போதும் யுத்த மந்திரிப் பதவியிலிருந்தார். இந்த ஆசாமியை ஒரு கை பார்க்காது விடுவாரா சர்ச்சில்?

முதன்முதல் கூடிய சபையில் தென் ஆப்பிரிக்காவில் நடந்த யுத்த முறையைப்பற்றிப் பல விவாதங்கள் நடந்தன. பல பிரமுகர்கள், ராணுவத்தின் அட்டகாசத்தைக் கண்டித்துப் பேசினர். அப்படிக் கண்டித்தவர்களில் லாயிட் ஜார்ஜும் ஒருவர். சர்ச்சில் சபையின் நடவடிக்கைகளை மிகவும் ஊக்கத்துடன் கவனித்துக்கொண்டே, தாம் முதன் முதல் காமன்ஸில் பேசுவதற்காகத் தயார் செய்துகொண்டிருந்தார். தென் ஆப்பிரிக்காவில் தமக்கு அநுபவமிருந்ததால், அந்தப் போரைப்பற்றி நடக்கும் விவாதத்தில் தாம் நன்ருகப் பேசக்கூடுமென்று தம்மைத் தாமே தைரியப்படுத்திக்கொண்டிருந்தார். இரண்டு நாட்கள் விவாதம் நடந்தது. ஐரிஷ் நேஷனல் கட்சியினர் மற்றவர்களுக்குச் சமயம் கொடுக்காமல் கடுமையாக விவாதித்துக்கொண்டிருந்தார்கள். மூன்ருவது நாள் பிற்பகல் சர்ச்சில் பேச வேண்டுமென்று துடித்துக்கொண்டிருந்தார். லாயிட் ஜார்ஜ் பேசி முடித்ததும் அவர் எழுந்திருந்தார்.

உலகத்திலேயே மிகச் சிறந்த அறிவாளிகளடங்கியதாகக் கருதப்படும் இந்த மகா சபையிலே, எல்லாக் கண்

களும் தம்மையே உற்று நோக்கிக் கொண்டிருப்பதைக் கண்ட சர்ச்சில் சற்று தயங்கினுர். பேசும்போது பிழை கள் ஏற்பட்டுவிடுமோ என்றும், மற்றவருக்குப் பதியும்படி யும் அவர்கள் நன்மதிப்பைப் பெறும்படியும் பேசவேண் டுமே என்றும், அவர் சிறிது கலங்கினுர். தமக்கு முன் பேசிய லாயிட் ஜார்ஜோ விவாதப் போரில் வீரரெனப் பெயர் பெற்றவர். தென் ஆப்பிரிக்காவில் பிரிட்டிஷ் சைனியங்கள் முறைகேடாகவும், மிருகத்தனமாகவும் நடந்ததை மிகவும் பலமாகக் கண்டித்து, சர்ச்சில் பேசப் போவதால் தாம் சுருக்கமாகப் பேசினதாகச் சொல்லிவிட்டு லாயிட் ஜார்ஜ் உட்கார்ந்தார். இவரை எதிர்த்துப் பேசி, சபையில் விவா தித்து, பிரிட்டிஷ் சைனியம் தென் ஆப்பிரிக்காவில் கை யாண்ட முறையை ஆமோதித்துப் பேசவேண்டுமே என்று சர்ச்சில் யோசித்தார்.

ஆனுல், விவாதங்களின் போக்கை முன்னமே எதிர் பார்த்த சர்ச்சில், தம் வல்லமையில் நம்பிக்கைகொண்டு, முதலில் லாயிட் ஜார்ஜை ஒரு போடு போட்டார். விஷ யத்தை உள்ளபடி உணராமல் வீணே பேசிக்கொண்டிருந் ததைவிட தீர்மானத்தில் செய்யவேண்டிய திருத்தத்தைச் சொல்லிவிட்டு உட்கார்ந்திருந்தாரானுல் கௌரவமா யிருந் திருக்கும் என்ருர். தீர்மானத்தில் ஏதோ திருத்தம் கொண்டு வரப் போவதாக அறிவித்திருந்த லாயிட் ஜார்ஜ் திருத் தமே கொண்டுவராமல் உட்கார்ந்துவிட்டதைப் பற்றிக் கிண்டலாக இடித்துக் காட்டினுர். ‘இந்த மகா சபையில், அநுபவமும், கீர்த்தியும், புகழும் படைத்த உத்தம சிகாமணி கள் அங்கத்தினர்களாக இருந்திருக்கின்றனர். அவர்கள் ஆற்றிய அரிய சேவைகளின் காரணமாகவே நம் பிரிட்டிஷ்

சாம்ராஜ்யம் உலகத்தில் தலைமை பெற்று விளங்குகிறது. இந்த மகான்களின் அநுபவத்தை அடிப்படையாகக் கொண்டு சிந்தித்துப் பார்த்தால், எடுத்த விஷயங்களிலெல்லாம் கண்டபடி பேசிவிடாதபடி சில நிபந்தனைகளை ஏற்படுத்த வேண்டுமென்று அபிப்பிராயப் படுகிறேன்,' என்று சர்ச்சில் கூறினர். சட்டசபையில் உட்கார்ந்துகொண்டு வீண் பேச்சுக்கள் பேசிக்கொண்டிருக்கும் புலிகளின் சொற்களை போயர்கள் புகழக்கூடியவர்களல்லர் என்றும், அநுபவத்தில் போயர்களுக்கு உதவியளித்தவர்களும் அவர்களிடம் அன்பும் இரக்கமும் காட்டியவர்களும் யாரென்று அவர்களுக்கு நன்ருய்த் தெரியும் என்றும் சொன்னர். இப்படிப் பேசிக்கொண்டே சபையைச் சுற்றிலும் உற்று நோக்கினர். எல்லோரும் தம்மையே மிக ஊக்கமாகக் கவனித்துக்கொண்டிருந்ததைக் கண்டு அவருக்குக் 'குஷி' பிறந்தது. மேலும் பேசினர்: 'பிரான்கோ-பிரஷ்யன் போரில் ஜெர்மானியர்கள் பாரிஸ் நகரத்தில் குண்டுமழை பொழிந்து ஊரை நாசமாக்கி, பொதுஜனங்கள் சரணுகதியடையும்படி ஜனங்களைப் பட்டினி போட்டார்களே, அந்தச் சம்பவத்தை நினைக்கும்போது, பிரிட்டிஷ் ராணுவத்தார் தென் ஆப்பிரிக்காவில் நடந்துகொண்டது எவ்வளவோ உத்தமமானது,' என்றும் சொன்னர். தென் ஆப்பிரிக்காவில் ஆட்சி முறையை எப்படி நடத்தவேண்டுமென்றும் தெளிவாக எடுத்துப் புகட்டினர். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேருவதால் அனுகூலம் உண்டென்றும், 'உயிர்விட்டாலும் விடுவோம்: ஆனல், சுதந்திரத்தை விடமாட்டோம்' என்று மூடத்தனமாக நம்பிக்கொண்டிருக்கும் போயர்களைப் போன்றவர்களுக்கு அதோகதிதான் என்றும் ஆவே

சத்துடன் கூறினர். அவர் உள்ளத்தில் இந்தியா போன்ற மற்ற நாடுகளைப் பற்றி என்ன அபிப்பிராயம் குடிகொண்டிருக்கும் என்பது இதிலிருந்தே புலனாகும். ஆஸ்திரேலியா, கனடா முதலிய நாடுகள் இருக்கையில், தென் ஆப்பிரிக்காவில் ஏற்பட்ட நஷ்டத்தைப் பற்றிப் பொருட்படுத்தவேண்டிய அவசியமில்லை என்று சொன்னர். இதைப் போன்ற இன்னும் மற்ற விஷயங்களையும் எடுத்துப் பேசி, சபையோர் பிரமிக்கும்படி செய்து, ஆசனத்தில் அமர்ந்தார். அவருடைய முதல் சொற்பொழிவே இவ்வளவு தீர்க்கமாக இருந்ததைக் கண்டு சபையோர்களில் பெரும்பாலோர் அவரைப் புகழ்ந்து பேசினர். அவருக்கு அடுத்தபடியாகப் பேசிய ஸர் ராபர்ட் ரீட் என்பவர், 'கனம் சர்ச்சில் அவர்கள் பேசியதை மிகவும் பெருமையுடன் கேட்டேன். தம் தந்தையாகிய லார்டு ராண்டால்பைப் போலவே தைரியமும் வல்லமையும் உடையவரென்று சபையோர்கள் எல்லோரும் புகழ்வீர்கள் என்று நம்புகிறேன்' என்று சொன்னர். மற்ெருரு கட்சியைச் சேர்ந்த சேம்பர்லின், 'சர்ச்சிலின் மகா உன்னதமான சொல் வல்லமையைக் கேட்டு ஆனந்தித்தேன். காலஞ்சென்ற இவருடைய தந்தையாரைப் போலவே இவரும் கீர்த்தியுடன் விளங்குவார் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை' என்று கூறினர். இத்தகைய வாழ்த்துப் பாமாலையைச் சபையினர் பலர் ஆரம்பத்திலேயே சர்ச்சிலுக்குச் சூட்டினர்.

ஒரு வாரத்திற்குப் பிறகு, மறுபடியும் ஒரு விவாதத்தில் சர்ச்சில் கலந்துகொண்டார். சமீபத்தில் நடந்த போர் விவரங்களைப் பற்றி விசாரிக்க ஒரு கமிட்டி நியமிக்கவேண்டுமென்று ஆலோசனை நடந்தது. விசாரணை செய்வதால் பிர

மாதமாய் ஒன்றும் விளங்கிவிடப் போவதில்லை என்றும், அப்படிச் செய்யப்படும் விசாரணை சாமானியத்தில் முடிவு பெறுதென்றும் சொல்லி, அவர் அந்த ஆலோசனையை எதிர்த்து விவாதம் செய்தார். யுத்த நிருபர்கள் வேண்டிய செய்திகளை அவ்வப்போது கொடுத்து வந்திருக்கிறார்கள் என்றும், தாம் ஒருவரே வேறு எந்த நிருபரும் தெரிவிக்காத செய்திகளைப் பலமுறை கொடுத்து வந்திருப்பதால் ஏற்பட்ட அபாரப் பொறுப்பை அகற்றிக்கொள்ள விரும்புவதாகவும் தெரிவித்து, யுத்தங்களைப் பற்றி உத்தியோக தோரணையில் விவரமான ஒரு வரலாறு எழுத ஏற்பாடு செய்வது மிகவும் பொருத்தமாயிருக்கும் என்றும் தெரிவித்தார். எதிர்க் கட்சியினர் இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விடாது, கிண்டலாக, போயர்கள் சரணாகதி மேல் சரணாகதி அடைந்து வந்ததாக 'மார்னிங் போஸ்ட்' பத்திரிகைக்கு எழுதிவந்த சர்ச்சிலே சிறிது காலத்துக்கெல்லாம் தாமே சரணாகதி யடைந்து பிரிடோரியா சிறையில் அடைக்கப்பட்டதை நினைவூட்டினார்கள். வயோதிகரில் பெரும்பாலோருக்கு வாலிபர்களின் முற்போக்கும் வேகமும் பிடிக்காதல்லவா?

சர்ச்சில் இரண்டாவது முறை சொற்பொழிவாற்றுவதற்குத் தக்க சமயமும் வந்தது. அவர் இந்த முறை பேசிய பேச்சுத்தான் சபையிலுள்ள பலருக்கும் பெரும் பீதியை உண்டாக்கிவிட்டது. முரட்டுத்தனமும், பரபரப்பும், பழிக்குப் பழி வாங்கி வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் குணமும் அவர் தந்தையைப் போலவே அவருக்கும் இருந்துவிடுமோ என்று பயந்தார்கள். தாம் கொண்ட வைராக்கியத்தை எப்படியும் முடித்துக்கொள்ள முயல்வது சர்ச்சில் குடும்பத்தாருக்கு உண்டு. பிறர் தம்மை எதிர்த்தால் இலகுவாக

விடமாட்டார்கள். சமயம் பார்த்துக் கதிகலங்கும்படி தாக்குவார்கள். மீன் குஞ்சுக்கு நீச்சுப் பழக்கவேண்டுமா? புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? சர்ச்சிலின் இந்தக் குணங்களைப் பின்னால் அவருடைய 66-ஆவது வயதிலும் காண்கிறோம். உலகத்தையே ஆட்டி வைத்து, உலகம் சிருஷ்டிக்கப்பட்டதிலிருந்து இப்பொழுது நடந்து வருவதுபோல் மகா கோரமான யுத்தம் நடந்ததே யில்லை யென்று எல்லோரும் கருதும்படி கோர கர்ஜனை செய்துவரும் அடால்ப் ஹிட்லருக்கே சர்ச்சிலைக் கண்டால் ஜுரம் கண்டுவிடு மென்றால், மற்றவர்கள் அவரை எதிர்த்துப் போராட அஞ்சுவதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? சேம்பர்லினுக்குப் பதிலாக முன்னதாகவே சர்ச்சில் மந்திரி சபை அமைத்திருப்பாரானால், அபிஸீனியாவை இத்தாலியர் ஆக்கிரமித்திருக்க முடியாது. ஸ்பெயினில் பிராங்கோ தலைகாட்டியிருக்க முடியாது, செக்கோஸ்லோவேகியாவும் போலந்தும் புஜம் தட்டிக் கர்ஜனை செய்திருக்கும். டென்மார்க்கும் நார்வேயும் சுதந்தரத்தை இழக்க நேரிட்டிருக்காது. சுதந்தர உரிமையைப் போஷித்து அதன் இன்பத்தை அநுபவித்துவந்த மகா உன்னதமான பிரெஞ்சு சர்க்கார் முறியடிக்கப்பட்டுச் சுதந்தரத்தை இழக்க நேரிட்டிருக்காது. உலக மகா ஜனங்களுக்கு இப்பொழுது ஏற்பட்டிருக்கும் பொருளாதாரக் கஷ்டங்களும், இதர சொல்லொணாத் துன்பங்களும் சம்பவித்திருக்கா. எதிரியின் துடுக்கை அவ்வப்போது ஒடுக்கி, ராஜதந்திர சாமர்த்தியத்தால் உலகெங்கும் அமைதியை ஏற்படுத்தி, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் மரியாதையைக் காப்பாற்றும் ஆற்றல் படைத்தவர்கள் சர்ச்சிலைப் போல் அமைவது கஷ்டம்.

பார்லிமெண்டில் இரண்டாவது முறையாகப் பேசும் அரிய சமயம் வந்தது. ஜெனரல் காவில் என்னும் ராணுவ உத்தியோகஸ்தர் ஒருவர் பதவியிலிருந்து விலக்கப் பட்டதைக் கண்டிக்க ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட் டது. மற்றவர்கள் பேசியபின் சர்ச்சில் பேச எழுந்தார். தீர்மானத்தை எதிர்த்து விவாதம் செய்தார். ஜெனரல் காவில் உத்தியோகத்திலிருந்து நீக்கப்பட்டது கண்டிக்கத் தகுந்த ஒரு சம்பவமில்லை என்று கூறினர். மிலிடெரி மேல்-அதிகாரியால் தண்டிக்கப்பட்ட சிப்பந்திகளுக்கு வக்காலத்து வாங்கிக்கொண்டு ஒரு பெரிய சட்டசபை யில் பேசுவது அவ்வளவு உயர்ந்த முறை இல்லை என்ருர். மேலும் அவர் கூறியதாவது :

> ‘ ராணுவத்திலும் சரி, மற்ற எந்த நிர்வாகத் துறை யிலும் சரி, ஒரு பெரிய பொறுப்பை வகிப்பது வயதையும் வெகுகாலம் பதவியில் இருந்து வருவதையும் பொறுத்த தல்ல. அவரவருடைய சக்தியையும், ஊக்கத்தையும், சாமர்த்தியத்தையும் பொறுத்தது. பிரிட்டிஷ் சேனை களின் அதிபதியென்று ஒருவரிடம் நம் தேசத்தின் கௌரவத்தையும் பலத்தையும் ஒப்படைத்துவிட்டு அந்த அதிபதி இத்தகைய விஷயங்களில் அவருக்குத் தோன்றிய நீதிப்படி நடந்து வருவதை நாம் சட்டசபை களில் உட்கார்ந்துகொண்டு கண்டிப்பது உசிதமுமன்று, மேன்மையுமன்று, நியாயமுமன்று. கீழ் உத்தியோகஸ் தன் ஒருவன் தன் பொறுப்பை உணராதிருந்தாலும், மேலதிகாரியின் உத்தரவை மீறி நடந்தாலும், ராணுவ அநுபவப்படி, அப்படித் தவறுதலாக நடந்த ஓர் உத்தியோ கஸ்தனைத் தண்டிப்பதற்கு மேலதிகாரிக்கு உரிமை உண்டு.

'இந்தக் கொள்கையை உத்தேசித்தே, எத்தகைய பதவிக்கும், பலபேரை வாவழைத்து அவரில் சிலரைப் பொறுக்கி யெடுக்கவேண்டிய அவசியத்தை நான் விரும்புகிறேன். ஒரு பதவியிலிருந்து மேல் பதவிக்கு மாற்றப்படுவதிலும் இந்த முறையையே அநுசரிக்க வேண்டும். ஆனல், நான் இதுவரையில் பார்த்த மட்டில், பார்லிமெண்டின் அங்கத்தினர்களைப் பொறுத்த மட்டில்தான் நாம் அந்த உன்னத முறையைக் கையாண்டு வருகிறோம். சிபாரிசையும் ஊழியத்தையுமே மற்றத் துறைகளில் காட்டி வந்திருக்கிறோம்.

'ஆகவே, ஜெனரல் காவிலை உத்தியோகத்திலிருந்து யுத்த மந்திரி நீக்கிய குற்றத்தை விசாரிக்க ஒரு கமிட்டி ஏற்படுத்தவேண்டு மென்ற தீர்மானத்தை நான் கண்டிக்கிறேன். யுத்த மந்திரியின் லட்சியங்களை உணர்ந்த நான், அவருடைய நிலைமையையும் உணர்வேன். ஆகையால் முன்வைத்த காலைப் பின்வாங்காம லிருக்கும்படி யுத்த மந்திரியைக் கேட்டுக்கொள்கிறேன்.'

இவ்வாறு சர்ச்சில் ஆவேசத்துடன் இடிமழை பெய்தது போல் கர்ஜித்தார்; சபையோர் நடுங்கினர். யுத்த மந்திரியைக் கண்டிப்பதென்றால் சர்க்காரைக் கண்டிப்பது தானே! என்ன செய்வதென்று சர்க்கார் ஏங்கி நிற்கும் போது, சர்ச்சில் சர்க்காருக்காகப் பேசிச் சபையோரைக் கிடுகிடுக்கச் செய்தபின் யுத்த மந்திரி தம் மீசையை முறுக்கிக்கொண்டார்!

சர்ச்சிலின் உன்னத நிலைமையும் அவருடைய ஆற்றலும் எல்லோருக்கும் விளங்கியது. எல்லாக் கட்சியினரும் அவர் வல்லமையைப் போற்றினர்கள். சட்டசபை

யில் நுழைந்த இரண்டு மாத காலத்திற்குள் இவ்வளவு கீர்த்தி பெற்றதால் அவரிடம் எல்லோருக்கும் பயமும் பக்தியும் ஏற்பட்டது.

அவர் தந்தையாருக்குக் கோபத்தை மூட்டிப் பதவியை ராஜிநாமா செய்யும்படி வைத்த பிரடரிக் என்பவர் 1901-ல் யுத்த மந்திரியானர். சர்ச்சில் தந்தையின் வஞ்சத்தைத் தீர்த்துக்கொள்ளச் சமயம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தா ரல்லவா? அந்தச் சமயமும் 1901-ல் மார்ச் மாதத்தில் வாய்த்தது. சிறுவரா யிருக்கும்போதே தம்மை அடித்த உபாத்தியாயரைத் தேடித் திரிந்த சர்ச்சிலா தம் தந்தையை அவமதித்த பிரடரிக்கை விட்டுவிடுவார்?

ராணுவச் சீர்திருத்த மசோதா ஒன்றைச் சபையின் அங்கீகாரத்துக்கு பிரடரிக் கொண்டுவந்தார். அந்தச் சட்டத்தின்படி ஆறு ராணுவப் படைகள் புதிதாக அமைக்கப் படுமென்றும் அவற்றில் மூன்று படைகள் எந்தச் சமயத்திலும் வெளிநாட்டுக் கலகங்களில் ஈடுபடக் காத்துக்கொண்டிருக்குமென்றும் தெரிய வந்தது. இம் மசோதா சம்பந்தமாய்ச் சர்ச்சில், 'ராணுவப் பாதுகாப்பையும், உயர்ந்த ரீதியான முறையில் ராணுவத்தை அமைத்து விஸ்தரிக்க வேண்டிய அவசியத்தையும் சபை பாராட்டுகிறது. ஆனல் இப்போதைய நிலைமையில் செலவை அபரிமிதமாகப் பெருக்கிக் கொண்டே போவது அனர்த்தமாய் முடியுமாதலால், அமைதி ஏற்பட்ட பின்பு இதைப் பற்றிக் கவனித்துக் கொள்ளச் சந்தர்ப்பம் வாய்க்கும்வரை, இந்தத் தீர்மானத்தின் முடிவை ஒத்தி வைக்கவேண்டும்,' என்று ஒரு திருத்தப் பிரேரபணை கொண்டுவந்தார்.

சர்ச்சில் பழிக்குப் பழி வாங்குவதாகச் சபையோர்கள் தெரிந்துகொண்டார்கள். சர்ச்சிலின் தந்தை தம் சமாதியிலிருந்து வஞ்சந் தீர்த்துக்கொள்கிறார் என்றும், தந்தை அநேக விஷயங்களில் துடுக்காகவும் தவறுதலாகவும் நடந்துகொண்டதைப் போலவே மைந்தரும் விஷமத்தையும் அடங்காத்தன்மையையும் வெளிப்படுத்துகிறாரென்றும் 'டைம்ஸ்' பத்திரிகை கூறியது. இதேபோல் சபையின் அங்கத்தினர் எல்லோரும் கண்டித்தார்கள்.

சபையிலிருந்த கன்ஸர்வேடிவ் அங்கத்தினர் எல்லோரும், 'தந்தைக்கும் மகனுக்கும் சிறிதும் வித்தியாசமில்லை' என்று முணுமுணுத்தார்கள். அவர்களில் பலருக்கு அவரைக் காதைப் பிடித்து இழுத்து உட்கார வைக்கலாம்போல் தோன்றியது. ஆனால், இவ்வளவு சிறு வயதினரான பேச்சாளர் யாரும் தம் கட்சியில் இல்லாதது கண்டு வாளாவிருந்தனர். இந்தக் குட்டிக் கலவரத்தைக் கவனித்துக்கொண்டே ரஸித்துக்கொண்டிருந்தனர் லிபரல் கட்சியினர். சர்ச்சில் தம் கட்சியினரிடம் கோபித்துக் கொண்டு லிபரல் கட்சியில் சேரவேண்டுமென்று கடவுளைப் பிரார்த்தித்தனர் லிபரல் 'நரிகள்'.

எதிர்க் கட்சித் தலைவரான ஸர் ஹென்றி காம்ப்பெல் பான்னர்மென் வேறொரு திருத்தப் பிரேரபணை கொண்டு வந்ததைச் சர்ச்சில் ஆமோதித்தார். அதன்பேரில் விவாதம் தொடங்கியது. 'ராணுவத்துக்கு மட்டும் 3 கோடி பவுன் செலவழிப்பது பெரிய தவறு. அவசர உதவிக்கு வேண்டிய சைனியங்கள் இப்பொழுது விவாதத்திலிருக்கும் சட்டப்படி மிகவும் அதிகம். ஆப்பிரிக்கா யுத்தத்தில் ஏற்பட்ட அபாரச் செலவைப் பற்றி நாம் கவனிக்க வேண்டியதில்லை.

ஏனெனில் செலவுக்குத் தக்கபடி மிகவும் சுருங்கிய காலத்தில் வெற்றி பெற்றிருக்கிறோ மல்லவா? அதனால் அதைப் பற்றிக் கவலை வேண்டாம். சாதாரணமாக, அமைதி நிலவி நிற்கும் காலத்தைப் பற்றித்தான் பேசுகிறேன்' என்று சர்ச்சில் விவாதித்தார். இடையிடையே தம் தந்தை எப்படிச் சிக்கனத்திலேயே கண்ணுயிருந்தார் என்பதையும், அவருடைய ஒப்பற்ற யோசனைகள் சர்க்காருக்கும் மற்றவர்களுக்கும் ஏருததின் பயனுகச் செலவுக்கு மேல் செலவு ஏற்பட்டு, கட்டுக்கடங்காத நிலைமையில் நிர்வாகம் நடந்து வருவதையும் எடுத்துக் காட்டினர். சிக்கன விஷயமாகத் தம் தந்தையார் சபையில் ஆற்றிய சொற்பொழிவை மனப்பாடம் செய்துவந்து ஒப்பித்தார். அவர் மேற்கொண்டு கூறியதாவது:

'சிக்கனத்தின் உயர்வை இவ்வளவு திறமையாகவும், அருமையாகவும், தெளிவாகவும் எடுத்து என் தந்தை கூறியும், அதன் உண்மையை அறியாதவர்கள் ஏசுவின் பத்து உபதேங்களில் என்ன நம்பிக்கை வைத்திருக்க முடியும்? உயர்ந்த தீர்க்கதரிசிகளின் உபதேசங்களின் நன்மை நாளடைவில்தானே தெரியும்! 15 வருஷங்களுக்குப் பிறகு என் தந்தையைப் பின்பற்றியே நானும் சிக்கன விஷயமாகப் பேசும் சந்தர்ப்பம் வாய்த்ததைப் பற்றி மிகவும் பெருமை கொண்டேன். நாளுக்கு நாள் செலவுத் தொகை அதிகமாகிக்கொண்டு வருவதை இனியும் கன்ஸர்வேடிவ் கட்சியினர் சகித்துக்கொண்டிருக்கக்கூடாது. இனியாவது நமது கட்சியின் கொள்கைகளைத் திருத்தி அமைத்துக்கொள்ள வேண்டும். இந்தலட்சியத்தைக் கடைப்பிடித்துவந்தவர் என் தந்தை

யாதலால் அவருடைய உண்மைக் கன்ஸர்வேடிவ் கொள் கையை மற்ற நண்பர்களுக்கு வற்புறுத்த மற்றவர்களை விட எனக்கு அதிக உரிமையுண்டு.

' இப்பொழுது நமது முன்பு இருக்கும் சட்டப்படி, வெளிநாட்டு யுத்தங்களுக்கு மூன்று பெரிய சைனியம் வேண்டுமென் றிருக்கிறது. இரண்டே சைனியங்கள் இருந்தால் போதும். காட்டு மிராண்டிகளை அடக்க ஒரு சைனியம் எதேஷ்டம். ஐரோப்பிய யுத்தங்களுக்காக இன் னும் ஒரு சைனியம் சேர்த்துக் கொள்ளவேண்டிய அவசிய மிருக்கிறது. ஐரோப்பாவில் யுத்தம் நடத்தி வெற்றி பெறுவது சாமானியமல்ல வென்பதைச் சபையோர்கள் மறக்கலாகாது. சபையோர்கள் இதுவரையில் அப்படித் தப்பெண்ணம் கொண்டிருக்கிறீர்கள். ஐரோப்பிய நாடுக ளுடன் யுத்தம் நடத்தி அதன் முடிவின் நற்பலனை நாம் அநுபவிக்க வேண்டுமானல், நம்முடைய எல்லாவற்றை யும் நாம் தியாகம் செய்யத் தயாரா யிருக்கவேண்டும். நம் முழு கவனத்தையும், பலத்தையும், தனத்தையும் ஒரே யிடத்தில் செலுத்தவேண்டி ஏற்படும். முற்காலங்களைப் போலல்ல நம் காலம். அக்காலங்களில் நடந்த யுத்தங்க ளெல்லாம் அரசர்களுக்குள் நடந்தன. கூலிக்கு மாரடிக் கும் போர் வீரர்களை அமர்த்திப் போர் புரிந்தார்கள். போக்கு வரத்துச் சாதனங்கள் தடைப்பட்டபோதும், சீதோஷ்ண நிலை மாறும்போதும் யுத்தங்களை அவ்வப் போது நிறுத்திவைப்பார்கள். ஆனல் தற்கால நிலை மையோ அப்படியில்லை. உலகெங்கும் பிரஜைகளுக் கிடையே சுதந்தர தாகம் எழுந்திருக்கிறது. நடக்கும் போர்களெல்லாம் பிரஜைகளுக்கும் பிரஜைகளுக்குமே. சமூகத்தில் ஏற்பட்ட சுதந்தரமானது நாடு முழுவதும் பாவி அதற்கு வேண்டிய சாதனங்களை யெல்லாம் தம்மை

ஆளும் அரசரிடமிருந்து பிடுங்கிக்கொண்டதின் பலனுல் சுதந்தர தேவியின் பாலைக் குடித்து சுதந்தர வீரர்களாக வளர்ந்திருக்கிறார்கள். ஆகையால் இவர்களிடம் போர் புரிவதென்றால் எளிதன்று. வெற்றி யென்பது நிச்சய மில்லை. தோல்வி யடைந்தால் எக்காலத்திலும் முன்னேற முடியாத முட்டுக்கட்டைகள் போட்டு விடுவார்கள் வெற்றி பெற்றவர்கள். அக்காலத்து ராஜாக்களின் யுத் தத்தையும் இக்காலத்துப் பொதுஜன யுத்தத்தையும் ஒப் பிட்டுப் பார்த்தால் கடுகுக்கு மலையை ஒப்பிடுவதாகும்.

'ஆகவே, அன்பர்களே! வீணே ராணுவத்தை அள வுக்கு மிஞ்சிப் பெருக்கி, அதனுல் ஏற்படும் செலவினுல் நாம் ஆண்டியாகிவிடக் கூடாது. பிரிட்டிஷ் சாம்ராஜ் யத்தின் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டுமானுல் தரைப் படையை மட்டும் பெருக்கிக்கொண்டு போவதில் ஏமாற்றமே மிச்சமாகும். நம் முழு நம்பிக்கையையும் தரைப் படையில் வைக்கக்கூடாது. கடற்படையை நம்பி அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தோமானுல் நம் தேசம் உலகத்தில் தலைசிறந்து விளங்குவது மல்லாமல், நம் தேசத்தை எதிரிகள் படையெடுக்கத் துணியவும் மாட்டார்கள். நம் சமுத்திர பலத்துக்குச் சமானமாக, தரைப் படையையும் கொண்டுவரவேண்டு மென்று இந்தச் சட்டத்தின் கர்த்தா நினைத்திருப்பார். அது முற்றி லும் தவறு. நம் சமுத்திர பலம் நமக்கு வேண்டிய அளவுக்குக் குறைவாகவே இருக்கிறது. நம் தரைப் பலம் அவசியமில்லாமல் ஏற்கனவே அதிகமா யிருக்கிறது. இந்த உண்மையை ஆழ்ந்து யோசிக்க வேண்டுகிறேன்.

'இதுவுமல்லாமல், மற்றொரு முக்கியமான விஷயத் தைக் கவனிக்கத் தவறக்கூடாது. அது என்னவென் றால் பொதுஜன உணர்ச்சி - இயற்கை யன்னையின் சுதந்தர

வேகம். மக்களுக்கிடையே இந்த வேகம் அதிகரிக்க அதிகரிக்க அதற்குத் தக்க சக்தியும், தைரியமும், ஊக்கமும், பலமும், விடா முயற்சியும் உரம் பெறும். ஆகையால் சேனைகளைத் திரட்டி வைத்துக்கொண்டு இனிமேல் வேண்டுமென்றே கலகத்துக்குப் போகக்கூடாது. நம்மைப் பாதுகாத்துக்கொள்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்துகொள்ளத் தாமதிக்கக்கூடாது. நமது கடல் பலத்தை அதிகரித்துக் கொள்ளவேண்டும். நம் தேசத்துப் பொதுஜனங்களுக்கே நாம் ஜவாப் சொல்வது கடினமாகிப் போய்விடும். சுதந்தரத்தின் ருசியை அநுபவித்துவரும் நம் ஜனங்கள் பிறருக்கு அந்த இயற்கைப் பாத்தியதை உண்டு என்பதை உணர்ந்து வருகிறார்கள். ஆகவே யுத்த மந்திரி நம் சேனைகளை அளவு கடந்து பெருக்க நினைப்பதைப் பற்றி நான் வருந்துகிறேன். அவருக்கு எச்சரிக்கையும் செய்கிறேன்!'

இப்படி வீராவேசத்துடன் பேசிவிட்டுச் சர்ச்சில் தம் ஆசனத்தில் அமர்ந்தார்.

சபையெங்கும் குதூகலம்; ஒரே உற்சாகம். 'யுத்த மந்திரி கொண்டுவந்த சட்டமே தவறுதான்!' என்பாரும், 'சர்ச்சில் பேசியதில் உண்மைகளைத் தவிர வேறொன்றுமில்லை!' என்பாரும் பல கட்சிகளிலும் இருந்தார்கள். பிரடரிக் மட்டும் தம் புருவங்களை நெரித்தார். உதட்டை மடித்து அசட்டுச் சிரிப்புச் சிரித்தார்.

சர்ச்சில் அந்தக் காலத்தில் பேசியவற்றையும் இப்போது நடந்துவரும் யுத்தத்தின் நிகழ்ச்சிகளையும் கவனித்துப் பார்ப்போமானால், சர்ச்சிலை ஒரு தீர்க்கதரிசி யென்றே நாம் புகழவேண்டு மல்லவா?

சபை கலைந்ததும் லிபரல் கட்சியைச் சேர்ந்த 'டேய்லி கிரானிகிள்' பத்திரிகையின் ராஜீய நிருபர் தம் கட்டுரையில் சர்ச்சிலை மிகவும் மெச்சி எழுதினர். சர்ச்சில் சொன்ன உண்மைகளை அவர் கட்சியினர் ஏற்கனவே நாட்டுக்கு எடுத்துரைக்கத் தவறிவிட்டார்கள் என்றும், சர்ச்சில் கூடிய சீக்கிரம் லிபரல் கட்சியின் சார்பாக மந்திரி சபை அமைத்து இங்கிலாந்தின் பிரதம மந்திரியாக அமருவார் என்றும் ஒரு ஜோசியம் போல் அவர் எழுதியிருந்தார்.

மறுநாள் விவாதத்தில் ஆர்தர் லீ என்பவர் பேசும் போது, 'மைந்தனின் கடமை' என்பதைவிடப் பொதுஜன சேவையே மேலானது என்பதைச் சர்ச்சில் மறந்ததைப் பற்றித் தாம் வருந்துவதாகக் கூறினர். 'டேய்லி கிரானிகிள்' பத்திரிகையில் பிரசுரித்திருப்பது பலிக்குமானுல், இவ்வளவு இளமையில் மிக உயர்ந்த ரீதியில் சொற்பொழிவாற்றும் சர்ச்சிலைத் தம் கட்சி இழக்க நேரிடுவதை நினைக்கத் தாம் வருந்துவதாகவும் அவர் தெரிவித்தார். பதவியி லமர்ந்த பின் மண்ணில் புதைந்து கிடக்கும் கிழிசல் துணியைச் சிகரத்தில் பறக்கவிட வேண்டுமானுல், கட்சி வேற்றுமையைப் பொருட்படுத்தாது பொது நியாயத்தை வழங்கி, தக்கது இன்னது, தகாதது இன்னது, என்று ஆழ்ந்து யோசித்துப் பேசுவார் என்று தாம் நம்புவதாகவும் அவர் சொல்லிவிட்டு அமர்ந்தார். கன்ஸர்வேடிவ் கட்சியினரின் உள்ளக் கிடக்கையும் அதுதான். தேசீயக் கட்சியின் சார்பாக டில்லன் என்பவர் பேசுகையில் தம்முடைய இருபது வருஷச் சட்டசபை அநுபவத்தில் இவ்வளவு சிறிய வயதில் இவ்வளவு உயர்ந்த பேச்சாளரையும், கேட்போருக்கு உணர்ச்சியூட்டும் சொற்பொழிவாளரையும் தாம் கண்ட

தில்லை யென்றும், சர்ச்சிலின் தந்தையார் ஒருபோதும் இவ்வளவு சாமர்த்தியமாகப் பேசியதில்லை யென்றும் சொன்னார்.

கடைசியாக, குற்றவாளியைப் போலும் திக்கற்றவரைப் போலும், முகம் வெளுத்து விழித்துக்கொண்டிருந்த யுத்த மந்திரி பிரடரிக் துரை எழுந்தார். வியர்வையைத் துடைத்துக்கொண்டு பேசும்போது, '1886-ல் ஒரு பெரிய அங்கத்தினரைப் பிரிய மனந் துணிந்த சபையோர் சர்ச்சிலை இந்தச் சபையிலிருந்து விரட்டிவிடப் பின்வாங்க மாட்டார்கள். இப்படி விளங்காத் தன்மையாகப் பேசி, பின்பு வருந்தித் தம்மைத் தாமே நிந்தித்துக் கொள்வதில் என்ன பிரயோஜனம்?' என்று ஹிதோபதேசம் செய்துவிட்டு மெதுவாக உட்கார்ந்தார்.

மறுதினம் திருத்தப் பிரேரபணை ஓட்டுக்கு விடப்பட்டது. சர்ச்சிலும், இன்னும் மற்ற இளம் அங்கத்தினரும் ஓட்டுப் போடாமல் வெளியே சென்றுவிட்டனர்.

இரண்டு வருஷங்கள் வரை இந்தச் சட்டத்தைப் பற்றி விவாதித்த பிறகு இந்தச் சட்டமே குப்பையில் தள்ளப்பட்டது. அந்த இரண்டு வருஷ காலத்துக்குள் அந்தச் சட்டத்தை எதிர்ப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைப் பத்திரிகை வாயிலாயும், பொதுக் கூட்டங்கள் மூலமாயும் சர்ச்சில் ஏற்பாடு செய்துகொண்டார். யுத்த மந்திரியும் தம் பதவியிலிருந்து விலகி, ஏகாந்தமான மௌனத்துக்குரிய இந்தியா மந்திரி ஸ்தானத்தை வகித்தார்! இவ்வாறு தம் தந்தையை இகழ்ந்தவர்மீது பரிபூரணமான வஞ்சம் தீர்த்துக்கொண்டார் விடாமுண்டர் சர்ச்சில்.

## 5. வீடும் வாழ்க்கையும்

வாழ்க்கையில் பொறுப்பும் பெருமையும் அதிகரித்த காலத்தில் சர்ச்சில் தம் பழைய வீட்டைவிட்டு 'மே பேர்' என்னுமிடத்தில், மவுண்ட் தெருவில், ஒரு புது வீடு அமைத்துக்கொண்டார். அவருடைய 'சவ்ரோலா' என்ற நாவலில் கதாநாயகன் எப்படி வீட்டை அமைத்துக் கொண்டதாக எழுதியிருந்தாரோ அதேபோலத் தம் வீட்டையும் அமைத்து அலங்கரித்துக்கொண்டிருந்தார்.

வீட்டில் நுழையும்போது ஒரு ஹாலைக் கடந்து போக வேண்டும். 'பன்ச்', 'வானிடி பேர்' முதலிய பத்திரிகை களில் அவர் தந்தையைப் பற்றித் தீட்டப்பெற்ற கார்ட்டூன் படங்கள் அங்கே மாட்டப்பட்டிருந்தன. அவருடைய படிக்கும் அறையில் முக்கியமாகக் காணப்பட்டது ஒரு பெரிய மேஜைதான். பிற்காலத்தில் அவர் மந்திரிப் பதவியி லிருக்கும்போது அவர் எங்கு போனாலும் இந்த மேஜையும் அவரைத் தொடர்ந்து செல்லும். சித்திரவேலை செய்யப் பட்ட ஒரு பெரிய நாற்காலியும் அவரிடம் உண்டு. அது அவர் தந்தைக்கு மான்செஸ்டர் வாசிகளால் பரிசாக அளிக்கப்பட்டது. அதுவும் படிப்பறையில் இருந்தது. பித்தளைக் குதிரைகளால் அலங்கரிக்கப்பட்ட ஒரு பெரிய பித்தளை மைக்கூடு மேஜைமீது இருந்தது. இதுவும் அவர் தந்தையார் வைத்துச்சென்ற சம்பத்துத்தான்.

சர்ச்சிலுடைய அறையில் பல அழகிய படங்களும் சுவர்களை அலங்கரித்துக்கொண்டிருந்தன. அவருடைய

அன்னையின் படங்களும், பாட்டியாரின் படங்களும், அவருடைய பாட்டனுராகிய மார்ல்பரோ கோமானின் படங்களும் மாட்டப்பெற்றிருந்தன. அவருடைய மூதாதையரில் மிகவும் புகழ்பெற்ற தீரர் முதலாவது மார்ல்பரோ கோமானின் படமும் அங்கே விளங்கிக் கொண்டிருந்தது. இந்த மார்ல்பரோ கோமான் ஒரு காலத்திலும் தற்காப்பு யுத்தமே செய்ததே யில்லை என்றும், எப்பொழுதும் தாமே எதிரிகள் மேல் முன்னதாகப் படையெடுத்துப் போர்புரிந்து வந்தார் என்றும், முன் வைத்த காலைப் பின்வாங்காதவர் என்றும், அவர் தொட்ட தொட்ட இடமெல்லாம் வெற்றியைத் தவிர வேருென்றையும் அறியாதவர் என்றும் பாராட்டப்பட்டிருக்கிருர். சர்ச்சில் தாம் இவருடைய வாரீஸ் என்பதைத் தம் வாழ்நாள் முழுவதும் செய்கையின் மூலம் நிரூபித்துக் கொண்டே வந்திருப்பதை எண்ணும்பொழுது மார்ல்பரோ கோமானின் ஞாபகத்தைச் சர்ச்சில் புனிதமாக்கிவிட்டார் என்றே சொல்லலாம். அறையில் இருந்த வேறு படங்களில் முக்கியமானவை, குதிரைப் படைப் போர்களைக் காட்டும் சில சித்திரங்களும், காமன்ஸ் சபையில் ராண்டால்ப் சர்ச்சில் நின்று பேசும் காட்சியைக் காட்டும் பல படங்களும். இவற்றோடு சர்ச்சில் தம்மை வளர்த்துவந்த செவிலித் தாயையும் மறக்கவில்லை. சிறு வயதிலேயே அரிய கலைகளைத் தமக்குப் புகட்டிவந்த தாதியான மிஸஸ் எவரேஸ்ட் என்னும் அந்த அம்மையாரின் படத்தை ஒரு பலகையில் வைத்துத் தாம் உட்கார்ந்து எழுதும் மேஜைக்கருகே தொங்கவிட்டிருந்தார்.

மேஜைக்குச் சமீபத்தில் ஒரு பீரோவில், பேராசிரியர்களான கிப்பன், மெக்காலே, அடிஸன், லாக் முதலியோ

ரின் பல புத்தகங்களும், அமெரிக்காவில் நடந்த புரட்சிக் கலகங்களைப் பற்றிய கட்டுரைகளும் இருந்தன. மற்றும் ஏராளமான புத்தகங்களும் பெரிய பீரோக்களில் வைக்கப் பட்டிருந்தன. அவர் சேகரித்திருந்த புத்தகங்கள் ஏராள மானவை. அவர் புத்தகங்களில் பாதிக்கு மேல் அவர் தந்தை வைத்துவிட்டுப் போனவை. எப்போதும் புத்தக மும் கையுமாகத்தான் சர்ச்சில் இருப்பார். சதா உருப் போட்டுத் தள்ளிக்கொண்டே இருப்பார். கிப்பன், மெக்காலே, டெனிஸன் முதலியவர்கள் எழுதிய புத்தகங் களில் அவருக்கு அபாரப் பிரியம்.

ஒரு சமயம் சர்ச்சிலுக்கு ஒரு நண்பர் ஒரு புத்தகம் பரிசளித்தார். அரிஸ்டாட்டல் எழுதிய வேதாந்தப் புத்த கம் அது. மத சம்பந்தமான விஷயங்களிலும், வேதாந்த உணர்ச்சியிலும் சர்வ சூனியமான சர்ச்சில் அந்தப் புத்த கத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டார்!

மற்றொரு சமயம் அவர் நண்பர் ஒருவர், 'நீங்கள் "மானிடரின் சாஸ்வதம்" என்ற புத்தகத்தைப் படித்திருக் கிறீர்களா?' என்று கேட்டபோது, அவர் தாம் படித்திருப் பதாகச் சொன்னதோடு, 'ஆனால், இப்பொழுது நாம் உலவி வரும் இந்த ஓர் உலகமே மிகவும் பெரிதாயிருக்கையில் வேறு உலகத்தில் எனக்கு மோகமில்லை!' என்றும் சொல்லிவிட்டார். குருட்டு நம்பிக்கைகளில் சர்ச்சிலுக்குப் பிரேமை அதிகம். மூன்று மெழுகுவர்த்திகளை ஏககாலத்தில் கொளுத்திவைத்தால் அவருக்குப் பயம் உண்டாகும். ஏனென்று யாராவது கேட்டால், சுவாமிகளின் எண் ணிக்கை குறையக் குறைய, கடவுளிடம் தமக்குள்ள பக்தி அதிகரிப்பதாகச் சொல்வார்.

அவர் பிரதம மந்திரியின் ஸ்தானத்தைப் பிற்காலத்தில் வகிக்கப்போவதாகச் சில ஐதீகங்களை வைத்துக்கொண்டு சொல்லப்பட்ட ஜோசியங்களைப் பற்றி அவர் தாமாக அடிக்கடி சிந்தித்துப் பார்ப்பார். அதற்குத் தம்மை லாயக்குள்ளவராகச் செய்துகொள்ளச் சிறிதும் ஓய்வு எடுத்துக் கொள்ளாமல் உழைத்து வந்தார். அத்துடன் பொது மேடைகளில் ஏறி ஒரு நாளாவது பேசாவிட்டால் அவருக்குப் பைத்தியம் பிடித்தது போலாகிவிடும்.

ஒரு சமயம் காமன்ஸ் சபை இரவு முழுவதும் கூடியிருந்தது. விடிந்ததும் 6 மணிக்கெல்லாம் சர்ச்சில் எழுந்து வந்துவிட்டார். இடைவிடாது உழைத்துவந்த அவர் மேனி இளைத்திருந்ததையும், முகம் வாடி, ஏற்கனவே அவர் குடும்பத்தினருக்குள்ள கூன் அவருக்கு அதிகரித்திருந்ததையும், அவர் ஒரு பித்துக்குளிபோல் காணப்பட்டதையும், சபையிலுள்ள மற்ற அங்கத்தினர்கள் கண்டு, 'இவர் 40 வயதிலேயே கிழடுதட்டி விடுவார்; 45-ஆவது வயதில் தம் தந்தையைப்போல் ஒழிந்துவிடுவார்!' என்று பேசிக்கொண்டார்களாம்! பனங்காட்டு நரி இந்தச் சலசலப்புக்கெல்லாம் அஞ்சுமா? வாழ்க்கை ஏணியின் மத்தியில் நின்றுகொண்டிருந்த அவருக்கு, இன்னும் எத்தனை படிகள் ஏறவேண்டும் என்பதும், தாம் ஏறி நிலைத்து நிற்கவேண்டிய உச்சிப் படி எது என்பதும் நன்கு தெரியுமல்லவா?

## 6. கன்ஸர்வேடிவ் கட்சியைத் தகர்த்தல்

காமன்ஸ் சபையிலே மூன்று வருஷங்கள் சர்ச்சில் அரும்பாடு பட்டார். கன்ஸர்வேடிவ் கட்சியின் சார்பாக அவர் முதன் முதல் ஓல்டுஹாம் தொகுதிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்தபோது, அவருடைய பேச்சுக்களில் பல பாகங்கள் அந்தக் கட்சியின் புராதனக் கொள்கைகளைத் தாக்குவனவாயும், சகாக்களுக்கு ஆத்திரமூட்டுவனவாயும், அவருடைய சொந்த அபிப்பிராயங்களையே வற்புறுத்துவனவாயும் இருந்ததைக் கட்சியின் இதர அங்கத்தினர்கள் முதலில் பொருட்படுத்தவில்லை. அவருடைய தந்தையாகிய ராண்டால்பின் செல்வாக்கையும், அவருடைய இளம்பிராயத்தையும், அவருடைய சொற்பொழிவின் ஆற்றலையும் கருதி அவர்கள் சும்மா இருந்துவிட்டார்கள். சர்க்காருக்கு எப்பொழுதும் சாதகமாக இருந்துவரும் கன்ஸர்வேடிவ் கட்சியில் சர்ச்சில் ஒருவர்தான் அரசாங்கத்தை எதிர்த்து விவாதம் செய்தவர். அவர் தம் கட்சியின் ஆதரவை இழந்து அதன் வெறுப்பைத் தேடிக்கொள்ளப் பல சந்தர்ப்பங்கள் நிகழ்ந்தன. முதன் முதலில் சேம்பர்லின் கொண்டுவந்த தீர்வை மசோதாக்களைப் பலமாக எதிர்த்து அவர் தம் கட்சியின் மனக் கசப்பைத் தேடிக் கொண்டார். தென் ஆப்பிரிக்காவில் நடந்த யுத்தங்களைப் பற்றி சபையில் யாராவது கண்டித்துப் பேசினால், தமக்கு வெற்றி கிடைக்கும் வரையில் அவர் சொல் மழை பொழிந்த வண்ணமா யிருப்பார். தோற்றுப்போன போயர்களிடம்

சமரசம் பேசி அவர்கள் வாழ்க்கைக்குப் பாதக மேற் படாதபடி சட்டங்களை ஏற்படுத்தவேண்டு மென்று அவர் சர்க்காரைப் பலமுறை தூண்டியிருக்கிருர். 'அடுத்த மாதம் 15-ஆம் தேதிக்குள் போயர் தலைவர்கள் எல்லோரும் சரணு கதி யடைந்துவிடாவிட்டால் அவர்கள் நாடு கடத்தப்படு வார்கள்' என்று சர்க்கார் ஓர் எச்சரிக்கை விடுத்தது. அதைப் பலமாகக் கண்டித்துச் சர்ச்சில் பேசுகையில், 'இந்த அறிக்கை பிரிட்டிஷ் அரசாங்கத்தின் உயர்வையும் கண்ணியத்தையும் நீக்கிவிடுகிறது. இனிமேல் சச்சரவுகள் ஏற்படாமல் இருக்கும்படியோ, எங்கும் அமைதி நிலவி யிருக்கும்படியோ இந்த அறிக்கை செய்ய முடியாது. சர்க் காரின் யுத்த வேட்கையை நான் ஆமோதிக்கிறேன். ஆனுல் அதைக் கையாளும் முறைகளை நான் கண்டிக் கிறேன். ஒரு யுத்தத்தின் முடிவில் இருதரத்தாரும் கை குலுக்கிக்கொண்டு சிநேகம் பாவிக்கவேண்டும் என்பதே என் நோக்கம். நாம் ஜயித்த இடங்களின் சொந்த உரிமை நமக்கு வேண்டும். தோல்வி யடைந்தவர்களுக்குச் சிறி தளவு பாதுகாப்புகள் ஏற்படுத்த வேண்டும். இதுவே என் கோரிக்கை' என்று வேண்டிக்கொண்டார். அவர் பேசியதில் நியாயமில்லை என்று சொல்வதற்கு இடமில்லை. ஆகையால் அவரை எதிர்த்துப் பேசப் பலர் துணியவில்லை. ஆனுல், இப்படி அவர் பேசியது அவர் கட்சியினருக்குப் பிடிக்கவில்லை. சர்க்காரின் மூலபலமல்லவா கன்ஸர் வேடிவ் கட்சி? சர்ச்சிலை வந்தனம் கூறி வழியனுப்பிவிட வேண்டியதுதான் என்று பல அங்கத்தினர் எண்ணினர். கட்சிகளை விடுவதும், எதிர்க் கட்சிகளில் சேர்வதும், எந்தக் கட்சியிலும் தங்களுக்குச் சலுகை இல்லையென்ருல் புதிய

கட்சியை அமைப்பதும் சர்ச்சில் குடும்பத்தாருக்கே சகஜம். லார்டு ராண்டால்ப் பொக்கிஷ மந்திரியா யிருக்கும் போது தம் கட்சியின் கொள்கைகளை அநேகமாக லிபரல் கட்சிகளின் கொள்கைகளை யொட்டிச் சீர்திருத்தவேண்டி அரும்பாடுபட்டார். சில நாட்களுக்குப் பிறகு, பிரதம மந்திரியான லார்டு ரோஸ்பரி என்பவர், 'ராண்டால்ப் நமது கட்சியிலிருந்து போய்விட வேண்டும்; அல்லது கிறிஸ்துமஸ் விடுமுறைக்குள் நமது மந்திரி சபை கலைய வேண்டும். வேறு வழியில்லை!' என்று சொன்னார். அதன் படியே ராண்டால்பும் வெளியேறினர். சுயேச்சையாக, கட்டுப்பாடில்லாமல், தம் மனத்துக்குத் தோன்றியவாறு செய்ய முயலுவது சர்ச்சில் குடும்பத்தாரின் லக்ஷணம் போலும்!

அந்த மாதிரியே சர்ச்சிலும் கன்ஸர்வேடிவ் கட்சியின் கொள்கைகளை கிளாட்ஸ்டனின் லட்சியங்களை யொட்டித் திருத்தி அமைக்கவேண்டுமென்று பொது மேடைகளில் பேசியிருக்கிறார். 'சமாதானம், சிக்கனம், சீர்திருத்தம்' என்பதே கிளாட்ஸ்டனின் கொள்கை. 'யுத்தங்களுக்குப் பிறகு பொருளாதார விஷயத்தில் மிகவும் பெரிய நெருக்கடி ஏற்படும். சாதாரண விஷயங்களுக் கெல்லாம் ஏகப்பட்ட செலவாகும். வருமானத்துக்கு மேல் அதிகப்படி செலவு ஏற்படும். யுத்தங்களுக்குப் பிறகு சகஜமாய் ஏற்படுவது போல் நாம் ஜெயித்த நாட்டில் பொருளாதார முன்னேற் றம் குறையும். புது வரிகளை ஏற்படுத்தக் கூடாதென்ற கொள்கை அடியோடு போய்விடும். சுதேச உணர்ச்சி யையும் சுதந்தரத்தையும் வேருடன் அறுத்தெறிந்த யுத்தத் திற்குப் பிறகு, வரிகளை வசூல் செய்வதென்றால் சாமானிய

மல்ல. செல்வாக்கும் கீர்த்தியும் வாய்ந்த சில பிரமுகர்கள் நமது நடவடிக்கைகளைக் கண்டிக்க ஏற்பட்டால் என்ன செய்வது? ஒரு ராஜ்யத்தைக் கைப்பற்றினோமானால் அதை நிர்வாகம் செய்வது சுலபமான காரிய மன்று' என்று சர்ச்சில் அறிவுறுத்தினார்.

சில நாட்களுக்குப் பிறகு, 'அரசாங்கத்தின் ஆட்சி முறையில் சில சிக்கல்களும் குழப்பங்களும் இருப்பதாகத் தோன்றுவதால் செலவு நிர்வாகம் எப்படி நடந்துவருகிறது என்பதைப் பற்றி அறிவிக்க ஒரு கமிட்டி ஏற்படுத்தவேண்டும்' என்று சர்ச்சில் சர்க்காரைக் கேட்டுக்கொண்டார். அப்பொழுது பொக்கிஷ மந்திரியாயிருந்த பால்போர் இதை எவ்வளவோ எதிர்த்தும் பயன்படாமல், இந்த 'வாயாடி' யின் இஷ்டத்துக்கு இடம் கொடுக்கும்படி நேரிட்டது. இதனால் பால்போருக்கும் சர்ச்சிலுக்கும் என்றும் அழியாத ஒரு மனக்கசப்பும் வெறுப்பும் ஏற்பட்டது.

யுத்த மந்திரியான பிரடரிக்கின் ராணுவ மசோதா முறியடிக்கப்படவேண்டும் என்னும் பிரேமையால் சர்ச்சில் தாம் பேசும் மேடைகளிலெல்லாம் அதைப்பற்றி எடுத்துக் கூறி இடித்துக் காட்டி, பிரடரிக்கின் மேல் ஜனங்களுக்கு அருவருப்பு ஏற்படும்படி செய்துவந்தார். அதே சமயத்தில், ராணுவ நிர்வாகத்தில் ஏற்பட்டிருந்த பல சிக்கலான விஷயங்களைப் பற்றி 'டைம்ஸ்' பத்திரிகை பல கட்டுரைகளை வெளியிட்டுவந்தது. இந்தக் கட்டுரைகளின் கர்த்தா மிஸ்டர் எமெரி என்று பின்பு தெரியவந்தது. சர்ச்சிலுக்கு அனுசரணையாக வந்த கட்டுரைகள் அவை. ஆகவே, இதுவரையில் தன்னந் தனியே சட்டசபையில் நின்று ராணுவ மசோதாவைக் கண்டித்து வந்த சர்ச்

சிலுக்குச் சபையின் அங்கத்தினர் பலர் பக்க பலமாக வரலானுர்கள்.

சட்டசபை மறுபடியும் கூடும்போது கன்ஸர்வேடிவ் கட்சியின் ஒரு பகுதியினர் சர்ச்சிலேத் தங்கள் தலேவரெனக் கொண்டனர். இவ்வளவு எதிர்ப்புக்கும் மனக்கசப்புக்கும் இடையே தம் கட்சியை இரு பிளவுகளாகப் பிளந்து ஒரு பிளவில் தலேமை வகித்துவந்த சர்ச்சிலின் வெற்றியைப் பாராட்ட வேண்டாமா? அவரை ஆதரிக்கும் அங்கத்தின ரில் பல பிரமுகர்கள் இருந்தனர். அயர்லாந்தின் பிரதம காரியதரிசியின் கீழ், பார்லிமெண்டரி அந்தரங்கக் காரிய தரிசியாக முன்பு உத்தியோகம் வகித்துவந்த ஸர் அயான் மால்கோம் என்பவர் சர்ச்சிலின் லட்சியங்களே ஆதரித்த தால் அவரைச் சேர்ந்த கன்ஸர்வேடிவ் கட்சியின் பிள வுக்கு 'மால்கோம்டென்ட்ஸ்' என்றும், மற்ற பிளவில் லார்டு ஹூக் செஸில் என்பவர் இருந்ததால் அந்தப் பிள வுக்கு 'ஹூக்ளிகன்ஸ்' என்றும் தற்காலிகமாகப் பெயர் கள் அமைந்தன. பின்னல் ராணுவ மசோதா சபையில் ஓட்டுக்கு விடப்பட்டபோது கன்ஸர்வேடிவ் கட்சியினரில் 17 பேர் சர்க்காருக்கு எதிராக ஓட்டுக்கொடுத்தார்கள்!

மசோதாவில் சில அம்சங்களேயும், குறிப்பாக யுத்த அம்சங்களேயும் பிணைத்து, அதை மறுபடியும் சபையின்முன் சமர்ப்பித்தார் யுத்த மந்திரியான பிரடரிக். இந்த முறை, கன்ஸர்வேடிவ் கட்சியினரில் 24 அங்கத்தினர் சர்ச்சிலேப் பின்பற்றினர். அவருடைய தந்தை ஏற்படுத்திய புதிய கட்சியின் அங்கத்தினர் எல்லோரும் சர்ச்சிலேத் தொடர்ந் தனர். சர்ச்சிலின் செய்கைகளேக் கண்டு அஞ்சி எதிர்ப் பிளவின் அங்கத்தினரில் ஒருவரான ஸர் ஜேம்ஸ் பெர்

கூஸன் என்பவர் 'டேய்லி டேலிகிராப்' பத்திரிகையில், 'சர்க்காரை ஆதரிப்பதற்கென்றே தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் யாரும் ஆச்சரியப் படத்தக்க விதமாய், இவ்வளவு கடுமையாகச் சர்க்காரை எதிர்ப்பதை இதுவரையில் நான் கண்டதேயில்லை!' என்று ஒரு கட்டுரையில் எழுதியிருந்தார்.

இதன் பின்பு, சேம்பர்லின் ஒரு தீர்வை மசோதா கொண்டுவந்தார். உடனே சர்ச்சில் எழுந்து, 'நான் என் கட்சியை எதிர்க்கவில்லை. ஆனல் தீர்வை மசோதாவை எதிர்க்கிறேன்' என்று சொன்னதும், சேம்பர்லின் சற்று நடுங்கினர். சர்ச்சில் மேலும் பேசுகையில், 'இத்தகைய தீர்வை மசோதாக்கள் இங்கிலாந்தின் சரித்திரப் பிரசித்தி பெற்ற கட்சிகளுக் குள்ளேயே பெரிய மாறுபாடுகளை உண்டாக்குவ தல்லாமல், பொதுஜனங்களின் வாழ்க்கை நிலைமையையும் மாற்றிவிடும். பண்டைக்காலக் கொள்கைகளைக் கையாண்டுவரும் கன்ஸர்வேடிவ் கட்சியும் மறைந்து இருந்த இடந் தெரியாமல் போய்விடும். ஒரு புதுக் கட்சி கிளம்பும். ஐக்கிய அமெரிக்காவிலுள்ள குடியரசுக் கட்சியைப் போல் அவதரிக்கலாம் அந்தப் புதுக் கட்சி. சென்ற ஒரு நூற்றுண்டுக் காலமாக இத்தகைய தீவிர மாறுதல் ஒன்றும் ஏற்பட்டிருக்கா தென்று நம்புகிறேன்' என்று சொன்னர். 'கட்டெறும்பை எடுத்துக் காதில் விட்டுக் கொண்டு அவதிப்படுவது போல் இவரால் நாம் வருந்துகிறோம்' என்றும், 'சனியனை விலைக்கு வாங்கினதுபோல் ஆயிற்றே!' என்றும், 'ஏதேது, அரசியல் கொள்கைகளையும் வழக்கங்களையும் இவர் புதிதாக வகுத்து அமைத்துவிடுவார் போலிருக்கிறதே!' என்றும் பலவாறு பேசிக்கொண்டனர்.

கன்ஸர்வேடிவ் கட்சியின் கர்நாடகப் பேர்வழிகள். பிரதம மந்திரியான ஸ்ரீ பால்போரின் மனத்தையே ஒருவிதமாகத் திருப்பிவிட்டார் சர்ச்சில்.

1903-ஆம் வருஷம், கோடைகாலத்தில், கன்ஸர்வேடிவ் கட்சிக்குள்ளேயே மூன்று பிளவுகள் ஏற்பட்டு அவர்களுக்குள் சேம்பர்லின் மசோதாவைப் பற்றி எதிர் விவாதம் செய்துகொண்டனர். மசோதாவை ஆதரிக்கும் கட்சியொன்றும், அதை எதிர்க்கும் கட்சியொன்றும், நடுத்தரக் கட்சி ஒன்றும் ஏற்பட்டன. சர்ச்சிலோ கட்சியின் காரியாலயத்தில் மட்டும் தம் கவனத்தைச் செலுத்தவில்லை. மேடை மேடைகளாக ஏறிச் சேம்பர்லின் மசோதாவைத் தாக்கிப் பேசிப் பொதுஜனங்களின் ஆதரவைப் பெற்று வரலானர். பார்லிமெண்டு சபையில் மசோதாவைப்பற்றி விவாதிக்க அனுமதி கொடுக்கப் பிரதம மந்திரி மறுத்துவிட்டதால், 'காமன்ஸ் சபையின் வாய்க்குப் பூட்டுப் போடுகிறீர்களா? இருக்கட்டும்!' என்று சொல்லி, சர்ச்சில் வெளியே கிளம்பிப் போனர். நாடெங்கும் ஓயாமல் சுற்றி ஆங்காங்கு வர்த்தகச் சங்கங்களைக் கூட்டி, கன்ஸர்வேடிவ் கட்சியினரின் கலாட்டாக்களுக் கிடையே சேம்பர்லின் மசோதாவைத் தாக்கிப் பொதுஜனங்களின் உணர்ச்சியைக் கிளப்பிவிட்டுக்கொண்டே வந்தார்.

சேம்பர்லின் பேசிய இடங்களுக்கெல்லாம் தொடர்ந்து சென்று அவர் பேசிச் சென்ற பின் சூட்டோடு சூடாகச் சர்ச்சிலும் பேசுவார். சில இடங்களில் கன்ஸர்வேடிவ் கட்சியின் மேடையே சர்ச்சிலுக்குக் கிடைக்கவில்லை. வெகு காலமாக கன்ஸர்வேடிவ் கட்சியார் கட்டிவந்த கோட்டையைத் தகர்க்க விரும்பினல் அது சாமானியக்

காரியமாகுமா? சர்ச்சிலுக்கு மேடை கொடுக்க மறுத்த இடங்களிலெல்லாம் அவர் தம் மோட்டார் வண்டியின் மேலேறிப் பிரசங்கம் செய்வார். இதற்காகவே தாம் போகு மிடங்களுக் கெல்லாம் தம்மோடு ஓர் ஏணியையும் கொண்டு போவார்! பர்மிங்ஹாம் என்னுமிடம் கன்ஸர்வேடிவ் கட்சி யின் பெருங் கோட்டை. கன்ஸர்வேடிவ் கட்சியின் கொள் கைகளையும் அதன் நடவடிக்கைகளையும் எதிர்த்துப் பேசு வோர் யாராயிருந்தாலும் அவர் அங்கிருந்து மீண்டு போவது துர்லபம். லாயிட் ஜார்ஜ் ஒரு சமயம் லிபரல் கட்சியின் சார்பாக ஒரு பிரசங்கம் செய்து இடையே சமயம் வாய்த்த போதெல்லாம் கன்ஸர்வேடிவ் கட்சியைத் தாக்கிப் பேசிய தின் பயனாகக் கூட்டத்தில் கலவரம் ஏற்பட்டது. லாயிட் ஜார்ஜை அடித்து நொறுக்கிவிடப் பிரயாசைப்பட்டனர் பொதுஜனங்கள். நல்ல காலமாக ஒரு போலீஸ்கார னுடைய உடையை வாங்கி மாறுவேடம் பூண்டு அவர் உயிர் பிழைத்தார். உலகப் பிரசித்திபெற்ற லாயிட் ஜார் ஜுக்கு இந்தக் கதி ஏற்பட்டதென்றால் எதுவொன்றையும் மறைமுகமாகப் பேசாமல் பட்பட்டென்று பொரிந்து கொட்டும் சர்ச்சிலை விட்டுவிடுவார்களா? ஆனால், ஆப் பிரிக்காவில் நடந்த யுத்தங்களில் உயிரைத் திரணமாய் மதித்து முன்னணிகளில் நின்று பல ஆபத்துக்களையும் வென்று கீர்த்திக் கொடி நாட்டிய நம் சர்ச்சிலா இந்தப் பூச்சாண்டிகளுக்குப் பயப்படுவார்? பர்மிங்ஹாமுக்குத் துணிந்து சென்றார். தம் மோட்டார் வண்டியின் டாப்பில் ஏறினார்; ஆரம்பித்தார் பிரசங்கத்தை. அவரைத் தவிடு பொடியாக்கிவிட வேண்டு மென்றிருந்த போக்கிரிக ளெல் லாம், அவருடைய ஒப்பற்ற துணிச்சலையும், அவர் பேசு

வதில் நியாயம் ததும்புவதையும் கேட்டு, சேம்பர்லினைப் போற்றியது போல் அவரையும் போற்றினர்.

பிறகு மந்திரி சபையில் சில மாறுதல்கள் ஏற்பட்டன. சேம்பர்லின் தம் பதவியை ராஜீநாமா செய்தார். தொழிலாளர் சங்க மந்திரிகள் நால்வர் இருந்தனர். சேம்பர்லின் ராஜீநாமா கொடுத்த விஷயம் இவர்களுக்குத் தெரிந்தால் தங்கள் பதவியை விடமாட்டார்க ளல்லவா? அதனால் பிரதம மந்திரியான பால்போர், சேம்பர்லினின் ராஜீநாமாவைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவில்லை. ஆயினும் மற்றத் தொழிலாளர் சங்க மந்திரிகளும் ராஜீநாமா செய்தனர். பால்போர் மட்டும் இன்னும் நடுநிலைமை வகித்து வந்தார். சேம்பர்லினுடைய குமாரரான ஆஸ்டின் சேம்பர்லினைப் பொக்கிஷ மந்திரி யாக்கினர். டெவான்ஷயர் கோமானும் வர்த்தக சங்க மந்திரியா யிருந்து ராஜீநாமா செய்தவர். டிசம்பர் மாதம் டல்விச், லூவிஷாம் தொகுதிகளில் உபதேர்தல் நடக்கும்போது கன்ஸர்வேடிவ் கட்சியினருக்குப் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டது. கன்ஸர்வேடிவ் கட்சியைத் தோற்கடித்த லிபரல் அங்கத்தினர்க் கெல்லாம் சர்ச்சில் தம் வாழ்த்துக்களைத் தெரிவித்தார்.

ஒல்டுஹாம் தொகுதியின் கன்ஸர்வேடிவ் ஓட்டர்கள் ஒரு கூட்டங் கூடி, சர்ச்சிலுக்கு இனிமேல் அவர்களின் ஆதரவு கிடைக்காதென்று தெரிவித்துவிட்டனர். இதைப் பற்றி சர்ச்சில் வருந்தவில்லை. அவர் தம் கட்சியின் கொள்கைகளை எதிர்த்தாலும், தம் வாக்காளர்களின் நோக்கங்களையும் அவர்களின் க்ஷேமத்தையும் கருதியே தாம் உழைத்து வருவதாக ஒல்டுஹாம் ஜனங்களுக்குக் கூறினர். ‘பிரதம மந்திரியான பால்போர் லார்டு ஸாலிஸ்பரிக்குப்

பிறகு பதவி ஏற்கும்போது, ‘கன்ஸர்வேடிவ் கட்சியின் கொள்கைகள் மாற்றப் படமாட்டா’ என்று தெரிவித்து விட்டு, பதவிக்கு வந்த மறு வருடம் தம் கட்சியின் கொள் கைகளை முற்றிலும் திருத்தி அமைக்கவேண்டு மென்று சொல்லியிருக்கிருர். அதைப் போல் நான் ஒன்றும் செய்து விடவில்லை’ என்று அவர் ஓல்டுஹாம் ஓட்டர்களுக்கு எடுத் துக் காட்டினர்.

1904-ல், அவர் சமயம் ஏற்பட்ட போதெல்லாம் சட்டசபையில் தம் கட்சியைத் தாக்கி, பிரதம மந்திரிகூடச் சபையை விட்டு வெளியேறும்படி செய்துவிட்டார். பிர தம மந்திரி சில சமயம் நடுநிலைமை வகித்தும், சில சமயம் தாம் பேசும்போது வெளியே போய்விடுவதுமா யிருந்த தைக் குறித்து ஒரு முறை அவர் மானத்தை வாங்கிவிட் டார் சர்ச்சில். ‘பிரதம மந்திரியாரே, ஓடவேண்டாம்! இன்று நான் உங்களை எதிர்க்கப் போவதில்லை. தைரியமா யிருங்கள்!’ என்ருர் சர்ச்சில்.

# 7. கட்சி மாறுதல்

சர்ச்சிலுக்கும் கன்ஸர்வேடிவ் கட்சிக்கும் இடையே பிளவு அதிகரித்துக்கொண்டே வந்ததை லிபரல் கட்சியார் கவனிக்காமல் இருந்துவிடவில்லை. அவர்கள் தக்க சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். அத்தகைய சந்தர்ப்பம் கிடைத்ததும், மான்செஸ்டர் தொகுதியிலிருந்து லிபரல் கட்சியின் சார்பாக அடுத்த தேர்தலுக்குப் போட்டி யிடும்படி அவர்கள் சர்ச்சிலை வேண்டினர். அதற்கிணங்கி சர்ச்சிலும் லிபரல் மேடைகளில் ஏறிப் பிரசங்கங்கள் செய்தார். 1904, மே மாதம் 31-ஆம் தேதியில் சர்ச்சில் தாம் லிபரல் கட்சியில் சேர்ந்து, விட்டதாக வெளிப்படையாகத் தெரிவித்துவிட்டார். தேர்தலிலும் வெற்றி பெற்றுப் பார்லிமெண்டுக்குப் போய், லாயிட் ஜார்ஜுக்கு அடுத்தபடியாக உட்கார்ந்துகொண்டார். லாயிட் ஜார்ஜும் சர்ச்சிலை மனமார வரவேற்றார். சிங்கத்துக்குச் சிங்கந்தானே இணை! இவ்விதமாக லாயிட் ஜார்ஜும் சர்ச்சிலும் ஒருவரை யொருவர் நன்கு மதித்துக் கொண்டனர். அவர்களின் நேசம் நாளுக்கு நாள் முற்றி வந்தது. பின்னால் மந்திரி சபையில் இருவரும் ஒத்துழைத்து, சென்ற உலக மகா யுத்தத்தின்போது அரிய தொண்டாற்றி வந்தார்கள்.

சர்ச்சில் எதிர்க் கட்சியிலிருந்துகொண்டு கன்ஸர் வேடிவ் கட்சியினரை வேண்டுமென்றே தாக்குவார். அவர்களைத் தாக்குவதற்கென்றே ஏதாவது ஒரு குட்டிப் பிரேரே

பணியைக் கொண்டுவருவார். கன்ஸர்வேடிவ் கட்சியினர் தம்மைப் பேசவிடாமல் தடுக்க முயன்றால், அந்தக் கலாட்டாவுக்கெல்லாம் சேம்பர்லின்தான் காரணம் என்று அவர் பழிப்பார்.

பால்போரின் கொள்கைகள் இன்னவை என்று தெளிவாகத் தெரியாததால், அவர் கட்சியினரும் அவரை வெறுக்கலானார்கள். எதிர்க் கட்சியின் கிண்டல்களும் அதிகரித்தன. பொது ஜனங்களின் கண்டனங்களும் வலுத்தன. எனினும், அவர் தம் பிரதம மந்திரி ஸ்தானத்தை விடாது சமாளித்துக்கொண்டு ஒரு வருஷம் வரையில் காலந் தள்ளினர். 'பெண்கள் அரசாண்டால் சாமானியமாகச் சிம்மாசனத்தை விட்டு வெளியேறுவார்களா?' என்று சர்ச்சில் கேவலமாகப் பேசுவார். அவர் தந்தையார் எப்படி கிளாட்ஸ்டனை எதிர்த்து, பதவியை விட்டு அவர் ஓடும் வரையில் துன்புறுத்தி வந்தாரோ, அதைப் போலவே சர்ச்சிலும் தம் புதிய சகாக்களுடன் சேர்ந்து பால்போரைத் துன்புறுத்தி வந்தார். 'கன்ஸர்வேடிவ் கட்சியின் இரு பிளவுகளும் நாய்கள் ஒற்றை எலும்புத் துண்டைக் கடிப்பது போல் பால்போரைத் துன்புறுத்தி வருகின்றன' என்று உலகத்துக்கு எடுத்துரைத்தார் சர்ச்சில்.

1905-ல் ஒரு சமயம் பால்போரைக் கேட்ட சில கேள்விகளுக்குக் குடியேற்ற நாட்டு மந்திரி பதில் சொல்ல முன்வந்தார். அதைச் சர்ச்சில் எதிர்த்துப் பிரதம மந்திரி தான் பதில் சொல்லவேண்டும் என்று வற்புறுத்தி வதைத்தார். டிசம்பர் மாதம் பால்போர் தம் கிராமத்துக்கு ஓய்வெடுத்துக்கொள்ளப் போனர். சர்ச்சில் லிபரல் கட்சியில் ஒரு பெருந் தலைவராக விளங்கியதால் அவருக்கு, இப்

பொழுது புதிதாய் அமைந்த மந்திரி சபையில் ஒரு ஸ்தானம் கொடுக்கப்பட்டது.

1906-ல் புதுத் தேர்தல் நடந்தது. கன்ஸர்வேடிவ் கட்சியினர் பலவிடங்களில் முறியடிக்கப்பட்டனர். லிபரல் கட்சிக்கு வெற்றிமேல் வெற்றி. முடிவில் லிபரல் கட்சியே மந்திரி சபை அமைத்தது. சர்ச்சில் குடியேற்ற நாட்டு உதவி மந்திரியாக அமர்த்தப்பட்டார். அப்பொழுது அவருக்கு வயது 31.

கன்ஸர்வேடிவ் கட்சியினர் தங்கள் மூட நம்பிக்கையினுலும், உளுத்துப் போன பழங் கொள்கைகளினுலும் சர்ச்சிலே இழக்க நேரிட்டது. காலப் போக்குக்கு ஏற்ற வாறு தங்களேத் திருத்திக் கொள்ளும் திறமை அவர்களுக்கு இல்லாததைப் பற்றி சர்ச்சில் வருந்திஞர். ஆதி முதல் அவர் குடும்பத்தினர் அங்கத்தினர்களா யிருந்துவந்த கட்சி யல்லவா கன்ஸர்வேடிவ் கட்சி! அதை விட்டு விலகியதில் சர்ச்சிலுக்கு உண்டான வருத்தத்துக்கு அளவேயில்லே.

பொது ஜனங்களுக்குக் கன்ஸர்வேடிவ் கட்சியின் மேல் வெறுப்பு உண்டாகிவிட்டது. பொது ஜனங்களின் க்ஷேமத்தைக் கருதாது சர்க்காரின் பாதுகாப்பு ஒன்றையே முக்கிய லட்சியமாகக் கொண்ட ஒரு கட்சியின் நிலேமை நாளடைவில் சீர்குலேந்து போவது இயற்கைதானே. சர்ச்சிலின் மேல் பொது ஜனங்களுக்கு ஒரு தனிப் பிரேமை உண்டாகியது. அக்காலத்தில் சர்ச்சில் தம் தந்தையின் சரித்திரத்தை எழுதிப் புத்தக ரூபமாக வெளியிட்டார். அவருடைய செல்வாக்கு உயர்வதற்கு இதுவும் ஒரு முக்கிய காரணமா யிருந்தது! சேம்பர்லினின் தீர்வை மசோதாக்களே வெறுத்த லங்காஷயர் வர்த்தகர்கள் கன்ஸர்

வேடிவ் கட்சியையும் அடியோடு வெறுத்தனர். இங்கிலாந்தில் குடியேறி வாழ்ந்துவரும் அந்நிய நாட்டினரைப் பற்றிய பல மசோதாக்களை சர்ச்சில் தாக்கி வெற்றி பெற்றதால் யூதர்கள் எல்லோரும் சேர்ந்து சர்ச்சிலைக் கொண்டாடிய தல்லாமல், எல்லாத் தேர்தல்களிலும் யூதர்களின் ஓட்டுகள் சர்ச்சிலுக்கும் அவரைச் சார்ந்தோருக்குமே உரியவை யென்று தமக்குள் ஒரு கட்டுப்பாடு செய்து கொண்டார்கள்.

தேர்தலில் லிபரல் கட்சியினர் 377- ஸ்தானங்களைக் கைப்பற்றி யிருந்தனர். அவர்களுக்கு அனுசரணையாக மற்ற சில்லறைக் கட்சிகளின் அங்கத்தினர்களில் 77-நபர்கள் இருந்தனர். கன்ஸர்வேடிவ் கட்சியில் 132-அங்கத்தினரே தேர்ந்தெடுக்கப்பட்டனர். வேறொரு கட்சியின் 25-அங்கத்தினர்கள் அவர்களுக்கு அனுசரணையாக இருந்தார்கள். இதைத் தவிர ஐரிஷ் நேஷனல் கட்சியின் 83 அங்கத்தினர்கள் அயர்லாந்துக்குச் சுய ஆட்சி கொடுப்பதற்கென்று உழைக்கும் கட்சியைச் சேருவதற்குக் காத்துக்கொண் டிருந்தார்கள். கன்ஸர்வேடிவ் கட்சியில் சேம்பர்லினும் அவர் புதல்வர் ஆஸ்டின் சேம்பர்லினும் மட்டுமே முக்கியமான பிரமுகர்களில் தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள். பால்போர், போனர்லா, பிரடரிக் முதலிய பிரமுகர்கள் தேர்தலில் முறியடிக்கப்பட்டனர்.

ஸர் ஹென்ரி காம்ப்பெல் பானர்மென் பிரதம மந்திரியானார். சர்ச்சில் குடியேற்ற நாட்டு உதவி மந்திரி. புது மந்திரி சபையினர் பல சட்டங்களை ஏற்படுத்திப் பொது ஜனங்களின் நன்மதிப்பைப் பெற்றுவந்தனர்.

அடுத்த வருஷம் சர்ச்சில் வின்சர் மாளிகையின் கவுன் சிலராகச் சிறிது காலம் பதவி பெற்று வந்து, பிறகு ஆப்பி ரிக்காவுக்குச் சுற்றுப் பிரயாணம் போய் வந்தார். மந்திரி சபை திருத்தி யமைக்கப்பட்டது. சர்ச்சில் வர்த்தக நிர்வாகக் கழகத்தின் அக்ராசனாதிபதி யானார். லாயிட் ஜார்ஜ் பொக்கிஷ மந்திரியானார். இந்த மாறுதலை ஒட்டி சர்ச்சில் மறுபடியும் தேர்தலுக்கு நிற்கவேண்டி வந்தது. மான்செஸ்டர் வாசிகள் ஏற்கனவே கவர்ன்மெண்டின் அங்கத்தினர்களை வெறுத்ததால், இந்தத் தேர்தலில் சர்ச்சில் செய்த பிரயத்தனங்கள் எல்லாம் வீணாயின. பெண் களுக்கு ஓட்டுரிமை யில்லாததால் பெண்கள் யாவரும் எதிர்ப் பிரசாரம் செய்தார்கள். தேர்தலில் 629 ஓட்டு களால் சர்ச்சில் தோற்கடிக்கப்பட்டார். இதற்கெல்லாம் சளைத்துவிடுவாரா சர்ச்சில்? தோல்வியடைந்த தினம் டண்டீ தொகுதிக்குப் போட்டி யிடும்படி டண்டீ வாசிகள் தந்தி கொடுத்தனர். சர்ச்சில் அங்கே சென்றார். எதிர்ப் பிரசாரம் மிகவும் பலமா யிருந்தது. மான்செஸ்டரிலிருந்து, எதிர்ப் பிரசாரம் செய்வற்கென்று சில பெண்மணிகள் அவரைத் தொடர்ந்து சென்றனர்.

மிஸ் மலோனீ என்பவள், இவர் பேசும் இடத்திற்குச் சமீபத்தில் நின்றுகொண்டு, ஒரு பெரிய தோசைக்கல் மணியை எடுத்து அடித்துக்கொண்டு, சர்ச்சிலின் பேச்சைக் கேட்க முடியாதபடி செய்து வந்தாள்! என்றாலும் சர்ச்சி லின் இடி முழக்கம் வீணாகவில்லை. தேர்தலில், மிகப் பெரும்பான்மையான ஓட்டுக்களால் தேர்ந்தெடுக்கப்பட் டார். ரொட்டியில் தடவிச் சாப்பிடும் 'மர்மலேட்' என்னும் ஒருவித 'ஜாம்' இந்த டண்டீயில் உற்பத்தி

யாவதால், சர்ச்சில் சட்டசபையில் வெற்றிமாலையுடன் நுழைந்ததும், 'மர்மலேட் வருகிறது!' என்று எல்லோரும் கரகோஷம் செய்து அவரை வரவேற்றனர்!

## 8. மண வாழ்க்கை

தேர்தலுக்குச் சிறிது காலத்துக்கு முன்புதான் பிரதம மந்திரி பானர்மென் காலமானதால் ஸ்ரீ ஆஸ்குவித் பிரதம மந்திரியானர். பலவிதச் சீர்திருத்தச் சட்டங்கள் சிருஷ்டிக்கப்பட்டன. பல வெற்றிகளுக் கிடையில் சந்தோஷம் நிலவி யிருந்தது. அச்சமயத்தில்தான் சர்ச்சிலுக்கு விவாகத்திற்கு ஏற்பாடாயிற்று. 1908 செப் டெம்பரில், மிஸ் க்ளெமென்டைன் ஹோசியர் என்ற மாதரசியை அவர் மணந்துகொண்டார். அந்தத் தேவியார் டண்டீ நகரத்தில் பெருமையுள்ள ஒரு புராதனமான குடும் பத்தைச் சேர்ந்தவர். விவாகம் வெஸ்ட்மின்ஸ்டரிலுள்ள ஸெயின்ட் மார்கரெட் தேவாலயத்தில் நடந்தேறியது. திரு மணத்தின் போது எங்கும் குதூகலம் நிலவியிருந்த போதி லும், அதிக ஆர்ப்பாட்டமாக நடக்கவில்லை. காரணம் என்ன ? சர்ச்சில் அவ்வளவு பணக்காரர் அல்லர். மந்திரிப் பதவியின் சம்பளமே அவருடைய வருவாய். அதுவும் எந்தச் சமயத்திலும் நின்றுவிடலாம். சட்டசபைப் போரில் இறங்கியதிலிருந்து, அவருடைய கட்டுரைகளாலும் புத்த கங்களாலும் கிடைத்துவந்த வருமானமும் தடைப்பட் டது. எட்டு வருஷங்களுக்கு முன் அவர் பிரசங்கம் செய்த வகையில் மிஞ்சினது 6000 பவுன்தான். அவர் தந்தையின் வாழ்க்கைச் சரிதத்தை எழுதிய வகையில் அவருக்குக் கிடைத்தது 8000 பவுன். இதைத் தவிர அவரிடம் வேறு சொத்து எதுவும் கிடையாது.

வாழ்க்கையிலும் அவருக்கு டாம்பீகம் கிடையாது. மத விஷயமே பிடிக்காது. வித விதமாகத் தொப்பி அணிவதி லும், வித விதமாகக் கைத்தடிகள் வாங்குவதிலும் அவ ருக்கு ஒரு தனிக் குஷி. ஓழிந்தபோது அவர் தோட்ட வேலைகளும், கொத்து வேலைகளும் செய்வதுண்டு.

1909-ஆம் ஆு ஆரம்பத்தில் லிபரல் சர்க்கார் ஆட ஆரம்பித்தது. பொது ஜனங்களிடையே லிபரல் சர்க்காரின் மேல் மனக் கசப்பு ஏற்பட்டது. இவ்வளவு மோசமான நிலைமை ஏற்பட்டுவிட்டதே, என்ன செய்வது என்று சர்க் கார் அங்கத்தினர் வருந்தினர். லாயிட் ஜார்ஜும் சர்ச் சிலுமா இதற்கெல்லாம் பயந்தவர்கள்? இருவருமாகச் சேர்ந்து ஒரு வரவு செலவுத் திட்டத்தைத் தயாரித்தார்கள். பொது ஜனங்களுக்கு மிகவும் சலுகை காட்டியிருந்த அந் தத் திட்டத்தை மேல் சபையினர் தள்ளிவிட்டனர். மேல் சபையில் இருந்த அங்கத்தினர்களில் பெரும்பாலோருக்கு விஷயமே புரியாதென்பது லாயிட் ஜார்ஜுக்கும் சர்ச்சிலுக் கும் தெரியும். எதிர்பார்த்தபடியே மேல் சபையினரும் கன்ஸர்வேடிவ் கட்சியினரும் இந்தத் திட்டத்தை எதிர்த்த தால், இதுதான் சமயமென்று சர்ச்சிலும், லாயிட் ஜார் ஜும் சிறிதும் ஓய்வில்லாது இங்கிலாந்து முழுவதும் பற் பல விடங்களில் மேடை மீதேறிச் சொற்பொழிவாற்றி, கன் ஸர்வேடிவ் கட்சியினரின் செல்வாக்கை அடியோடு தொலைத்துவிட்டு, லிபரல் கட்சியின் பலத்தை அதிகரித்துக் கொண்டனர்.

பிறகு சர்ச்சில் உள்நாட்டு மந்திரியாக நியமிக்கப்பட் டார். எவ்வளவோ சீர்திருத்தங்களைச் செய்தும், பெண்கள் மட்டும் இவரை விரட்டிக்கொண்டே 'கலாட்டா' செய்து

வந்தனர். எடுத்ததற்கெல்லாம் குற்றம் கண்டு பிடித்தனர். ஓட்டுரிமை வேண்டியே இவர்கள் பிரசாரம் செய்தார்கள். சர்ச்சிலைச் சில ஸ்திரீகள் சாட்டையால் அடித்து மிருக்கிறார்கள். ஒரு சமயம் சர்ச்சில் தேர்தலில் போட்டியிடும் போது, எதிர்க் கட்சியினர் சர்ச்சிலைக் குறித்து, 'கேப்டன் மாரிசன் பெல் தென் ஆப்பிரிக்காவில் நடந்த யுத்தங்களில் தம் உயிரைத் தத்தம் செய்யத் தயாராய்ப் போர் முனையில் ஈடுபட்டிருந்த போது, கேவலமாக உயிருக்குப் பயந்து, நண்பர்களைத் துரோகம் செய்து, கோழைத்தனமாக முகாம் சிறையிலிருந்து ஓடி ஒளிந்துகொண்டார் வின்ஸ்டன் சர்ச்சில்!' என்று கூறியதன் மேல், தேர்தல் முடிந்ததும் அப்படிப் பிரசாரம் செய்தவன் மீது நடவடிக்கை எடுத்தார் சர்ச்சில். எதிரி எதிர் வழக்காடத் துணியவில்லை. ஆகையால் சர்ச்சிலுக்கே ஜயம் கிடைத்தது. மான நஷ்டத்துக்கு அவன் மேல் வேறொரு நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளாமல் அவர் தயை புரிந்தார்.

1911-ல், சர்ச்சில் நாட்டில் ஏற்பட்ட பல கலகங்களையும், வேலை நிறுத்தங்களையும், வர்த்தக நெருக்கடிகளையும் மிகவும் சாமர்த்தியமாக அடக்கி, வேண்டிய சாதனங்களை ஏற்படுத்தி, அமைதியை நிலை நிறுத்தினர்.

# 9. யுத்த முஸ்தீபுகள்

உள் நாட்டில் நெருக்கடிகளைச் சமாளித்துக் கொண்டிருந்த சர்ச்சிலுக்கு வேறு புது வேலைகளும் ஏற்பட ஆரம்பித்தன. ஜெர்மானியர் தங்கள் தொழிலைக் கொஞ்சம் காட்ட ஆரம்பித்தனர். மொராக்கோவில் அகதீர் என்னும் துறைமுகத்திற்கு ஜெர்மானியர் ஒரு யுத்தக் கப்பலை அனுப்பி, பிரெஞ்சுக்காரர்களைப் பயமுறுத்தி வந்தார்கள். 'ஓகோ, ஏதோ பெரிய நெருக்கடி யொன்று உலகத்தில் ஏற்படப் போகிறது!' என்று உடனே சர்ச்சில் உணர்ந்தார். வேறு பலரும் இவ்வாறே நினைத்தனர். லாயிட் ஜார்ஜ், இந்த நெருக்கடியின் விளைவு எப்படி இங்கிலாந்தையும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தையும் பாதிக்குமென்று பலரும் புகழும்படி பல சொற்பொழிவுக ளாற்றினார்.

சர்ச்சிலோ தம் உள்நாட்டு இலாகாவின் அலுவல்களை அவ்வளவாகக் கவனிக்காமல், ஏற்பட விருக்கும் உலக நெருக்கடிக்காக வேண்டிய முயற்சிகளை எடுத்துக்கொள்ளும் காரியங்களில் இறங்கினார். ஜெர்மனியின் இந்த நடமாட்டங்களின் உட்கருத்தை நன்றாக அறிந்தார். ஆயுதச் சாலைகளையும் வெடிமருந்துச் சாலைகளையும் காப்பாற்ற வேண்டிய அவசியத்தை உணர்ந்தார். லாயிட் ஜார்ஜ், ஆஸ்குவித், எட்வர்ட் கிரே, லார்டு ஹால்டேன், சர்ச்சில் ஆகியவர்கள் மட்டும் ரகசியமாய்க் கூடி, வேறு எந்த அரசாங்க அங்கத்தினருக்கும் தெரியாமல், பிரெஞ்சு யுத்தக் காரியாலயத்துக்கும் பிரிட்டிஷ் யுத்தக் காரியாலயத்துக்கு

மிடையே சம்பந்தம் அமைத்து, யோசனைகள் நடத்திவர ஏற்பாடு செய்தனர்.

மறுபடியும் 1911-ஆம் ஸு ஆகஸ்டு மாதத்தில் சபை கூடிற்று. ரகசிய ஆலோசனைக் கமிட்டி கூடிற்று. எதிரி எதிர்க்க ஆரம்பித்த பின் 13 தினங்களில் தான் எதிரியை எதிர்க்கத் தயாராகிவிடுமென்று பிரான்ஸ் சொல்லிற்று. சர்ச்சில், 'அது வீண் கனவு; உங்கள் பலத்தை மட்டும் அவ்வளவு உயர்வாகப் பேசிக்கொள் கிறீர்களே யொழிய, எதிரியின் பலத்தையும் தந்திரத் தையும் கவனிப்பதாகத் தெரியவில்லை' என்று கூறி, யுத்தம் ஆரம்பித்த இருபதாவது நாள் மியூஸ் நதியை விட்டு பாரிஸ் நகரை நோக்கி பிரெஞ்சுக்காரர் பின்வாங்க நேரிடும் என் றும், நாற்பதாவது நாள்வரை எதிரியை விரட்ட முடியா தென்றும், அந்தச் சமயம் ஜெர்மானியர் நாலா பக்கத்தி லும் பரவி வருவார்களென்றும், உடனே ரஷ்யா அவர் களைப் பின்புறமாகத் தாக்கி வருமென்றும் தெரிவித்தார். இவர் தெரிவித்தது போலவே 3 வருஷங்களுக்குப் பின் ஏற்பட்ட உலக மகா யுத்தத்தில் நடந்தது. யுத்தம் ஆரம் பித்த 21-ஆவது நாள் பிரான்ஸ் பின்வாங்கி ஓடியது. மார்னே என்ற இடத்தில் 41 அல்லது 42-ஆவது நாள் பிரான்ஸ் ஜெர்மனியை எதிர்த்து விரட்ட ஆரம்பித்தது.

ஜோஸியம் சொல்வதைப் போல் சர்ச்சில், யுத்தம் நடக்க விருக்கும் 3 வருஷங்களுக்கு முன்பே, இவ்வளவு தெளிவாகவும் சரியாகவும் எழுதிவைத்த ஒரு தஸ்தவேஜைக் கண்டு, ஜெனரல் வில்ஸன் போன்ற பல ராணுவ அதிகாரி கள் அதை ஏளனம் செய்து, 'இது என்ன, புஸ்தகத்தில் படித்த ராணுவ யோசனையே தவிர அநுபவ முறையில்

சொன்னதல்ல. அப்படி ஒன்றும் நடக்காது!' என்று கேலி செய்தார்கள்!

1912-ல் சர்ச்சில் கடற்படை மந்திரியானார். நடக்கப் போகும் யுத்தத்துக்கு வேண்டிய முஸ்தீபுகளைச் செய்யத் தொடங்கினார். கடற்படை பெருகிற்று. பிரம்மாண்டமான பீரங்கிகளெல்லாம் புதிதாகச் செய்யப்பட்டன. யுத்தக் கப்பல்களின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண்டு வந்தது. இடையிடையே அவர் கெய்ஸரிடம் சமரசம் பேசிக்கொண்டுமிருந்தார். கெய்ஸரின் சொற்களுக்குச் சரியான பதில்கள் தெரிவித்து வந்தார். 'எங்களுடைய வியாபார விஷயமாகவும் அந்த வியாபாரத்தைப் பாதுகாக்க வேண்டியுமே நாங்கள் யுத்தக் கப்பல்களை வேண்டிய அளவு வைத்திருக்கிறோம். எங்கள் ஜீவனத்திற்கு இது இன்றியமையாதது என்று உங்களுக்குத் தெரியும். ஆனால் நீங்கள் கப்பற் படையைப் பெருக்கி வருவது ஷோக்குக்காகவே என்று நினைக்கிறேன். நன்றாய்ச் சிந்தித்துப் பாருங்கள். யுத்தத்துக்கென்றே நீங்கள் கப்பற் படையைத் தயாரித்து வந்தால் அதற்காக நாங்கள் பின் வாங்க மாட்டோம். எங்கள் சாம்ராஜ்யத்தைக் காப்பாற்றுவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள நாங்கள் தயாராயிருக்கிறோம். நமக்குள் இருந்துவரும் நட்பும் பெருமையும் கெட்டுப் போகக் கூடாது என்றே நாங்கள் விரும்புகிறோம்' என்று அவர் ஒரு சமயம் கெய்ஸருக்குப் பதில் உரைத்துள்ளார்.

ஒரு சமயம், பிரதம மந்திரி ஆஸ்குவித்தும் சர்ச்சிலும் மத்தியதரைக் கடலுக்குப் போய், மால்டாவிலிருந்த கிச்னரைக் கண்டு யுத்த விஷயமாகப் பேசினார்கள். தமது படை

யில் சேர்த்துக்கொள்ள முடியாதென்றும், பத்திரிகை நிரு பர் போர்வீரனுக அமர்த்தப்பட மாட்டாரென்றும் சர்ச் சிலே வெகு காலமாக ஏளனம் செய்த கிச்னரல்லவா அவர்? இப்பொழுது சர்ச்சில் தமக்குச் சமமான அந்தஸ்தில் இருப் பதைக் கண்ட கிச்னர், பூர்வ கதைகளை மறந்து, சர்ச்சி லிடம் நம்பிக்கையும் மரியாதையும் காட்டினுர். அன்று முதல் இருவரும் பெருமையுடன் ஒத்துழைத்து வந்தனர்.

சர்ச்சில் தம் கப்பற் படைகளுக்கு வேண்டிய யாவற் றையும் தயாரித்தார். 'சிக்கனம், சிக்கனம்' என்று சொல் லிக்கொண்டிருந்தவர், இப்பொழுது சிக்கனத்தையே மறந்துவிட்டார். என்றுலும், கப்பற் படையைப் பொறுத்த வரையில் இவர் எந்தக் காலத்திலும் சிக்கன முறையைக் கையாளும்படி சொல்லவில்லை. பிரடரிக் ராணுவத் திட் டத்தை இவர் எதிர்த்த போதுங்கூட, கப்பற் படையைப் பெருக்கவேண்டு மென்றே பேசினுர். தரைப் படையை விடக் கடற்படையே வருங்காலத்தில் கிரேட் பிரிட்டனின் மரியாதையைக் காக்க வல்லது என்று சொல்லியிருக்கிறுர். அவர் லட்சியத்துக் கிணங்க அவருடைய இலாகாவில், உத்தியோகஸ்தரை உயர்த்தும் விஷயத்தில் அவர் வயதையோ அநுபவத்தையோ கவனிக்கவில்லை. வீரமும், தந்திரமும், ஆற்றலுமே அவருக்கு வேண்டியவை. அந்தக் கொள்கையின்படியே தம் இலாகாவுக்கு வேண்டிய சீர் திருத்தங்களைச் செய்தார்.

அவர் இந்த இலாகாவை நிர்வகித்து வந்த வரையில், அநேகமாய் எல்லா நாட்களையும் சமுத்திரத்தின் மேலும், சமுத்திரத்தின் கீழுமே கழித்து வந்தார். ஒரு சமயம் நீர் மூழ்கிக் கப்பலில் போய்க்கொண் டிருக்கும்போது,

இஞ்ஜின் உடைந்துவிட்டது. நல்ல வேளையாகக் கப்பலின் காப்டன் கப்பலை மிதக்கும்படி செய்து மேலே கொண்டு வந்ததும், அது கரைக்கு இழுத்துச் செல்லப்பட்டது. இவ்வாறு கடற்படையைப் பலப்படுத்திக்கொண்டும், கடல்களுக்கு மேலும் கீழும் ஓடி யோடிப் பல இடங்களையும் நேரில் பார்த்துத் தெரிந்துகொண்டும் மிகவும் தீவிரமாக வேலை செய்துகொண்டிருக்கும்போது, அயர்லாந்தின் சுய ஆட்சி விஷயமாக ஏகப்பட்ட குழப்பங்கள் நடந்துகொண்டிருந்தன. சட்டசபையில் சச்சரவுகளும் விபரீதங்களும் நடந்துகொண் டிருந்தன. இப்பொழுது அதிகாரத்தி லிருந்து வரும் கட்சியைத் தங்கள் 83 ஓட்டுகளைக் கொடுத்து ஆதரிப்பவர்க ளல்லவா ஐரிஷ் நேஷனல் கட்சியினர்? அவர்களைச் சமாதானப்படுத்த விரும்பி, சர்ச்சில் அயர்லாந்துக்குப் போய், அநேக இடையூறுகளுக் கிடையே பிரசங்கங்கள் செய்து, அயர்லாந்தின் விருப்பத்தைத் திருப்தி செய்வதாக வாக்களித்து வந்தார்.

நடக்கப் போகும் யுத்தத்துக்குத் தக்கபடி கடற்படையில் அநேக முக்கிய ஏற்பாடுகள் செய்யப்பட்டதற்கு சர்ச்சிலே எல்லா வித கௌரவத்திற்கும் பாத்திய முடையவர். நிலக்கரியிலிருந்து எண்ணெய் எடுப்பதற்கும் இவரே காரணம். எதிரியைத் தாக்குவதற்கு வேண்டிய நவீன விதமான யுத்த தளவாடங்கள் தயாரித்ததற்கும், ஜெர்மனியின் வர்த்தகத்தை ஆங்காங்கே தடுக்கவும், ஜெர்மானியர் வடகடலுக்கு வந்து யுத்தம் செய்யும்படி வற்புறுத்தவும் திட்டங்கள் வகுத்ததற்கும் இவரே காரணம். சென்ற மகா யுத்தத்தில் வெற்றி பெற்றதற்கு இவருடைய யோசனைகளே முக்கிய காரணங்களாகும். யுத்த முஸ்தீபு சம்பந்தமான

முக்கியமான அலுவல்களுக்கிடையே அவர் சட்டசபை நடவடிக்கைகளையும் மறந்துவிடவில்லை.

அயர்லாந்தின் சுய ஆட்சி மசோதாவை இரண்டாம் முறையாக வாசித்தார் சர்ச்சில். சர்ச்சிலின் தந்தையார் அயர்லாந்தின் உப்பைத் தின்று வளர்ந்தவ ரல்லவா? அவருக்கு ஐரிஷ் கோரிக்கையில் அபிமானம் உண்டு. 'அல்ஸ்டர் சண்டையிடும். அல்ஸ்டருக்கு உரிமையுண்டு' என்பார் அவர். ஆனல், இந்த விஷயத்தில் சர்ச்சில் மாறுபட்டவர். ஐரிஷ் தேசீயவாதிகளை அவர், 'கற்களை எடுத்து அடிக்கும் வெறியர்கள்' என்றும், 'கைத் துப்பாக்கியைத் தூக்கிக்கொண்டு வெறி பிடித்து அலையும் மிருகங்கள்' என்றும் சொல்லிவிட்டார். இதுவும் கால வித்தியாசம் போலும்! மசோதாவின் ஒரு பாகம் ஓட்டுக்கு விடப்பட்ட போது, சர்க்காரின் முக்கிய கொரடாக்கள் தூங்கிக்கொண் டிருந்ததின் விளைவாக சர்க்கார் தோற்றது. இந்தச் சிறு தோல்வியை ஆதாரமாகக் கொண்டு மந்திரிகளை ராஜீநாமா செய்யச் சொன்னர்கள். ஆஸ்குவித் மறுக்கவே, ஸர் வில்லியம் புல் என்பவர் ஆஸ்குவித்தை 'ராஜத் துரோகி' என்று சொன்னர். அதனல் அந்த அங்கத்தினர் வெளியில் விரட்டப்பட்டார். மற்ற சர்க்கார் அங்கத்தினர்கள் பேச எழுந்திருக்கும்போதெல்லாம் ஏகக் கூச்சல் போட்டுப் பேச வொட்டாமல் தடுத்துவிட்டனர் அங்கத்தினர். சபைத் தலைவர் தற்காலிகமாகச் சபையைக் கலைத்தார். எல்லோரும் வெளியேறுகையில் ரோனல்டு மாக்நீல் என்னும் ஒருவர் சர்ச்சிலின் முகத்தில் ஒரு புத்தகத்தைப் பலமாக எறிந்தார். நல்ல

அடிதான். அது என்ன புத்தகம் தெரியுமா? ‘பார்லி மெண்டின் விதிகளும் ஒழுங்குகளும்’ என்னும் புத்தகம்! சர்ச்சிலேச் சுற்றி ஒரு கும்பல் கூடிவிட்டது. நல்ல வேளே யாகச் சில நண்பர்கள் சர்ச்சிலே மெதுவாக அங்கிருந்து அப்புறப்படுத்தினர்கள்.

சர்ச்சிலுடைய வாசஸ்தலம் கடற்படை மந்திரிக் கென்று அமைக்கப்பட்ட வீட்டுக்கு மாற்றப்பட்டது. அவருடைய விருந்துகள் பிரசித்தி பெற்றவை. சாப்பிடும் போது அவர் வெகு உல்லாசமா யிருப்பாராம். சில சமயங் களில் ஏதாவது ஆழ்ந்த யோசனேயில் இருந்துவிடுவாராம். யார் என்ன பேசினலும் அவர் யோசனே கலேயாதாம். பேச ஆரம்பித்தாலும் அப்படியேதான், ஏகாக்ரக சிந்தை!

சட்டசபையில் எவ்வளவு மும்முரமாகவும் முரட்டுத் தனமாகவும் பேசினலும், மிகவும் ஒழுங்கான முறையையே அவர் கையாண்டு வருவார். தம் பேச்சுக்களேப் பத்திரிகை களுக்கு அனுப்புவதற்கு முன்பு நிருபர்களிடமிருந்து அவற்றை வாங்கிச் சரிபார்த்துக் கொடுப்பார். அவருக்கு பிரெஞ்சு பாஷை அவ்வளவாகத் தெரியாது. ‘என் பிரெஞ்சு ஓட்டை வண்டிக்குச் சமானம்’ என்பார். வண்டி ஓட்டையா யிருந்தாலும் அது தன் பிரயாணத்தை மெதுவாக எப்படி முடித்துவிடுகிறதோ, அதுபோல் எப்படியோ உளறிக் கொட்டி, அவர் பிரெஞ்சு பாஷை யில் பேசியும்விடுவார். ‘ஜெர்மன் பாஷை தெரியுமா?’ என்று யாராவது கேட்டால், “ஜெர்மனியின் ராணுவம் பிரிட்டிஷ் கால்வாயைத் தாண்டி வரும் வரையில் அந்தப் பாஷையில் எனக்கு அபிவிருத்தி ஏற்படாது!” என்பா ராம்.

1913-ம் வருடம் அயர்லாந்து சுயாட்சி மசோதா மறுபடியும் விவாதத்திற்கு எடுத்துக்கொள் ளப் பட்டது. அயர்லாந்தின் யூனியனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த போனர்லா என்பவர், 'தேசிய அயர்லாந் தாவதற் குப் பதில், அந்நிய ஆட்சிக்கு உட்பட்டுவிடும் போலிருக் கிறது!' என்று சொன்னர். சர்ச்சில் உடனே கிண்டலாக மறுத்துச் சொன்னர். 'அல்ஸ்டர் சுயாட்சி வருவதற்குள் அது ஜெர்மனியைச் சேர்ந்துவிடும் போலிருக்கிறது' என்று அவர் கேலியாக உரைத்தார்.

அதன்பின் வர்த்தக சங்க விஷயமாய் ஒரு மசோதா கொண்டுவந்து எவ்வளவோ இடையூறுக ளிருந்தும் அதைச் சட்டமாக்கி வைத்தார். அதுவே வர்த்தக சங்கச் சட்டம். அதன்படி வர்த்தக சம்பந்தமான புகார்களை வர்த்தக சங்கத் தாரே நிவர்த்தித்துக்கொள்ள வேண்டியது. அப்பொழுது சர்ச்சில் மிகவும் ஆத்திரத்துடன் இந்தச் சட்டத்தைக் கொண்டுவந்துவிட்டு, பதினன்கு வருஷங்களுக்குப் பிறகு அதைத் திருத்தியமைக்க அரும் பாடு பட்டார்.

பிறகு 1913, மார்ச் மாதத்தில் கடற்படைகளின் செலவுத் திட்டத்தைச் சபையின் முன்பு சமர்ப்பித்தார். அவரைப் பேசவிடாதபடி சபையில் கலவரம் நடந்தது. பேசு வதற்கு கன்ஸர்வேடிவ் கட்சியினரும் மற்றவர்களும் இடமே கொடுக்கவில்லை. அந்தச் சமயத்தில் போனர்லா எழுந்து, 'நீர் கையாளும் முறையையே எதிர்க் கட்சியினர் இப்பொழுது கையாண்டு வருகிருர்கள்!' என்று சொன் னர். இதற்குச் சர்ச்சில் அளித்த சூடு வருமாறு: 'அதைப் பற்றி எனக்கு அக்கரையில்லை. சபையின் நடவடிக்கை களைக் கவனித்துக்கொண்டுதான் இருக்கிறேன். ராணுவ

சம்பந்தமான முக்கிய விஷயங்களைச் சபையோர் நிதான மாக விவாதம் செய்து ஒரு முடிவுக்கு வருவதைப் பற்றி நான் சந்தோஷப்படுகிறேன். ஆனால் சபையில் நடக்கும் விதண்டாவாதங்களுக் கிடையே நம் எதிரிகள் நம் தேசத் தின்மீது படையெடுத்து வர முயற்சிப்பதை மறக்கக் கூடாது. இப்பொழுது ஏற்பட்டிருக்கும் உலக நெருக்கடியை மறந்து இப்படிக் காலம் கடத்திச் சென்றால், முடிவில் வருந்து வது கடற்படை யல்ல — தேசந்தான் என்பதைக் கனம் அங்கத்தினர்கள் உணரவேண்டும்.'

சபையின் கோடைகாலக் கூட்டத்தில், சர்க்காரின் பிரதம வக்கீல் மீதும், லாயிட் ஜார்ஜ் மீதும், மார்க்கன் கம் பெனியில் ஏதோ பங்குகள் எடுத்துக்கொண்ட விஷயமாகக் குற்றம் சாட்டப்பட்டு, அதை விசாரிக்க ஒரு கமிட்டி நியமிக்கப் பெற்றது. இது விஷயமாக வாக்குமூலம் கொடுக்க அந்தக் கமிட்டியார் சர்ச்சிலை அழைத்திருந்தார் கள். சர்ச்சில் வந்ததும், 'இந்த ஆபத்தான வேளையில், மிகவும் மும்முரமாக எனது இலாகாவில் நான் வேலை செய்துகொண்டிருக்கும் பொழுது, ஆதாரம் சிறிதும் இல் லாத நொண்டிக் குற்றச் சாட்டுக்கு வாக்குமூலம் கொடுக்க என்னை அழைத்துவிட்டீர்களே! பிரஜைகள் உள்ள இந்த உலகத்தின் எந்தப் பாகத்திலும் சரி, இங்கிலாந்திலும் சரி, அந்நிய நாட்டிலும் சரி, நேர்முகமாகவோ, மறைமுக மாகவோ, பங்குகளுக்கோ, கூட்டுகளுக்கோ, எந்தக் கம்பெனியிலும் எனக்கு யாதொரு சம்பந்தமும் இல்லை' என்று சொல்லிவிட்டு, நெப்போலியனைப் போல் பின்னால் கையைக் கட்டிக்கொண்டு நடந்து போனாராம்! கமிட்டி யின் விசாரணை முடிந்ததும், லாயிட் ஜார்ஜுக்கும், பிரதம

வக்கீலுக்கும் ஒரு விருந்து நடந்தது. அதற்குச் சர்ச்சிலும் அழைக்கப்பட்டிருந்தார். அவர் மிகவும் தாமதித்துப் போனதால் விருந்து நடக்கும் வீட்டின் கதவு அடைக்கப் பட்டிருந்தது. அவர் பலங்கொண்ட வரையிலும் கதவை இடித்துப் பார்த்தார். உண்பதிலேயே கவனத்தைச் செலுத் திய விருந்தினர் யாரும் இதைக் கவனிக்கவில்லை. சர்ச்சில் சமையலறைப் பக்கம் போய், சுவரில் ஏறிக் குதித்து, உள்ளே வந்தார். சாப்பாடெல்லாம் முடிந்த பிறகு, அவர் பேசிய பொழுது, அன்று நேர்ந்த அவமானத்தால் தோன்றிய கோபத்தின் வேகம் வெளிப்பட்டது. முடிவில், 'நம் கட்சி யின்மேல் ஏற்பட்ட துவேஷத்தால் எதிர்க் கட்சியினர், ஆதாரமற்ற, அபாண்டமான குற்றத்தை நம் நண்பர்களின் மீது சுமத்தியதைக் கண்டு நான் வருந்துகிறேன்,' என்று கூறினர்.

பின்பு ஒரு சமயம் கடற்படை இலாக்கா அதிகாரி ஏதோ சில எண்ணெய்க் கம்பெனிகளில் பங்கு எடுத்துக் கொள்ளப் பேசி வருவதாகக் குற்றம் சாட்டப்பட்டது. இது சட்டசபையில் விவாதிக்கப்பட்டது. விசாரணையின் போது சர்ச்சில் கூறிய பதில் வருமாறு: 'பங்கு எடுத்துக் கொள்ள முயற்சித்தது உண்மை; ஆனால் அதற்கு வேண்டிய பொருள் இல்லையென்று தெரிவித்துவிட்டதால் இதைப் பற்றிய யோசனை நிறுத்தப்பட்டிருக்கிறது. என் றாலும் இப்படிப்பட்ட யோசனைகளில் நாட்டின் க்ஷேமத் தையும் தற்காப்பையும் உத்தேசித்து நாம் பங்குகள் எடுத் துக்கொள்வது குற்றமாகாதென்று சபையோர் உணர வேண்டும். மேலும் லார்டு மர்ரேயைப் போன்ற கோடீச் வரர்கள் கூட இந்த எண்ணெய்க் கம்பெனியில் பங்குகள்

வாங்கிக்கொள்ளவில்லை என்னும் உண்மை எல்லோரும் அறிந்ததே. லார்டு மர்ரேயைப் போல் இருபது பேர் இருந்து ஒவ்வொருவரும் இருபதினாயிரம் பங்குகள் எடுத்துக்கொண்டாலும், லிபரல் கட்சியின் இறந்தகால, நிகழ்கால, வருங்கால நிதிகள் பூராவும் போட்டுப் பங்குகள் எடுத்துக்கொண்டாலும், கடற்படை இலாக்காவுக்கும் இதற்கும் என்ன சம்பந்தம் ஏற்பட்டுவிட்டது என்று எனக்குப் புரியவில்லை!' இதனால் பகைவர் வாய் அடைக்கப் பட்டது.

1913, நவம்பரில் பிரிட்டிஷ் கப்பற் படையைப் பெருக்கி எந்த எதிரியையும் எதிர்க்கத் தக்க வலியுடையதாகச் செய்வதில் சர்ச்சில் முனைந்திருந்தார். தற்காப்புக்காகவும், பகைவரின் விமானப் படைகளை எதிர்த்து நிற்பதற்காகவும் வேண்டிய முக்கியமான மூலப் பொருள்களைத் தேடுவதே அவருக்குத் தொழிலாகிவிட்டது. அவரைப் பலரும் ஒரு பித்தர் என்று கருத ஆரம்பித்தனர். சமய சந்தர்ப்பங்களைக் கவனிக்காமல், எப்பொழுதும் அமைதியையே குருட்டுத்தனமாக விரும்பி நிற்கும் அங்கத்தினர் பலர் பார்லிமெண்டில் இருந்தனர். எதற்கெடுத்தாலும், 'சிக்கனம்! அமைதி!' என்ற பல்லவியே அவர்களுக்குப் பாடம். வல்லமை மிக்க லாயிட் ஜார்ஜ்கூட இந்த இனத்தைச் சேர்ந்திருந்தார். இவர்களுடைய பிரயாசையால், ராணுவச் செலவு நாளுக்கு நாள் ஏராளமாகப் பெருகி வருவதைக் கண்டிக்க ஒரு பெரிய மகாநாடு கூட்டப்பட்டது. பொது மேடைகளிலும், பத்திரிகை வாயிலாகவும் சர்ச்சில் எத்தனையோ சமாதானங்களை எடுத்துக் கூறியும் பயன் படவில்லை. 1914-ஆம் வருஷம், 'டேய்லி கிரானிகிள்' பத்

திரிகையின் புது வருஷ மலரில், சமீபத்தில் நடந்த ஆப்பிரிக்க யுத்தங்களால் நாட்டுக்கு ஏற்பட்ட பொருளாதார நெருக்கடியை உத்தேசித்தும், ஜெர்மனியின் ஆக்ரோஷத்தைக் கிளப்பிவிடக் கூடாது என்பதை உத்தேசித்தும், கப்பற்படை இலாகா மந்திரி தம் செலவுத் திட்டங்களைக் குறைத்துக்கொள்வது நல்லது என்று லாயிட் ஜார்ஜ் எழுதியிருந்தார். சர்ச்சிலின் கட்சியைச் சேர்ந்த ஒரு பெரிய தலைவர், அவருடைய அந்தரங்க நண்பர் லாயிட் ஜார்ஜே இப்படி எழுதியிருந்ததால், ஏற்கனவே சர்ச்சில் மேலுள்ள ஆத்திரமும் பொறாமையும் அதிகரித்தன. எதிர்க் கட்சியினரும் போதுமான தூபம் போட்டனர். இதனால் சர்ச்சிலுக்குப் பல இடையூறுகளும் சஞ்சலங்களும் ஏற்பட்டன. தேச நன்மைக்காக உழைப்பவர்களுக் கெல்லாம் பலமான எதிர்ப்பும், எதிர்பாராத இடையூறுகளும் ஏற்படுவது இயற்கை யல்லவா? இந்தச் சோதனைகளி லெல்லாம் தேறுபவரே வெற்றி பெறுகின்றனர்.

முன்வைத்த காலைப் பின்வாங்காதவர் சர்ச்சில். இந்தப் பூச்சாண்டிக் கெல்லாம் அவர் அஞ்சவில்லை. பிரிட்டனில் அதிர்ஷ்டதேவி அவருக்கு ஊக்க மளித்தாள். 1914, மார்ச் மாதத்தில், பார்லிமெண்டின் சரித்திரத்திலேயே பார்த்திராத அவ்வளவு பெரியதொரு கடற்படைச் செலவு மசோதாவைச் சபையின் முன்பு சமர்ப்பித்தார் சர்ச்சில். சபையில் ஏற்பட்ட எதிர்ப்பின் வேகத்தைச் சொல்லவேண்டியதில்லை. அவரை மந்திரிப் பதவியிலிருந்து விலக்கிவிடும்படி பிரதம மந்திரிக்குப் பல வேண்டுகோள்கள் வந்தன.

இந்தச் சமயத்தில் ஐரிஷ்காரர்களின் கலகம் அதிகரித்தது. இதன் விளைவைச் சர்ச்சில் யூகித்தார். ஸ்காட்லாந்

தின் மேற்குக் கடற்கரையிலுள்ள பர்த் ஆப் க்ளேட் (Firth of Clyde) என்ற இடத்துக்கு அருகிலுள்ள அர்ரான் என்ற தீவுக்குச் சில போர்க் கப்பல்களை அவர் அனுப்பிவைத்தார். சபையில் இந்த ஏற்பாட்டைப் பலமாகக் கண்டித்துத் தக்க சமாதானம் கூறும்படி கேட்டபோது, 'அயர்லாந்தின் போக்கைக் கவனித்தால் ஏதாவது ஓர் ஆபத்து சமீபத்தில் ஏற்படுமென்று தோன்றுகிறது. நாமும் தயாராயிருக்கவேண்டாமா? கப்பற் படையின் ஒரு பகுதியை அங்கு அனுப்பிப் பயிற்சி செய்துகொண்டிருக்கும்படி ஏற்பாடு செய்திருக்கிறோம்' என்று தெரிவித்தார்.

கோடைகாலம் வந்தது. கப்பற் படையின் தொகையையும் பலத்தையும் உலகத்திலுள்ள வல்லரசுகள் அறியும்படி, படைகள் சமுத்திரத்தில் சில விடங்களுக்குச் சென்று விளையாட்டாகச் சில வேடிக்கைகளும், ஒத்திகைகளும் செய்வது சாதாரணமாய் நடந்துவரும் வழக்கம். 'யுத்தம் நடக்குமானால் நம் கப்பற் படையின் சாமர்த்தியத்தை நாம் அறிந்துகொள்ள வேண்டாமா?' என்று நினைத்து, அதன் பிரகாரமே இந்தக் கோடைகால வைபவத்தை நடத்தினர். ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் அதை வந்து பார்த்து மிகவும் திருப்தி யடைந்தார். கப்பற்படை விஷயத்தில் விசேஷத் தந்திரமும் அநுபவமும் உள்ளவரல்லவா நமது மாஜி மன்னர்? அவரும்கூட, கப்பற் படையில் ஏற்பட்டிருக்கும் அதிசயமான முற்போக்குகளையும் சீர்திருத்தங்களையும் கண்டு, சர்ச்சிலின் இணையில்லா யோசனையையும் ஆற்றலையும் மனமாரப் பாராட்டினர். இந்தச் சம்பவங்கள் 1914, ஜூலை மாதம் 15, 16, 17, 18 - ஆம் தேதிகளில் நடந்தன. உலக மகா யுத்தம் ஆரம்பிக்க மேற்கொண்டு சில நாட்களே

இருந்தன என்பதை வாசகர்கள் யோசித்துப் பார்க்க வேண்டும். ஜுலை மாதக் கடைசி வாரத்தில், ஸர் எட்வர்டு கிரே என்பவர், 'யுத்தம் நெருங்கிவிட்டது. சர்ச்சிலை நிந்தித்தவர்களின் கண்கள் திறக்கப்படுவதற்கும் சமயம் வந்துவிட்டது!' என்று மந்திரி சபைக்குத் தெரிவித்தார்.

ஜுலை 27-ஆம் தேதியன்று, 'எந்த நிமிஷத்திலும் யுத்தத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்' என்று சர்ச்சில் தம் கமாண்டர்களுக்குத் தெரிவித்தார். இரண்டு தினங்களுக்குப் பிறகு கப்பற் படைகளுக்குச் சில முக்கிய உத்தரவுகள் கொடுத்தார். பகற் காலத்தில் கப்பல்களின் நடமாட்டத்தை எதிரிகள் பார்க்கக்கூடு மென்றும் விடிந்துவிட்டால் கப்பற் படைகள் நிற்கவேண்டிய முக்கிய ஸ்தானங்களைச் சேரவொட்டாமல் எதிரிகள் தாக்கித் தடுத்து விட நேரிடு மென்றும், அன்று இரவிலேயே ரகசியமாகக் கப்பல்கள் அந்தந்த இடங்களுக்குச் சென்று நின்று யுத்த முழக்கத்தை எதிர்பார்த்த வண்ணமாய் இருக்கவேண்டு மென்றும் உத்தரவு கொடுத்தார்.

உடனே பார்லிமெண்டின் ரகசியக் கூட்டம் ஒன்றைக் கூட்டுவித்து, 'இதுவரையில் ராணுவச் செலவுகளையும், ராணுவ மந்திரியின் "பைத்தியக்கார" நடத்தைகளையும் கண்டித்துவந்த எதிர்க் கட்சியினரே! என்ன செய்கிறீர்கள்?' என்று அறைகூவினர். எல்லோரும் ஏகமனதாக, 'நாங்கள் மந்திரி சபையை மனப் பூர்வமாக ஆதரிக்கிறோம். குறிப்பாக, பெல்ஜியத்தின் பிரதேச உரிமை ஜெர்மனியால் பாதிக்கப்படுமானல் நாங்கள் சகிக்கமாட்டோம்' என்றனர்.

ஆகஸ்ட் மாதம் முதல் தேதி மந்திரி சபை கூடிற்று. ரிஸர்வ் படைகளைத் திரட்டவேண்டுமென்று சர்ச்சில் கூறினார். நீண்ட நேரம் விவாதித்த பின் அந்த யோசனை புறக் கணிக்கப்பட்டது. அதே நாள் மாலை நேரத்தில், ஜெர்மானியர் ரஷ்யாவைத் தாக்கின செய்தியைச் சர்ச்சில் தெரிந்து கொண்டு, மந்திரி சபையின் தீர்மானத்தை லட்சியம் செய்யாமல், பொறுப்பு முழுவதையும் தம் தலைமேல் ஏற்றுக் கொண்டு, கப்பற் படைகளுக்கு உதவியாக ரிஸர்வ் படைகளை நாடெங்கும் திரட்டலானார். என்னே இவரின் தைரியம்! தம் நாட்டைக் காப்பாற்றுவதில் சர்ச்சிலைவிட உண்மையான தேசீயவாதி வேறு யாராவது உண்டா? தாம் செய்யத் துணிந்த எற்பாடுகள் வியர்த்தமாய்ப் போய் விட்டால் இவர் கதி என்ன? உலகத்திலுள்ள கடுமையான சட்டமெல்லாம் இவரை எதிர்த்து நிற்கும். இவர் கதியும் அதோகதி யாகும். ரிஸர்வ் படைகளைத் திரட்ட வேண்டுமானால் அது சாமானியமாய் முடியாத காரியம். முதலில் மந்திரி சபையின் அனுமதி வேண்டும். அரசருடைய அனுமதியும் கையெழுத்தும் வேண்டும். மேலும், சட்ட ரீதிக்கு உகந்ததா யிருக்கவேண்டும். இவ்வளவையும் அலட்சியம் செய்தார் சர்ச்சில்.

சில நாட்களுக்குப் பிறகு கடற்படை மந்திரி காரியாலயத்தில் அவர் அமர்ந்திருக்கும் சமயம் லார்டு கிச்னர் அவரைக் கண்டார். அப்பொழுது சர்ச்சில் தம் நோக்கத்தை அறியாது தம்மை வீணே வாட்டிவரும் ஜனங்களின் விஸ்வாசமற்ற அவதூறுகளை எண்ணி வருந்திக் கொண்டிருந்தார். லார்டு கிச்னர் அவரை அணுகி, 'அன்பு மிக்க சர்ச்சில்! உமது உத்தியோகத்தை சர்க்கார்

பிடுங்கிக்கொண்டாலும், உம்மிடமிருக்கும் கடற்படையைப் பிடுங்க முடியாது. எதிரிகள் படையும் தயார்! உமது படையும் தயார்!' என்று ஹாஸ்யமாகவும் திடீரென்றும் சொன்னூர். அன்றிரவு 11 மணிக்கு சர்ச்சில் பிரதம மந்திரியைப் பார்க்கப் போனூர். தங்களுக்குள் ரகசியமாக ஏதேதோ பேசிக்கொண்டனர் இருவரும்.

மறுதினம் பிரதம மந்திரி பார்லிமெண்டைப் பார்த்து, 'யுத்தம் நடக்க ஆரம்பித்துவிட்டது. நம் கடற்படை, தயாராய் எதிரியின் படைகளை நோக்கிய வண்ணமாய் நிற்கிறது!' என்று சபையோர் பிரமிக்கும்படி சொன்னூர். அந்தச் சமயம் பிரதம மந்திரி ஆஸ்குவித்தின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகி வழிந்தது.

யுத்தத்தின் நாற்றத்தை மோப்பம் பிடிக்கும் விசேஷ அறிவிலும், அதற்குத் தக்க முஸ்தீபுகளைச் செய்வதிலும், நெப்போலியனைத் தவிர வேறு யாரும் சர்ச்சிலுக்கு இணையாக உலகத்தில் இல்லை என்று எல்லோரும் கருதினர்.



ஒரே நாளில் 37 ஜெர்மன் விமானங்களைச் சுட்டு வீழ்த்திய பிரிட்டிஷ் விமானிகள்

## 10. மகா யுத்த ஆரம்பம்

தேச சேவையில் ஈடுபட்டுக் கண்ணும் கருத்து மாய் உழைத்துவரும் ஒவ்வொருவருக்கும் பல விதச் சோதனைகளும் இடையூறுகளும் சம்பவிப்பது சகஜ மல்லவா? மகாஜனங்களிடையே பல்வேறு கொள்கை களும் அபிப்பிராய பேதங்களும் இருந்துவருவது இயற்கை தானே! நாட்டுக்கு நன்மையைத் தேடும் பணியில் இறங்கி விட்டால், வீண் பழிகளுக்கும் அவதூறுகளுக்கும் செவி கொடுக்காது, தம் மனச்சாட்சியே தெய்வம் எனக்கொண்டு ஊழியம் செய்துவரவேண்டும் என்பதே சர்ச்சிலின் கொள்கை. தவறின்றி எதிர்காலத்தை உணரும் சக்தி யிலும், ஊக்கத்திலும், தைரியத்திலும், சமயம் நேரும் பொழுது போர்க்களத்தில் குதித்து எதிரிகளை முறியடிக் கும் பல தந்திரங்களிலும் சர்ச்சில் அநேகமாக நெப்போலி யனை ஒத்திருந்தார். எனவே, அவருடைய 40-ஆவது வயதி லேயே பிரிட்டிஷ் கடற் படைக்கே ஒரு நூதன முறையில் புத்துயிர் கொடுத்து அதைப் பெரும் போருக்கும் தயாராக்கி விட்டார். யுத்த சம்பந்தமான இலாகாக்களை அவருடைய அதிகாரத்தில் விட்டுவிட்டால் அவருடைய ஒப்பற்ற யோசனைகளைக் கூறி முழுத் திறமையும் காண்பித்துவிடு வார். இந்த விஷயத்தில் அவருடைய ஆற்றலின் விசேஷமே அலாதியானது. அரசாங்கமே எதிர்த்து நின்ற போதிலும் தாம் எடுத்த வேலையை நிறுத்த மாட்டார். ஏனெனில் அவர் எடுக்கும் முயற்சிகள் முடிவில் தேசத்திற்கு அரண்களாக-

நின்று உதவும் என்பதில் அவருக்குச் சந்தேகமே கிடையாது.

முதலாவது உலக மகா யுத்தம் ஆரம்பித்துவிட்டது. இன்னும் பத்து மாதங்களுக்குள் யுத்த மந்திரி ஸ்தானத்திலிருந்து அவர் விரட்டிவிடப் படுவார். யுத்த ஆலோசனைச் சபையின் அங்கத்தினர் பதவியிலிருந்தும் நீக்கப்படுவார். பொதுஜனங்களின் ஆதரவை முற்றிலும் இழந்துவிடுவார். போர் ஆரம்பித்த சில மாதங்களுக்குள் ஆன்ட்வெர்ப்பிலும், டார்டனெல்ஸிலும் நிகழ்ந்த நேசதேசக் கட்சியின் படையெடுப்புக்கள் தோற்றுப் போய்விட்டன. இந்தப் படையெடுப்புக்களுக்கு சர்ச்சில் ஒருவரே காரணமா யிருந்ததாகக் கூறினர். மற்றவர்களுடைய மூடத்தனத்தினுலேயே இந்த இரண்டு படையெடுப்புக்களும் தோற்றன என்ற உண்மையை அரசாங்கத்தார் உணரவில்லை. சர்ச்சில் ஒருவரின் துடுக்கே இத்தகைய அவமானத்திற்கும் கஷ்டங்களுக்கும் காரணமென்று அவரைத் தூஷித்தது மன்றி அவரைப்பற்றி விசாரிக்க ஒரு கமிட்டியையும் அமைத்தனர்.

மற்ற இலாகாக்கள் மூலமாய்த் தேசத்திற்கு வரப் போகும் ஆபத்துக்களைச் சிறிதும் பொருட்படுத்தாது சர்ச்சில் தம் இலாகாவை மாத்திரம் கவனித்து வந்திருந்தாரானல் அவரை ஒருவரும் நிந்தித்திருக்க முடியாது. அவர் கடற் படையில் கையாண்ட நூதன முறைகளைக் கண்டு ஜெர்மனி அஞ்சிற்று. 'கடற்போர் நடத்தினுல் ஜெர்மனிக்கு அதோகதிதான்!' என்று ஜெர்மன் தளகர்த்தர்கள் நினைத்து நடுங்கினுர்கள். பாக்லண்டு தீவுகளில் நடந்த கடல் யுத்தத்திற்குப் பிறகு ஜெர்மன் படையின் பலமும் தைரியமும் குறைந்துவிட்டது. ஆகவே, ஜெர்மனி,

கடலின் மேற்பரப்பில் வெளிப்படையாக நின்று புரியும் யுத்தத்தைக் கைவிட்டு, கடலின் உட்புற யுத்தத்தில் மூனேந்தது. அச்சமயம் சர்ச்சில், 'எது எப்படியானுல் நமக்கென்ன? நமக்கு இட்ட வேலையை நாம் ஒழுங்காய்ப் பார்த்துக்கொள்வோம்' என்று மட்டும் கருதியிருந்தாரானுல் அவருடைய பெயருக்கும் கீர்த்திக்கும் ஒரு பழுதும் ஏற்பட்டிருக்காது. ஆனுல் அவர் அத்தகைய மனப்பான்மையுடையவரல்லர். சந்தர்ப்பம் ஏற்பட்ட போதெல்லாம் எந்தத் துறையிலும் கூசாமல் குதித்து, எப்படியாவது தாய் நாட்டிற்கு வெற்றி கொண்டுவரவேண்டும் என்பதே அவர் எண்ணம்.

கட்டாய ராணுவப் பயிற்சி இங்கிலாந்து முழுவதும் ஏற்படவேண்டுமென்று லார்டு கிச்னர் கேட்டபொழுது அந்த வேண்டுகோளை மனப்பூர்வமாக உடனே ஆமோதித்துப் பேசினுர் சர்ச்சில். இதனுல் அவர் கட்சியைச் சேர்ந்த நிர்வாகசபை அங்கத்தினர் பலருக்கு அவர்மீது வெறுப்பும் சந்தேகமும் உண்டாயிற்று.

யுத்தம் தொடங்குவதற்கு முன்பும், யுத்தம் தொடங்கிய தினத்திலிருந்தும் பிரிட்டனின் பாதுகாப்புக்காகச் சர்ச்சில் சில யோசனைகள் கூறிவந்தார். பிரிட்டிஷ் கால்வாய்த் துறைமுகங்களைப் பலப்படுத்தி, முன்னெச்சரிக்கையாக இருக்கவேண்டிய அவசியத்தையும், ஹாலண்டு, பெல்ஜியம் முதலிய இடங்களில் ஜெர்மன் படையெடுப்பும் முன்னேற்றமும் நடவாதிருப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் சுணக்கமில்லாமல் செய்துகொள்ளவேண்டிய முறைகளையும் அவர் பலமுறை சர்க்காருக்கு எடுத்துச்சொல்லியிருக்கிறுர்.

இதெல்லாம் 'சிறுபிள்ளை யோசனை' என்றும், 'அநுபவ முறையில் சொல்லப்படுபவை யல்ல' என்றும் எண்ணி அவர்கள் அசட்டை செய்துவிட்டனர். யுத்தம் ஆரம்பித்த இரண்டு மாதங்களுக்குள்ளாகவே ஜெர்மானியர் ஆன்ட்வெர்ப்பை நெருங்கிவிட்டனர். அப்பொழுது 'அடடா, சர்ச்சிலின் எச்சரிக்கைகளை இகழ்ந்தோமே! அவர் மனத்தையும் புண்படுத்தினேமே!' என்று அரசாங்கத்தார் வருந்தி அவரையே அழைத்து யோசனை கேட்கும் அவசியத்தை உணர்ந்தனர்.

யுத்த விஷயமாக ஒன்றுமே தெரியாத சர்வ சூனியர்களின் ஆலோசனைச் சபையில் பேசிப் பேசிக் காலத்தை வீணே போக்குவதில் சர்ச்சிலுக்குப் பிடிக்கவில்லை. போர் முனையைப் போய்ப் பார்த்துவிட்டு நேசதேசக் கட்சியின் தளபதியைக் கண்டு ஆகவேண்டிய காரியங்களைப்பற்றிப் பேசிவிட்டு, இருவருமாக ஒரு வைக்கோற் போரின்மீது ஏறி நின்று, யுத்தத்தின் போக்கைக் கவனித்தார்கள். ஏற்கனவே ஐந்து சிறு யுத்தங்களில் ஈடுபட்டு, ஆறுவது முறையாக இந்த மகா யுத்தத்தில் தாம் கலந்துகொள்ளப் போகும் சமயத்தை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் சர்ச்சில். இங்கிலாந்துக்குத் திரும்பி வந்தார். மறுபடியும் அக்டோபர் 2-ஆம் தேதியன்று டன்கர்க்குக்குப் போவதற்காக லண்டனிலிருந்து ரயில் ஏறினர். 20 மைல் பிரயாணம் செய்ததும் திடீரென்று பயணத்தை நிறுத்தி லண்டனுக்குத் திரும்பினர். லார்டு கிச்னர் வீட்டுக்கு நேரே சென்றார். கிச்னரும் இவரைக் கலந்து ஆலோசிக்க வேண்டுமே யென்று ஆவலுடன் இருந்தார். பெல்ஜியத்தைப் பாதுகாத்துக்கொண்டிருந்த சேனைகள் ஆன்ட்வெர்ப்பைக் காலி

செய்து கொண்டிருக்கும் தகவல் முன்புதான் கிச்னருக் குக் கிடைத்தது. 'எந்த விதத்திலும் துறைமுகத்தைக் காப் பாற்ற வேண்டுமே!' என்று சர்ச்சில் கூறியதைக் கிச்னர் பாராட்டி, உடனே அவர் ஆன்ட்வெர்ப்புக்குப் போய் முடிந்த வரையில் எதிரியின் சேனைகளை எதிர்த்து நிற்கும் படி சொல்லி, புதுச் சேனைகளை உதவிக்கு அனுப்புவதாகவும் வாக்குக் கொடுத்தார். உடனே சர்ச்சில் ரயில் ஏறி மறு தினம் பகலில் ஆன்ட்வெர்ப் வந்து சேர்ந்தார். பாதிரியைப் போல் வேடந் தரித்துக்கொண்டு ஒரு பெரிய ஓட்டலில் தங்கி யிருந்தார். இவர் வந்த பரபரப்பையும் இவருடைய மாறு வேடத்தையும் கண்டுகொண்ட ஓர் அமெரிக்கப் பத்திரி கையின் நிருபர், 'திரைப்படத்தில், மிகவும் ஆபத்தான நிலை மையில் சிக்கிக்கொண்ட ஒரு கதாநாயகியைக் காப்பாற்று வதற்குத் திடீரென்று கதாநாயகன் வந்து தோன்றுவது போல் சர்ச்சில் போர்க்களத்துக்கு வந்திருக்கிறார்' என்று தம் பத்திரிகைக்கு எழுதினாராம். பெல்ஜியப் பிரதம மந்திரிக்கு உற்சாக வார்த்தைகளும் தைரியமும் சொல்லி, நேசக் கட்சியின் சேனைகள் உதவிக்கு வரும்வரை மனந் தளர வேண்டாமென்று சொல்லிவிட்டு, உடனே போர் முனைக்குப் போய் நின்று ஜெர்மன் சைனியங்கள் ஆன்ட் வெர்ப் நகரை நோக்கி வந்துகொண்டிருப்பதைக் கண்டார். தம் மந்திரி ஸ்தானத்தை விட்டுவிட்டுப் போர்முனைக்கு வந்த தால், நாட்டில் ஏதாவது வீண் நிந்தனைகள் கிளம்பிவிடுமே யென்றெண்ணி, நிர்வாக சபைக்குத் தந்தி மூலம் விஷயங் களைச் சுருக்கிக் கூறி, தம் பதவியையும் ராஜிநாமா செய்துவிடுவதாகச் சொன்னார். லார்ட் கிச்னரின் கட்ட ளைப்படி நேசக் கட்சியின் சைனியங்கள் வரும் வரையில்

அவர் போர்க்களத்தில் இருக்கவேண்டுமல்லவா? அதற்காகத்தான் தம் பதவியைக்கூடப் பொருட்படுத்தவில்லை. ஆனால் பிரதம மந்திரி இதற்கு ஒத்துக்கொள்ளவில்லை. பிரிட்டிஷ் சேனாதிபதிக்கும் பிரெஞ்சு சேனாதிபதிக்கும் சாதாரணமாய் இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் ஏதாவது அபிப்பிராய பேதம் இருந்துகொண்டே யிருக்கும். ஆகையால் ஆன்ட்வெர்ப்புக்குச் சைனியங்கள் உதவிக்குப் புறப்படத் தாமதமாகிவிட்டது. என்ன செய்வதென்று தெரியாமல் சர்ச்சில் ஏங்கி நிற்கும் சமயம் பிரிட்டிஷ் கடற்படையின் ஒரு பகுதி வந்து சேர்ந்தது. படையில் பல நபர்கள் சரியாக உடைகள்கூடத் தரித்துக்கொள்ளவில்லை. ஆனால் இந்தச் சமயத்திலா இவற்றைக் கவனிக்க வேண்டும்? எரியும் சுடரில் எண்ணெய் விடுவது போல் தம் சேனைகளை முன்னணிக்குக் கடத்திச் சென்று ஜெனரல் ராலின்ஸன் என்னும் தளபதியிடம் பொறுப்பை ஒப்புவித்துவிட்டு லண்டனுக்குத் திரும்பினார்.

ஆன்ட்வெர்ப் என்னவாயிற்று? உதவி மிகவும் தாமதித்து வந்ததால் எதிரிகள் முன்னேறி வந்து ஆன்ட்வெர்ப்பைக் கைப்பற்றிவிட்டனர். ஆனால் சர்ச்சிலின் வீரப் பிரயத்தனத்தால் எதிரிகள் மிகவும் தாமதித்துத்தான் முன்னேற நேரிட்டது. அதனால் நியூபோர்ட், டன்கர்க், கலே, பலோன் முதலிய முக்கியமான இடங்கள் காப்பாற்றப்பட்டன. இதன் கீர்த்தி சர்ச்சிலுக்குத்தான். ஆனால் வெகு காலம் வரையில், சர்ச்சிலின் இந்த அரும் பெரும் உதவியை யாரும் பாராட்டவில்லை. அதற்கு நேர் விரோதமாக இவருக்கு வசை மொழிகளே கிடைத்தன. அரசாங்க சபையின் நிர்வாக அங்கத்தினர் பலரும் இவரைக் கண்ட

படி யெல்லாம் ஏசினர்கள். லார்ட் ஈஷர் என்னும் ஒரு பிரமுகர் துண்டுப் பிரசுரம் ஒன்றில் லார்ட் கிச்னரின் கவலைக்கும் வருத்தத்துக்கும் சர்ச்சிலே காரணமென்றும், ஓர் இரவு, லார்ட் கிச்னரின் வீட்டுக்குச் சர்ச்சில் ஓடிவந்து தம்மை ஆன்ட்வெர்ப்புக்குப் போக அனுமதிக்க வேண்டு மென்று கேட்டுக்கொண்டு, அங்கே போய்க் கோட்டையை விட்டதுமல்லாமல், கடற்படையைச் சேர்ந்த 3 சைனியங் களையும் எதிரிகளின் வசம் ஒப்படைத்துவிட்டு வந்து சேர்ந்ததாகவும் அவதூறு கூறி, தமக்கிட்ட வேலையைச் செய்யாமலும், மந்திரி சபையில் மற்றவர்களைக் கலந்து செய்யாமலும், பொறுப்பற்ற விதமாய் நடந்து கொண்ட தாலுமே இந்த ஆபத்தான விளைவுகள் ஏற்பட்டனவென் றும் பிரசுரித்து நாடெங்கும் விளம்பரப்படுத்தினர். ஆனல், பதவியில் இருக்கும் சில சர்வ சூனியர்களுக் கெல்லாம் சர்ச்சிலின் உதவியே துறைமுகங்களைக் காப்பாற்றப்பட்ட தற்குக் காரணமென்று தெரியுமா? பல வருஷங்கள் வரை இந்தச் சம்பவத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு சர்ச்சி லைப் பலர் இகழும்படி செய்தனர். ஆனல், மகா யுத்தம் வெற்றிகரமாய் முடிந்ததும், அரசாங்க தோரணையில் வெளி வந்த மகா யுத்த சரித்திரத்தில் அரசாங்கத்தார் ஆன்ட் வெர்ப் சம்பவத்தைப்பற்றிக் குறிப்பிடுகையில் சர்ச்சிலை மிகவும் புகழ்ந்திருக்கிருர்கள். உண்மைக்கோர் அழிவில்லை யல்லவா?

1914, அக்டோபர் மாதம், பாட்டன்பர்க் குமார ராஜா வான லூயி என்பவர் பிரிட்டிஷ் கப்பற்படைத் தளகர்த்தராயிருந்தார். இவர் ஜெர்மானியர். இந்தச் சமயத்

தில் இவர் ஒரு முக்கியமான பதவியி லிருப்பதைக் கண்டித்துப் பல பத்திரிகைகள் எழுதி யிருந்ததைக் கண்டு தம் பதவியை ராஜீநாமா செய்துவிட்டார். லார்ட் பிஷர் என்பவர், கடற்படைத் தளகர்த்தராக வெகுகாலம் வரை சேவகம் செய்துவிட்டு உபகாரச் சம்பளம் அனுபவித்துக்கொண்டிருந்தார். அவருக்கு அப்பொழுது வயது 74. மகா திறமைசாலி யென்று புகழ்பெற்ற இவரை சர்ச்சில் தளகர்த்தராக நியமித்து, பிரதம மந்திரியின் அனுமதியையும் பெற்ருர். இருவரும் யுத்த நிலைமையைப் பற்றி யோசித்தனர். கால்வாய்த் துறைமுகங்களின் வாயிலாக எதிரியை எதிர்ப்பது முடியாத காரியம். ஸ்விட்ஸர்லந்திலிருந்து பிரிட்டிஷ் கால்வாய் வரையில் இடைவெளி யில்லாமல் எங்கு பார்த்தாலும் எதிரிகளின் படைகள் நிற்கின்றன. பால்டிக் கடல் அல்லது கருங்கடல் வழியாகத்தான் எதிரியை வளைத்துத் தாக்கவேண்டும் என்ற ஒரு முடிவுக்கு வந்தனர்.

ஜெர்மனியின் வடபுறத்திலுள்ள பால்டிக் கடல் வழியாகத் தாக்குவது சுலபமான காரியமல்ல. ரஷ்யப் படைகளைக் கொண்டுவந்து வடபுறத்திலிருந்து படையெடுக்க ஏற்பாடு செய்துவிடலாம். பிரிட்டிஷ் கால்வாயின் வடபுறத்திலும் தென்புறத்திலும் பிரிட்டிஷ் கப்பற் படைகளைத் தனித்தனியே அணிவகுத்து எதிரியின் படையைத் தாக்குவதுதான் கஷ்டம். பிரிட்டிஷ் கடற்படையைப் பிரித்துவிட்டால் எதிரியின் கடற்படைகள் சுலபமாக முன்னேறிவிடும். ரஷ்ய சைனியம் எவ்வளவு பலம் பொருந்தியதா யிருந்தாலும், ஆபத்துத்தான். இந்த உண்மையை அறிந்து, வடபுறத்திலிருந்து தாக்கும் எண்ணத்தை விட்டுவிட்டனர்.

ஆகவே, கருங்கடல் வழியாகத் தாக்கவேண்டு மென்று நிச்சயித்தனர். மத்தியதரைக் கடல் வழியாகக் கருங்கடலுக்குப் போய்ச் சேரவேண்டும். நவம்பர் மாதம் துருக்கியும் ஜெர்மனியின் சார்பாக யுத்தத்தில் இறங்கிவிட்டது. பால்கன் நாடுகளில் சில பிரதேசங்கள் ரஷ்யாவுக்கு உதவக் கட்டுப்பட்டிருக்கின்றன. சில நாடுகள் துருக்கிக்கும் ஆஸ்திரியாவுக்கும் தங்கள் மேலுள்ள பகைமையினுல் பிரிட்டிஷ் கட்சிக்கு உதவியளிக்கக் காத்துக்கொண்டிருந்தன. இவைகளை எப்படியாவது சரிப்படுத்திக்கொண்டு ஆஸ்திரியாவின் உயிர் நிலையைத் தாக்கலாம். ஆனுல், போகும் வழியில் டார்டனெல்ஸ் தீவுகளைக் கடந்து செல்லவேண்டுமே? இந்தத் தீவுகள் நல்ல தற்காப்பில் இருந்துவந்தன. இவற்றைத் தாண்டி மர்மோரா கடலுக்குப் போய்விட்டால், ரஷ்யப் படைகளின் உதவியைக் கொண்டு ஆஸ்திரியாவை நொறுக்கி விட்டு, பிறகு ஜெர்மனியின் துடுக்கை முற்றிலும் அடக்கி விடலாம். இந்த யோசனைதான் சரியென்று சர்ச்சில் சம்மதித்ததால் அதன்படியே செய்வதென்று ஒரு முடிவுக்கு வந்தார்கள். கிரீஸ் தேசமும் பிரிட்டிஷின் உதவிக்கு வரும். 1915 ஆரம்பத்தில் இந்த யோசனை மிகவும் உசித மென்று லாயிட் ஜார்ஜும், லார்ட் கிச்னரும் ஒப்புக் கொண்டனர். யுத்த ஆலோசனைச் சபையும் பிரதம மந்திரியும்கூட ஒப்புக்கொண்டனர்.

உடனே இந்த யோசனையை நிறைவேற்ற ஏற்பாடுகள் நடந்தன. பெரிய கப்பற் படைகள் செல்லவில்லை. நேசப் படையினர் சின்ன யுத்தக் கப்பல்கள் சிலவற்றை எடுத்துக் கொண்டு போய், டார்டனெல்ஸ் தீவுகளைக் கடக்க முடியா

மல் விரட்டப்பட்டுத் திரும்பி வந்து சேர்ந்தனர். இந்தத் தோல்விக்கு சர்ச்சில்தான் காரணமென்று அவரைத் தூற்று தவர் சிலர்தான். பிரதம மந்திரி ஆஸ்குவித்கூட, 'டார்ட னெல்ஸ் சம்பவத்திற்கு நானே முக்கிய காரணம்' என்று சொல்லியும் பயன்படவில்லை. உண்மையில் கவனித்துப் பார்த்தால், வேறு பலருடைய இடையூறுகளாலும் மூடத் தனத்தினாலுமே இந்தத் தோல்வி ஏற்பட்டது. சர்ச்சிலுக்கு மட்டும் முழு அதிகாரத்தையும் கொடுத்திருந்தால், பெரிய தோர் வெற்றி ஏற்பட்டிருக்கும். இவர் கேட்டிருந்தபடி சேனைகளை அனுப்பத் தவறியதாலும், இவருடைய எந்த வேண்டுகோளையும் சரிவரப் பூர்த்தி செய்யாமல் காலத்தை வீணே கழித்து வந்த யுத்தக் காரியாலயத்தின் மமதை யாலும் துடுக்காலுமே இந்தத் தோல்வி ஏற்பட்டது. இதன் விளைவால் துருக்கிக்கு வெற்றி கிடைத்தது. பல்கேரியா எதிரியைச் சேர்ந்துவிட்டது. ரஷ்யா முறியடிக்கப் பட்டது. யுத்தமும் மேலும் 3 வருஷங்களுக்குத் தொடர லாயிற்று.

இவை யாவையும் சர்ச்சிலின் வீழ்ச்சிக்குக் காரணமா யிருந்தன. டார்டனெல்ஸ் படையெடுப்பை அங்கீ கரித்த கடற் படைத் தளகர்த்தர் லார்ட் பிஷரும்கூட சர்ச்சிலை வெறுத்தார். மேற்கொண்டு சர்ச்சிலுடன் சேர்ந்து உழைக்க மறுத்து, தம் பதவியையும் ராஜீநாமா செய்து விட்டார். சர்ச்சில் எவ்வளவோ தடுத்துப் பார்த்தார். 'நான் வேண்டுமானால் ராஜீநாமா செய்துவிடுகிறேன். நீங்கள் மகா தீரரல்லவா? இந்த நெருக்கடியான சமயத் தில் நீங்கள் பதவியிலிருந்து விலகக் கூடாது' என்று மன்றாடினர். பயன்படவில்லை.

இந்த யுத்தம் ஆரம்பித்ததிலிருந்தே லிபரல் கட்சியும் கன் ஸர்வேடிவ் கட்சியும் சேர்ந்து கூட்டு மந்திரி சபை யமைத்து, தேசத்துக்கு உழைத்து வந்தால் மிகவும் நன்மை யாயிருக்குமென்று சர்ச்சில் எவ்வளவோ முயன்றார். 1915-மே மாதத்தில் இங்கிலாந்தின் தொழிற்சாலைகளில் வேலை நிறுத்தம் முதலிய சச்சரவுகள் ஏற்பட்டதன் பயனாக, கூட்டு மந்திரி சபை அமைக்கவேண்டிய அவசியத்தைப் பிரதம மந்திரியான ஆஸ்குவித் உணர்ந்து மந்திரி சபையைத் திருத்தி யமைத்தார்.

லார்ட் பிஷர் ராஜீநாமா செய்ததும் அவர் ஸ்தானத்தில் பால்போரை நியமித்தனர். இவர் கன்ஸர்வேடிவ் கட்சி யினர். ஸர் ஆர்தர் வில்ஸன் என்பவரைக் கடற்படை இலாகா மந்திரியாக்கி, சர்ச்சிலை லங்காஷயருக்கு அத்யக்ஷகராக நியமித்தனர். யுத்த மந்திராலோசனை சபையில் தாமும் ஓர் அங்கத்தினராக எப்பொழுதும் இருக்கலாம் என்ற உறுதி யின்மேல், தமக்குச் சிறுமை யளித்த இந்த உத்தியோக மாறுதலை சர்ச்சில் பொருட்படுத்தவில்லை. சில பத்திரிகை நிருபர்கள் சர்ச்சிலைப் பேட்டி கண்டு மந்திரி சபை திருத்தி யமைக்கப்பட்டதைப் பற்றி அவருடைய அபிப்பிராயத் தைக் கேட்டபோது, 'யுத்தம் மும்முரமாய் நடக்கும் இந்தத் தருணத்தில் எதிரியைத் தோற்கடிப்ப தல்லாமல் வேறு எந்த யோசனையுமுள்ள எவரும் தேசத் துரோகியாவார்' என்று மொழிந்தார்.

சில தினங்களில், யுத்த மந்திராலோசனை சபை திருத்தி யமைக்கப்பட்டது. பல அங்கத்தினரை விலக்கிவிட்டு 'யுத்தக் கமிட்டி' என்ற புதுப் பெயருடன் விளங்கியது.

நீக்கப்பட்ட அங்கத்தினருள் சர்ச்சிலும் ஒருவர். யுத்த சம்பந்தமான விஷயங்களில் தாம் கலந்துகொள்ளச் சந்தர்ப்பம் அளிக்கப்படாவிட்டால் தம் மந்திரி ஸ்தானத்தைக் காலி செய்துவிடுவதாகச் சொல்லிப் பார்த்தார். ஒன்றும் நடக்கவில்லை. அதனால் மந்திரிப் பதவியை ராஜீநாமா செய்தார்.

காமன்ஸ் சபையில் பேசி, தம்மீது சுமத்தப்பட்ட அபாண்டமான குற்றச்சாட்டுக்களைச் சபையோருக்கு எடுத்துச் சொல்லி, அதற்குத் தக்க சமாதானங்களைக் கூற வேண்டுமென்ற ஆசை தூண்டியது. இடையில் போர்க்களத்தில் சேருவதற்காக வலுவில் பதிவு செய்துகொண்டார். காமன்ஸ் சபை கூடிற்று. சர்ச்சில் எழுந்து பேசலானார்:

> 'சபையோர்களே! நான் கடற்படை மந்திரியாயிருக்கும்போது, மறைமுகமாகவும், நேர்முகமாகவும், எழுத்து மூலமாயும், பேச்சு மூலமாயும், பத்திரிகைகளின் வாயிலாயும், மேடைகளின் வாயிலாயும் என் பல்வேறு செய்கைகளைக் கண்டித்து என்மீது குற்றங்கள் சாட்டப்பட்டன அல்லவா? அவற்றிற்கெல்லாம் நான் என்ன சமாதானம் உங்களுக்குச் சொல்லப் போகிறேனென்று நீங்கள் ஆவலுடன் இருக்கிறீர்கள் என்பது தெரிந்தே, நான் போர்முனைக்குச் செல்லுமுன் உங்களுக்கு என் சமாதானங்களைச் சொல்லிவிட வேண்டி வந்திருக்கிறேன். ஆனால் என் சமாதானத்தில், எதிரிக்குப் பலனளிக்கக்கூடிய சில ரகசியங்கள் இருக்கின்றன. அவைகளை நான் இங்கு எடுத்துச் சொல்வது தேசத் துரோகமாகும். எனவே, அவற்றை மட்டும் தவிர்த்து, மற்றவற்றைச் சொல்லுகிறேன்'

என்று பேச ஆரம்பித்ததும் சபையில் பலர், 'இவன் போர்க்களத்தில் இறங்கினல், பின்னணியில் நிற்கமாட்

டான். எத்துறையிலும் முன்னணியை விரும்பும் இவனுடைய இன்றைப் பேச்சே கடைசிப் பேச்சாகிவிடும் போல் இருக்கிறது; பாவம், இன்னும் சில நாட்களில் பிளாண்டர்ஸ் போர்க்களத்தில் மூளையில் குண்டுகள் துளைக்கப்பெற்றுப் பிணமாகக் கிடந்தாலும் கிடப்பான்' என்று நினைத்தனர். மேலும் சர்ச்சில் பேசுகையில்,

'என் வாய்ப் பேச்சினால் மட்டும் என்னுடைய சமாதானத்தைத் தங்கள் முன் சமர்ப்பிக்க விரும்பவில்லை. நான் யுத்த மந்திரியா யிருக்கும்போது நடந்துவந்த கடிதப் போக்கு வரத்துகளும் இன்னும் பல ஆதாரங்களும் கடற்படை இலாக்காவின் காரியாலயத்தி லிருக்கின்றன. எனக்குப் பிறகு அந்தப் பதவியி லிருந்துவரும் உத்தியோகஸ்தர்களுக்கு என் குற்றமற்ற செய்கைகள் நன்கு விளங்குமென்று நம்புகிறேன். இந்த நெருக்கடியான சமயத்தில், என் சமாதானத்துக்குத் தக்க ஆதாரங்களைத் தங்கள் முன் சமர்ப்பிக்கும்படி மந்திரி சபையை வற்புறுத்தலாகாது. நாளடைவில் அவைகளெல்லாம் தாமாகவே வெளிவரும் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். குறிப்பாக மட்டும் சில சம்பவங்களைப் பற்றி உங்களிடம் சொல்லிவிடுகிறேன்.

'டார்டனெல்ஸ் சம்பவம் என்னால் ஏற்பட்டதன்று. யுத்தத்தில் பின்னடைந்து வந்துகொண்டே யிருந்த பெல்ஜியப் படைகளுக்கு உதவிப் படைகள் அனுப்ப வேண்டும் அல்லவா? ஆகவே, பிரிட்டன் சார்பாக, பெல்ஜியப் படைகளுக்கு உற்சாகமூட்டி, நம்பிக்கையைக் கொடுத்து, உதவிப் படைகள் வரும் வரை எதிரியின் முன்னேற்றத்தைத் தடுக்கவேண்டியது என் கடமை யாயிற்று. உதவிக்கு வந்த படைகள் வெகு

தாமதத்துடன் வந்தன. இதற்கு நானு ஜவாப்தாரி? எனினும், ஆன்ட்வெர்ப்பின் அப்போதைய நிலைமையைக் கவனித்தால், நான் ஆற்றிய சேவையின் முடிவு, என்னைக் கண்டிக்கத் தகுந்ததல்ல. இதன் உண்மை யையும் நீங்கள் சீக்கிரத்தில் உணர்வீர்கள். டார்ட னெல்ஸ் விஷயமாகக் கூறுமிடத்து, சில பழைய கப்பல் களைக் கொண்டு கருங்கடலை நோக்கிச் செல்லவேண்டு மென்ற ஏற்பாடு என் ஒருவனை மட்டும் பொறுத்ததன்று. ராணுவப் படைகளை அனுப்ப முடியாதென்று யுத்தக் காரியாலயம் கூறிவிட்டது. துருக்கியில் இருக்கும் கலிப்போலியை எதிர்த்து அதை நம் வசப்படுத்திக் கொள்ளவேண்டியது மிகவும் அவசியம். யுத்தக் காரி யாலயத்தின் மறுப்பிற்குப் பிறகு, கடற்படை கொண்டே நம் காரியம் சித்தியடைய வேண்டியிருந்தது. அவ் வண்ணமே யுத்தக் காரியாலயத்திற்கு நான் தெரிவித்த பொழுது, "இதில் ஏற்படப் போகும் அனுகூலத்தையோ, பிரதிகூலத்தையோ நான் முற்றிலும் உறுதியாகக் கூற முடி யாது. இதை ஒரு சூதாட்டமாகவே நான் கொள்கிறேன். வெற்றியினுல் கிடைக்கும் பலன்களின் விசேஷத்தை அளவிட முடியாது. ஆகையால் இந்த முறையை அனு சரிப்பதே உத்தமம் என்று பல விவேகிகள் ஒத்துக்கொள் வதை நான் அங்கீகரிக்கிறேன். இதைத் தவிர, எதிரியை முறியடிக்கத் தற்சமய நிலையில் வேறு ஒரு வழியும் இல்லை" யென்று தெரிவித்திருக்கிறேன். ஆனுல் இந்த யோசனை க்கு இணங்கி யுத்த நடவடிக்கைகளை எடுத்துக்கொண்ட யுத்த மந்திராலோசனை சபையின் செய்கைகளுக்கும், கடற்படை அதிகாரிகள் கையாண்ட முறைகளுக்கும், எனக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. மந்திரி சபையில் ஓர் அங்கத்தினன் என்ற முறையில் நடந்துகொண் டிருக்

கிறேன். தக்க சமயங்களில், வேண்டிய சேனைகள் என் ஏற்பாட்டின்படி அவ்வப்போது அனுப்பப்பட்டிருக்குமானல் எல்லாம் வெற்றிகரமாகவே முடிந்திருக்குமென்பதில் ஐயமில்லை. இதன் அடிப்படையான உண்மைகளை ஒரு வருஷ காலமாகவே நான் சர்க்காருக்குப் பல முறைகளில் எடுத்துக் கூறியிருக்கிறேன். நம் அறிவையும், பலத்தையும் மேற்குப் பாகத்தில் செலுத்துவதைவிடக் கிழக்குப் பாகத்தில் செலுத்தி, கான்ஸ்டான்டிநோபிளை நம் முழு பலத்தையும் கொண்டு கைப்பற்றுவதால் நமக்கு உயிர்ச் சேதம் மிஞ்சுவதல்லாமல் வெற்றியும் நிச்சயம் என்று கூறிக்கொண்டே வந்திருக்கிறேன். இந்த என் யோசனைகளை “பள்ளிக்கூட மாணவன் யோசனை” என்றும், “அநுபவமில்லாப் புத்தகப் பூச்சி யோசனை” என்றும், “அவைகள் துடுக்காகவும், சுட்டித்தனமாகவும், வெறும் பகட்டுக்காக அநுபவம் முதிர்ந்த திறமைசாலிகளின் முன் சமர்ப்பிக்கப்பட்டவை” என்றும் என்னைக் குறைகூறினர்கள். இது முற்றிலும் தவறு. கடற்படை நிபுணர்களும், லார்ட் பிஷர் முதலிய பெரியோர்களும் கடற்படையின் நடவடிக்கைகளுக்கு முக்கிய காரணஸ்தர்கள். என்னுடைய யோசனைகளை லார்ட் பிஷர் எப்பொழுதும் மெச்சிக்கொண்டுதான் இருந்தார். யுத்தத்தில் அவ்வப்போது சமயத்திற் கேற்றவாறு கையாளும் முறைகளில், எங்களுக்குள் அபிப்பிராயபேதம் இருந்தாலும் என் பொது யோசனைகளை அவர் கண்டித்தது இல்லை. மந்திரி சபையும் தன் பூரண ஆதரவைக் கொடுத்தது. ஆனல் ராணுவ உதவிகள், வேண்டிய சமயத்திலும், வேண்டிய அளவிற்கும், குறித்த நேரங்களில் கிடைக்காததால் ஒரு மாதச் சுணக்கம் ஏற்பட்டு, துருக்கியர்கள் தங்கள் சேன பலத்தைப் பதின் மடங்கு அதிகரித்துக்கொள்ள நேரிட்டது.

அதன் விளைவும் வருந்தத்தக்கதாக முடிந்தது. என் யோசனைகளை ஆதியில் அங்கீகரித்த லார்ட் பிஷர், நமது டார்டனெல்ஸ் பிரயத்தனம் கைகூடாமல் போன பின்பு என்னைத் தூஷித்தும் கண்டித்தும் இருக்கிறார். என் யோசனையில் நம்பிக்கை இல்லாதவர் ஆதியிலேயே அதை ஆதரித்திருக்காவிட்டால் டார்டனெல்ஸ் சம்பவம் நடந்தே இருக்காது. அப்படி ஒருகால் நமக்கு வெற்றியே ஏற்பட்டால் தமக்குப் பெருங் கீர்த்தி உண்டாகும் என்று லார்ட் பிஷர் எண்ணினர் போலும்! எனினும் லார்ட் பிஷரின் ஆற்றலையும், தீர்க்க புத்தியையும் நான் குறைத்துக் கூறக்கூடாது............... நான் போர்க் களத்திற்குப் போகவேண்டி யிருப்பதால், என் நடவடிக் கைகளைப் பற்றி விசாரிக்கும் கமிட்டியின் முன்பு என் கக்ஷியை எடுத்துப் பேசுவதற்காக ஆதாரமாயுள்ள தஸ்தா வேஜுகளை ஸர் ஸ்மித் வசம் ஒப்புவித்துப் போகிறேன். நம் எல்லோருக்கும் இப்பொழுது ஒரு சோதனைக் காலம். இந்தச் சோதனையின் கடுமை இன்னும் அதிகரிக்க லாம். நாம் ஊக்கமும், விடாமுயற்சியும், தைரியமும் கொண்டு நம் நாட்டிற்குத் தொண்டு புரிந்துவந்தால் வெற்றி பெறுவது நிச்சயம். யுத்தம் ஆரம்பித்த உடனேயே நாம் போய் ஜெர்மனியைத் தாக்கி, பெர்லினைக் கைப்பற்றி விடுவதைவிட, ஜெர்மானியர்கள் வெகுதூரம் முன்னேறி வந்தபின் அவர்களை முறியடித்து நம் வெற்றிக்கொடியை நாட்டுவதே மிக நல்ல பலனை யளிக்கும். பல்கேரியா ஜெர்மனியைச் சேர்ந்துவிட்டது. ஜெர்மனியின் ராணுவப் படாடோபங்களைக் கண்டு சில சிறிய ராஜ் யங்கள் அதனுடன் சேர்ந்துவிட்டன. புகழும், கீர்த்தியும் பெற்ற நம் புராதன ராஜ்யத்தின் செல்வாக்கையும் பலத்தையும் அவைகள் நினைத்துப் பார்க்கவில்லை.'

இந்தப் பேச்சினுல் சபையோரின் அனுதாபத்தைப் பெற்றுக்கொண்டு அவர் ஆசனத்தில் அமர்ந்தார்.

பின்பு, ஆஸ்குவித் முதலியவர்கள் சர்ச்சிலின் தியாக புத்தியையும், விடாமுயற்சியையும், இன்னும் பல அருங் குணங்களையும் மெச்சிப் பேசி, தாய் நாட்டுக்குத் தொண்டு புரியும் விஷயத்தில் அவருக்கிருக்கும் ஆர்வமும் ஊக்கமும் இணையற்றவை என்று சொல்லி, அவருக்கு மனமார்ந்த ஆசி கூறினுர்கள்.

# 11. போர் முனை

சர்ச்சிலுக்கு இப்பொழுது இரண்டு பெண் குழந்தைக ளும் ஓர் ஆண் குழந்தையும் இருந்தன. தம் கணவனைப் போலவே மனைவியும் வேறு ஒரு துறையில் யுத்தத்துக்கு உதவிவந்ததன் பயனாக அவர் மிகவும் சமர்த்தராகி ஸி. பி. இ. (C. B. E. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் தோழர்) என்ற பட்டத்தையும் பெற்றார். இது சர்ச்சிலுக்கு மிகவும் பெருமையை விளைவித்தது. சர்ச்சிலின் சகோதரரும் முன் னணியி லிருந்து யுத்தம் செய்துவந்தார்.

தற்போதைய யுத்தத்தில், ஹாலந்து, பெல்ஜியம், பிரான்ஸ் முதலிய பிரதேசங்களின்மீது படையெடுத்து, மின்னல் யுத்தங்கள் செய்து, ஜெர்மன் ஹிட்லர் வெற்றி பெற்றாரல்லவா! இந்த வெற்றிகளுக் கெல்லாம் முக்கிய காரணமா யிருந்த டாங்குகளைப் பற்றி நாம் கேள்விப்பட் டிருக்கிறோமே. இத்தகைய டாங்குகளை முதன் முதல் உபயோகப்படுத்தியது சென்ற மகா யுத்தத்தின் போது தான். அந்தச் சமயத்தில் டாங்குகளை உற்பத்தி செய்யவும் அவற்றைக் கொண்டு போர்க்களத்தில் எதிரிகளைத் தாக்க வும் ஏற்பாடுகள் செய்வதற்கு முக்கிய காரணஸ்தரா யிருந்தவர் சர்ச்சில்தான். சென்ற மகா யுத்தத்தின்போது, டாங்குகளைக் கையாளுவது பண்டைக்கால யோசனை யென்றும், பெரும் பெரும் கோட்டைகளில் பாதுகாக்கப் பட்டவைகளைத் தாக்குவதும், அவற்றின் மூலம் பீரங்கி களையும் சேனைகளையும் கொண்டு போய் எதிரிகளைத் தாக்கு

வதும் முடியாத காரியம் என்றும் அந்தக் காலத்துச் சேனதிபதி முதற்கொண்டு பல ராணுவ நிபுணர்களும் கருதினர்கள். சர்ச்சிலுக்கு மட்டும், இந்த டாங்கு களில் பெரிய நம்பிக்கை யுண்டு. எல்லோரும் டாங்குகளேப் பற்றிய யோசனைகளே இகழ்ந்தார்களாதலால், சர்ச்சில் ஒருவர் மட்டும் அதற்கு மாறுன கொள்கை கொண் டிருப்பதை மற்ற உத்தியோகஸ்தர்களும், நிபுணர்களும் தெரிந்துகொண்டார்கள். இவரைப் பைத்தியக்காரரென்று ஏளனம் செய்யமாட்டார்களா? ஆகவே, இவர் கடற்படை இலாக்கா மந்திரியா யிருந்தபோது, வேறு யாரும் அறியா வண்ணம், டாங்குகளே உற்பத்தி செய்வதில் தம் கவனத் தைச் செலுத்தி அதற்காகப் பெரும் பொருளேச் செலவிட லானர். யுத்தக் காரியாலயத்துக்கும், பொக்கிஷ அதிகாரி களுக்கும் கூடத் தெரியாமல் 70,000 பவுன் செலவு செய் தார். இவ்வண்ணம் செலவு செய்து இவர் தயாரித்த டாங்குகளேக் கண்ட மேலதிகாரிகளும், கடற்படை இலாக் காவின் நிபுணர்களும் 'வின்ஸ்டனின் பிழை' என்று அந்த டாங்குகளே அழைத்தார்கள். ஏராளமான திரவியத் தைச் செலவிட்டதற்காக எல்லோரும் இவரை நிந்திக்க லானர்கள். இவர் மந்திரிப் பதவியை இழக்க நேரிட்டதற்கு ஏதுவாயிருந்த பலவற்றில் இதுவும் ஒன்று.

மந்திரிப் பதவியை விட்டு, சட்டசபையில் பேசிய பின் னர், யுத்த களத்திற்குச் செல்லுவதற்கு முன்னல், சில ராணுவ அதிகாரிகளுக்கு நீண்டதோர் கடிதம் எழுதி, டாங்குகளின் விசேஷங்களே எடுத்துக் கூறியும், அவற்ருல் ஏற்படக்கூடிய அனுகூலங்களே விவரித்தும் சொன்னதன் பேரில், அந்த 'வின்ஸ்டன் பிழைக'ளில் சிலவற்றை யுத்த

அரங்கத்துக்கு அனுப்ப ஒப்புக்கொண்டனர். சர்ச்சிலும் போர்க்களத்தை அடைந்தார்.

மகா யுத்தத்தின்போது டாங்குகளால் ஏற்பட்ட அனுகூலங்களை விவரிப்பது அசாத்தியம். 'வின்ஸ்டன் பிழை' என்று இகழ்ச்சியாய் அழைக்கப்பட்ட அந்த டாங்குகளின் அரிய உபயோகத்தைக் கண்டு யுத்த மந்திரி பால்போரும் திகைத்துப் போனார். சர்ச்சிலைப் 'பைத்தியக் காரர்' என்று எண்ணிச் சமயம் வாய்த்தபோ தெல்லாம் கேலி செய்துகொண்டிருந்த ராணுவ அதிகாரிக ளெல்லோ ரும், அந்த 'வின்ஸ்டன் பிழை'களைத் தங்கள் கைகளால் ஓட்டிப் பார்க்கவேண்டு மென்று போட்டியிடலாயினர். சர்ச்சிலைக் கண்டு இகழ்ந்தவர்கள், இப்பொழுது அவரைக் கண்டால் இரண்டடி பின்வாங்கி மரியாதை செய்யத் தொடங்கினர். 70,000 பவுன் செலவழித்ததற்காக இவரை நிந்தித்து, இவருடைய நடத்தைகளை விசாரிக்கவேண்டு மென்று கமிட்டிகளை ஏற்படுத்தினவர்கள், இப்பொழுது இவரை வாயாரப் புகழ்ந்து, 'இங்கிலாந்தின் ஒப்பற்ற மைந்தர்' என்று கூறி, 'வின்ஸ்டன் பிழை'களுக்கு எத்தனை லக்ஷம் பவுன் வேண்டுமானாலும் செலவிடலா மென்று தைரியமடைந்தனர். விதியின் கூற்றல்லவா இது? நன்மையையே செய்துவரும் எவருக்கும், துன்பத் தின் மேல் துன்பம் ஏற்படுவது சகஜம். இவற்றைக் கிஞ்சித் தேனும் பொருட்படுத்தாது, சத்தியமே தெய்வமெனக் கொண்டு தொண்டாற்றி வருபவருக்கு முடிவில் ஏற்படும் கீர்த்திக்கு இணையான வெற்றி வேறுண்டோ? இதன் உண் மையை முற்றிலும் உணர்ந்தவர் சர்ச்சில்.

முரட்டுச் சுபாவமும் கொடுமையும் சாதாரணமாய்

ராணுவத்தில் காணப்படும் குண விசேஷங்கள். தங்களா லேயே அரசாங்கத்தின் கௌரவம் காப்பாற்றப்படுகிற தென்னும் எண்ணத்தால் ஏற்படும் துடுக்கையும், அகங்கா ரத்தையும் ராணுவத்திலுள்ள பெரும்பான்மையோரிடத்தில் காணலாம். அரசியல் விவாதங்களிலும், இலக்கண இலக் கியங்களிலும் தேர்ச்சி பெற்ற எவராயிருந்தாலும் சரி, அல்லது அரசாங்க நிர்வாகத்தில் கீர்த்தியும் புகழும் திறமை யும் பெற்ற எவராயிருந்தாலும் சரி, அவர்களை ராணுவத்தி லுள்ள பெரும்பான்மையோர் மதிக்க மாட்டார்கள். கோபுரத்தின் அடியில் செதுக்கப்பட்ட பதுமையானது எப்படி அந்தக் கோபுரம் முழுவதையும் தான் மட்டுமே தாங்கிக்கொண்டிருப்பதாகக் கருதிக்கொண் டிருக்கிறதோ அதுபோலவேதான் ராணுவத்திலுள்ளவர் களும் நினைத்துக்கொண் டிருக்கிறார்கள். நல்ல குடும்பத்தில் அவதரித்து, உயர்ந்த கலைகளைக் கற்று, பரந்த சிந்தையுள்ள ஒருவன், ராணுவத்தில் சேர்ந்தானானால், அசோக வனத்தில் அரக்கிகளின் மத்தியில் சீதை அகப்பட்டுக்கொண் டது போல்தான் இருக்கும்.

மந்திரிப் பதவியிலிருந்து அதிகாரம் வகித்துவந்த சர்ச்சி லுக்கு ராணுவ அரங்கத்தில் பல சோதனைகள் ஏற்பட்டன. 'அரசியல் விஷயங்கள் எதுவும் இங்கே கூடாது, தெரி யுமா?' என்றார் ஒரு மேலதிகாரி. 'இங்கே அரசியல் விவாதங்களுக்கு இடமில்லை. இது ராணுவ மேடை, தெரி யுமா?' என்று கேட்டார் மற்றொருவர். ராணுவத்தில், தம் இளமைப் பிராயம் முதற்கொண்டே இவர் ஆற்றிய அரும் பெருந் தொண்டுகளைக் கேள்விப்படாதவர்கள்தான் இப்படி யெல்லாம் கேட்டார்கள். சில நாட்களில் சர்ச்சில் லெப்டி

னன்ட் கலனல் ஸ்தானத்திற்கு உயர்த்தப்பட்டார். ராணுவத்தில் அனுபவப் பழக்கம் சிறிதுமில்லாத ஒரு படைக்குத் தலைமை வகித்தார். இந்தப் படைக்குத் தகுந்த போதனைகளைக் கற்பித்து, யுத்தத்தில் ஈடுபட்டு நல்ல பெயர் வாங்க வேண்டிய பொறுப்பு சர்ச்சில் தலையில் விழுந்தது. கீழ் உத்தியோகஸ்தர்களை அழைத்தார். அவர்களை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, சில அரிய போதனைகளைக் கற்பித்தார். அவர்களுக்கு நல்ல உற்சாகத்தை யூட்டி, பல சிறந்த முறைகளைக் கற்பித்துக் கொடுத்து, நான்கே தினங்களில் அவர்களுடைய குறைபாடுகளைப் போக்கி, நல்ல வீரர்களெனப் பலர் புகழும்படி செய்துவிட்டார். மற்ற ராணுவ அதிகாரிகளைப் போலல்லாமல், தம் கீழ் உள்ளவர்களிடம் மிக்க அன்பும் பிரியமும் காட்டி, அவர்களுடைய வாழ்க்கையில் தாம் ஊக்கமும் பொறுப்பு முள்ளவரென எல்லோரும் நம்பும்படி செய்து, அவர்களுடைய பக்தியையும் விசுவாசத்தையும் பெற்றார். ஒரு மாதத்திற்குள் இவருடைய படையைக் கண்டு எல்லோரும் வியந்தனர்.

இவருடைய பதவிக்கு விசேஷ உடைகள் உண்டு. நீரில் நனையாத நீண்ட அங்கி ஒன்றும், குதிரை சவாரியின் போது அணிந்துகொள்ளும் மேஜோடு ஒரு ஜதையும், நீல வர்ணமுள்ள ஒரு தகட்டுத் தொப்பியும் அந்த அலங்கார உடைகளில் முக்கியமானவை. இவற்றைப் போட்டுக் கொண்டு சர்ச்சில் கண்ணாடி முன்பு நின்று பார்த்தார். ஒரே விகாரமா யிருந்ததைக் கண்டு எல்லாவற்றையும் கழற்றி எறிந்துவிட்டார். தமக்கே ஒரு பயத்தையும் அருவருப்பையும் மூட்டிய அந்த உடைகளைக் கண்டு தம் கீழ் உள்ளவர்களும் பயப்படக்கூடும் அல்லவா?

பயமேற்பட்டால் மனமுவந்து சேவகம் செய்யமாட்டார்க ளல்லவா? மற்ற ராணுவ அதிகாரிகளைப் போல் முன் னுக்குச் சிப்பாய்களைத் தள்ளிவிட்டுப் பின்னால் பல மெய் காவலர்கள் சூழ நின்றுகொண்டு வேடிக்கை பார்ப்பது இவருக்குப் பிடிக்காது. பெயரளவுக்கு மட்டும் மேலதிகாரியே தவிர, காரியத்தில் மற்றவர்களைப் போலவே யாதொரு வித்தியாசமு மின்றி, போரில் ஈடுபடுவார். தம் கீழ் அதிகாரிகளையும் மற்றவர்களையும் அழைத்து, 'நம் தாய்நாட்டில் நமக்கு உள்ள பந்தங் களை நான் உணர்வேன். நீங்கள் ஸ்காட்லந்து வாசிகள். உங்கள் ஊரிலேயே என் மனைவி மக்களையும் விட்டுவிட்டு உங்களிடம் வந்திருக்கிறேன். நம் உரிமைகளைக் காப்பதற் காகவே நாமெல்லோரும் வந்திருக்கிறோம். யுத்தம் என் பது ஒரு பந்தயம். அந்தப் பந்தயத்தில் ஈடுபடும் நாம் மிகவும் சந்தோஷமாகவும் உற்சாகமாகவும் ஆடவேண்டும் என்பது உங்களுக்கு நன்றாய்த் தெரியும்' என்று பேசி வீராவேசத்தைக் கிளப்பிவிட்டார்.

அவர் இரவில் தூங்கமாட்டார். உட்கார்ந்த இடத்தி லேயே சிறிது நேரம் ஓய்வு எடுத்துக்கொள்ளும் பழக்கம் அவருடைய அரசியல் வாழ்க்கையிலேயே அவருக்கு உண்டு. இரவில் அவர் தம் படையை அணிவகுத்து விளை யாட்டு யுத்தம் செய்வார். எதிரியின் படைகள் கதிகலங்கும். 'ஏதடா, இவர்கள் இரவில்கூடத் தூங்கவிட மாட்டார்கள் போலிருக்கிறதே!' என்று அஞ்சுவார்கள். இவருடைய சுறுசுறுப்பையும், உற்சாகத்தையும், தைரியத்தையும் கண்டு, இவருடன் எல்லோரும் மனக் கசப்பின்றி ஒத்துழைப்பார் கள். யுத்தம் நடந்துகொண்டிருக்கும்போது படையில்

யாராவது காயப்பட்டு வீழ்ந்தால் உடனே சர்ச்சில் அவ ரிடம் சென்று, காயத்தைப்பற்றி விசாரித்து, உற்சாகமூட்டி சிகிச்சைசெய்வதற்கு வேண்டிய நடவடிக்கைகளைச் சுணங் காது எடுத்துக்கொள்வார். சிகிச்சையி லிருக்கும்போது அவனைத் தினந்தோறும் சென்று பார்த்துவிட்டு வருவார். இவ்வளவு பெருந்தன்மையும் கருணையும் உடைய மேலதி காரியிடம் வேலை செய்வதற்கு யார்தான் பின்னடைவார் கள்?

பள்ளத்தில் பதுங்கி யுத்தம் செய்யும் படைகளில் இவர் படையும் ஒன்று. இவருடைய முகாமுக்கு அருகில் இவருக்கென்று விடப்பட்ட ஒரு குடிசை இருந்தது. அதுதான் இவருடைய வீடு. இரவும் பகலும் ஓயாது அந்தக் குடிசைக்கு அருகில் குண்டு மழை பொழிந்த வண்ணமா யிருந்ததை இவருடைய மேலதிகாரி யொருவர் கவனித்து, 'அந்த ஆபத்தான இடத்தில் நீர் தங்கக் கூடாது. ஆபத்தில்லாத வேறோர் இடம் பார்த்துக் கொள்ளும்' என்று சொன்னபோது, இவர், 'யுத்தமே ஆபத்தானதுதானே! ஆபத்தில் பங்கெடுத்துக் கொள்ளத் தானே நாம் இருக்கிறோம்! ஆபத்தில்தானே இன்பமும் பெருமையும் இருக்கிறது!' என்று கூறினர்.

ஒரு சமயம், சில ஸீனியர் ஆபீஸர்களுக்கு அவர் தம் குடிசையில் ஒரு விருந்து அளித்தார். விருந்துக்குப் பிறகு அவர்களை நோக்கி, 'ஆஹா! இன்றிரவு எவ்வளவு இன்ப கரமா யிருக்கிறது! முன்னணிக்குச் சென்று வேடிக்கை பார்த்துவிட்டு வரலாமென்று ஆசை உண்டாகிறதே. நீங்களும் வருவீர்களென்று நம்புகிறேன்' என்று அழைத்தார். என்ன செய்வது? புதிதாகச் சேர்ந்த

ஓர் உத்தியோகஸ்தர் இவ்வளவு தைரியமாக அழைக்கும் போது, 'மாட்டேன்' என்று சொல்லலாமா? ஒவ்வொருவருக்கும் ஜுரமடிக்க ஆரம்பித்துவிட்டது. ஒருவரையொருவர் பார்த்து அசட்டுச் சிரிப்புச் சிரித்தார்கள். 'கொஞ்ச தூரம் போய் வந்துவிடலாம்' என்று முடிவில் தெரிவித்தார்கள். சர்ச்சில் அவர்களை அழைத்துக்கொண்டு கல்லிலும் முள்ளிலும், சேற்றிலும் மணலிலும், மலையிலும் பள்ளத்திலும் இழுத்தடித்து, போர்முனையிலிருந்த பாசறைகளை யெல்லாம் சாவகாசமாய்ப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்து சேர்ந்தார். ஆபத்து ஒன்றும் நேரவில்லை. ஆனால் ஸீனியர்கள் மட்டும் தங்கள் முகங்களைச் சுழித்துக் கொண்டும் முனகிக்கொண்டும் இருந்தார்கள். நமனையும் அஞ்சாத சர்ச்சிலினிடம் இவர்களுக்குப் பயமும் பக்தியும் ஏற்பட்டது. அவருடைய குடிசைக்கே ஒரு புகழ் ஏற்பட்டுவிட்டது. பெரிய பெரிய உத்தியோகஸ்தர்களெல்லாம் கூடி ஆலோசிக்கும் ஸ்தலமாகிவிட்டது. ராணுவ நிபுணர்களெல்லாம் இவரை ஆலோசனை கேட்க ஆரம்பித்துவிட்டனர். யுத்தத்தில் எந்த நவீன முறையைக் கையாளுவதா யிருந்தாலும் சர்ச்சிலைக் கேட்டுத்தான் செய்வார்கள். ஒரு சமயம், சர்க்காரின் பிரதம வக்கீலான ஸர் பிரடெரிக் ஸ்மித், சர்ச்சிலுடன் அரட்டையடிக்க வந்தார். ராணுவ உத்தியோகஸ்தர் ஒருவர் அவரைக் கைது செய்து செயின்ட் ஓமார் என்னுமிடத்துக்கு நடத்திச் சென்று மறுநாள் காலையில் அட்ஜுடன்ட் ஜெனரலுக்கு முன்பு ஆஜராக வேண்டுமென்று கட்டளையிட்டார். சில சிப்பாய்களாகச் சேர்ந்து வேண்டுமென்றே இந்தக் குறும்பைச் செய்தனர். ஒரு சாதாரண

ராணுவ அதிகாரியின் முன்பு மந்திரிகள்கூட ஒரு புழு வுக்குச் சமானமானவர்கள்தான் என்று பிரதம வக்கீ லாக மந்திரி சபையை அலங்கரிக்கும் ஸர் பிரடெரிக் ஸ்மித் உணரவேண்டுமாம். இவர் சர்ச்சிலுக்குக் கண்ணுக் குக் கண்ணான நண்பர். உத்தரவின்படி, மறுநாட் காலையில் தம் இஷ்டம்போல் இவர் அட்ஜூடன்ட் ஜெனரலைக் கண்டு நடந்தவற்றைச் சொல்லவே, அவர் ராணுவச் சட் டப்படி கைது செய்ததற்காகத் தம் வருத்தத்தைத் தெரிவித் துக்கொண்டு அவரை விடுவித்தார்.

1915-ஆம் வருஷம் மார்ச் மாதத்தில், சில நாட்கள் விசேஷ லீவு எடுத்துக்கொண்டு, சட்டசபையில் சமர்ப் பிக்கப்பட்ட கடற்படை இலாக்காவின் வரவு செலவுத் திட்டத்தைப் பற்றிப் பேசுவதற்காக சர்ச்சில் போர் முனையிலிருந்து புறப்பட்டார். ராணுவ உத்தியோகஸ்தர் கள் பலரும் இவரை வழியனுப்பினார்கள். இவர்கள் தம் குறைகளில் மிகவும் முக்கியமானவற்றைச் சட்டசபையில் எடுத்துப் பேசி, அவற்றிற்குப் பரிகாரம் தேடுவாரென்று எதிர்பார்த்தனர். இலந்தைப் பழ ‘ஜாம்’ அதிகமாய் வழங் கப்பட்டதாம். விடுமுறை தினங்கள் மிகவும் சொற்பமாம். இவைகள்தான் இவர்களின் விசேஷமான குறைகள்.

சர்ச்சில் சட்டசபையில் பேசும்போது, முக்கியமாக, அந்தச் சமயம் கடற்படை இலாக்கா மந்திரியா யிருந்த லார்ட் பால்போருக்கு எச்சரிக்கை செய்தார். ‘பிரபுக்களே, நம் கடற்படையைப் பலப்படுத்துவதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட் டிருக்கின்றன? எனக்குப் பின்பு கடற்படை இலாக்கா மந்திரி வேலை பார்த்து வருகிறவர்கள் எந்தெந்த விஷயத்தில், எதிரியின்

பலத்துக்குத் தக்கவாறு நம் கடற்படையைத் தயாரித்திருக்கிருர்கள்? எதிரியின் நீர்மூழ்கிக் கப்பற் படையின் திறத்தையும் அவற்றின் விடாமுயற்சியையும் பால்போர் கவனிக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன். எந்த நிமிஷத்திலும் நீர்மூழ்கிக் கப்பல் மூலமாய்ப் பெரும் போர் நடைபெறும் என்று எதிர்பார்க்கிறேன். கடல் யுத்தத்தில் நாம் முக்கியமாய்க் கவனிக்கவேண்டிய விஷயங்கள் அநேகம் உண்டு. எதிரி இப்பொழுது என்ன செய்து கொண்டிருக்கிருன் என்றும், இனி என்ன செய்யக்கூடு மென்றும் கவனித்துக்கொண்டே முன்னெச்சரிக்கையுடன் நாம் தயாரா யிருக்கவேண்டும். எதிரியின் நோக்கங்களே ஊடுருவிப் பார்க்கவேண்டும். எந்தெந்த முறைகளே நம் எதிரி கையாளமாட்டா னென்று நினைக்கிருேமோ, அந்தந்த முறைகளே நாம் பிரமிக்கும்படி எதிரி கையாண்டாலும் ஆளலாம். ஆகவே நாம் எதற்கும் தயாரா யிருக்கவேண்டும். சில மாதங்களுக்கு முன் நான் கடற்படை இலாக்கா மந்திரியாயிருந்த பொழுது பற்பல விதத்தில் நம் பலத்தை அதிகரித்திருக்கிறேன் என்று பால்போர் சொல்லுகிருர். அதை நான் பாராட்டுகிறேன். ஆனுல் நான் அந்தச் சமயத்தில் எடுத்துக்கொண்ட ஒரு முக்கியமான நடவடிக்கையை அவர் அலட்சியம் செய்யலாகாது. எதிரியின் நீர்மூழ்கிப் படையின் அட்டகாசத்தைத் தடுப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளே அவ்வப்போது செய்துவந்திருக்கிறேன். பல முறைகளில் எதிரியை நாம் விரட்டி, அவனுடைய பலத்தை மிகவும் குறைத்துவிட்டாலும், மறுபடியும் நீர்மூழ்கிக் கப்பல்களின் அட்டகாசங்கள் நூதன முறையில் ஏற்படலாம் என்பதை நாம் எதிர்பார்க்கத்தான் வேண்டும். இதை

எல்லோரும் அலட்சியம் செய்யாமல் ஆழ்ந்து யோசிக்கும் படி கேட்டுக்கொள்ளுகிறேன். நான் இந்தச் சமயம் பால்போர் அவர்களுக்குக் கொடுக்கும் எச்சரிக்கைக்கு முக்கியமான சில காரணங்கள் உண்டு. அவற்றை இங்கு எடுத்துக் கூறினல் நமக்குப் பிரதிகூலமாய் முடியுமென்று நினைக்கிறேன். கடற்படைகளைப் பற்றிய விஷயங்களில் தக்க யோசனைகளைக் கூறி, தகுந்த ஏற்பாடுகளைச் செய்து முடிப்பதில் லார்ட் பிஷரைப் போன்ற நிபுணர்கள் கிடைப்பது அரிது. எனக்கும் அவருக்கும் மிகுந்த நட்புண்டு. முடிவில் என்மீது மனஸ்தாபங் கொண்டு தம் பதவியிலிருந்து விலகிக்கொண்டார். அவரை விட்டுவிடாமல் மறுபடியும் நியமித்து, காலத்தைக் கடத்தாமல் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்க வேண்டுகிறேன்' என்று மொழிந்தார். சபை கலைந்ததும், யுத்த அரங்கத்துக்குப் போனர். அங்கிருந்த சேனைகளின் பலம் மிகவும் குறைந்து, அதன் விளைவாகப் பல சிறு படைகள் சில பெரும் படைகளைச் சேர்ந்துவிட்டன. அவற்றில் சர்ச்சிலின் படையும் ஒன்று. இவருடைய ஆபீஸர் உத்தியோகமும் போய்விட்டது. இவர் முயற்சித்திருந்தாரானல் முந்திய உத்தியோகத்துக்கு மேலான உத்தியோகம் கிடைத்திருக்கும். ஆனல் அதற்காக அவர் காத்துக்கொண் டிருப்பவரல்லவே!

இந்தச் சமயத்தில் இங்கிலாந்தில் ஒரு பெரிய குழப்பம் ஏற்பட்டது. ராணுவத்தில் பிரஜைகள் சேரவேண்டுமென்ற ஒரு கட்டாய அவசரச் சட்டத்தை ஏற்படுத்த வேண்டியிருந்தது. பல பிரமுகர்கள் இதற்குச் சாதகமா

யிருந்தனர். ஆனால் ஆஸ்குவித் மட்டும் இதற்கு விரோதமான கொள்கையுடையவர். பல பத்திரிகைக்காரர்களும், மந்திரிகளும், இன்னும் எத்தனையோ பிரமுகர்களும், 'இந்தச் சமயத்தில் சர்ச்சில் இல்லையே!' என்று வருந்தி அவருக்குக் கடிதங்கள் எழுதி, ராணுவத்தை விட்டுவிட்டுத் திரும்பி வந்து அரசியல் விஷயங்களைக் கவனிக்கும்படி வேண்டிக் கொண்டனர். தேசத்துக்குப் பாடுபட முன்வந்தால் அது எந்தத் துறையானால்தான் என்ன?

சர்ச்சில் தாய்நாடு திரும்பினார். ஆகாயப் படைகளின் அவசியத்தைப் பற்றி வற்புறுத்தி, விமான இலாக்கா தனி இலாக்காவாக மாறவேண்டுமென்று சர்க்காரை வற்புறுத்தினார். அவருடைய டார்டனெல்ஸ் நடவடிக்கைகளைப் பற்றி விசாரிக்க ஒரு கமிட்டி ஏற்படுத்தப் பட்ட தல்லவா? அதன் முன் சமர்ப்பிக்க, பல வாக்கு மூலங்களைத் தக்க ஆதாரங்களுடன் தயார் செய்துகொண்டிருந்தார். அதோடு கூட யுத்தத்தைப் பற்றிய கட்டுரைகள் பலவற்றை எழுதிப் பத்திரிகைகளுக்கு அனுப்பினார். இவ்வாறு எழுதிய கட்டுரைகள் மொத்தம் பன்னிரண்டு. ஒவ்வொன்றுக்கும் ஐந்நூறு பவுன் கிடைத்ததென்றால் அவற்றை வாசித்த பொதுஜனங்களின் ஊக்கத்தை நாம் யூகித்துக்கொள்ளலாம். ஒரு மாதத்திற்குப் பிறகு ஜட்லாந்துப் போரைப் பற்றி (கடல் போர்) பாரபட்சமற்ற முறையில் ஒரு கட்டுரை யெழுதித் தரும்படி கடற்படை இலாக்காவிலிருந்து அவருக்கு ஒரு கடிதம் வந்தது. லார்ட் பால்போர் அனுமதி கொடுத்தால் எழுதித் தருவதாகக் கூறிவிடவே, லார்ட் பால்போரும் உடனே அவருக்கு ஒரு கடித மெழுதித் தம் சம்மதத்தைத்

தெரிவித்தார். பால்போருக்கும் அவருக்கும் இருந்துவந்த மனஸ்தாபத்திற் கிடையில் இந்த மாதிரிக் கடிதமொன்று பால்போரிடமிருந்து வந்தால் அது சர்ச்சிலுக்கு நல்ல மதிப்பைக் கொடுக்கு மல்லவா? அவருக்கு இது ஒரு வெற்றி யல்லவா? உடனே கட்டுரை எழுதிக் கொடுத்தார்.

யுத்தம் ஆரம்பிக்கவிருந்த சமயம், ஆகஸ்டு 1911-ல் இவர் ஒரு மெமோராண்டம் எழுதினு ரல்லவா? அதற் கடுத்தபடியாக இப்பொழுது ஒரு மெமோராண்டம் தயார் செய்தார். அது பிரான்ஸில் சோமே என்னுமிடத்தில் நடந்த போரைப் பற்றிய விபரம். கவர்ன்மெண்டும் பொது ஜனங்களும், மேலே சொன்ன சோமே யுத்தத்தில் தமக்கு வெற்றி கிடைத்துவிட்டதாகவும், எதிரிக்கோ அளவுக்கு மேற்பட்ட உயிர்ச் சேதம் ஏற்பட்டதாகவும் நம்பியிருந்தார் கள். அவர்கள் நினைத்துக்கொண்டிருந்தது முற்றிலும் தவறென்று இந்த மெமோராண்டத்தில் சர்ச்சில் விளக்கி யிருந்தார். இதை மந்திரி சபையின் முன்பு வைத்தார் பிரதம வக்கீலான ஸர் ஸ்மித். ராணுவ அதிகாரிகளின் மூலம் மந்திரி சபைக்கும் பொதுஜனங்களுக்கும் கிடைத்த மேற்படி போரைப் பற்றின விஷயங்கள் சுத்தப் பொய் யென்று சர்ச்சில் நிரூபித்திருந்தார்.

ராணுவ அதிகாரிகளின் உத்தேசப்படி, பிரிட்டிஷா ரின் உயிர் நஷ்டத்தைவிட எத்தனையோ மடங்கு ஜெர்மன் படைகளின் நஷ்டம் அதிகமென்று இருந்தது. சர்ச்சிலின் மெமோராண்டத்தில், அதற்கு நேர் விரோதமாக, எதிரியின் நஷ்டத்தைவிட பிரிட்டிஷ் படைகளின் நஷ்டம் இரண்டே கால் பங்கு அதிகமென்று தெரிவிக்கப்பட்டிருந்தது. யுத் தம் முடிந்த பின், இவற்றைக் கவனிக்கும்போது சர்ச்சிலின்

உத்தேசமே அநேகமாய்ப் பொருத்தமா யிருந்தது. சர்ச்சி லின் மேற்படி மெமோராண்டம் 1916, ஆகஸ்டு முதல் தேதியன்று தயாரிக்கப்பட்டது. அதே தினத்தில் ராணுவ அதிகாரிகளிடமிருந்து, ஜூலை மாதத்தில் விளைந்த உயிர்ச் சேதத்தைப் பற்றிய ரிப்போர்ட் ஒன்று அரசாங்கத்தாருக்கு வந்தது. அந்த ரிப்போர்ட்டில் 1,30,000 ஜெர்மானியர்கள் சேதமென்று தெரிவித்திருந்தார்கள். அது மிகவும் தவறான உத்தேசமென்றும், 65,000க்கு மேல் இருக்க முடியாதென் றும் தம் மெமோராண்டத்தில் சர்ச்சில் தெரிவித்திருந்தார். யுத்தம் முடிந்த பின்பு கணக்கெடுத்துப் பார்க்கும்போது, குறிப்பிட்ட மாதத்தில் 60,000 ஜெர்மானியர்கள் கொல்லப் பட்டனர் என்று தெரியவந்தது. ஜெர்மனியின் படைப் பலம், நேசக் கட்சிப் படையை எதிர்த்துப் போர் புரிந்த மட்டில் கணக்கிட்டுப் பார்த்தால், உத்தேசமாய் 14 அல் லது 15 டிவிஷன்களுக்கு மேல் இருக்க முடியாதென்று அவர் மெமோராண்டத்தில் சொல்லியிருந்தார். யுத்தத்திற் குப் பின்பு கணக்கெடுத்ததில் ஜெர்மானியர்கள் 16 டிவி ஷன்களைக் கொண்டே நேசக் கட்சியினரைத் தாக்கினார்க ளென்று தெரியவந்தது.

நேசக் கட்சியினருக்கு உயிர்ச் சேதம் அதிகமாயும் எதிரியின் சேதம் குறைவாயும் இருந்ததற்குக் காரணம் கூறுகையில், கைதேர்ந்த, அளவுக்கு மிஞ்சிய படைகளை நேசக் கட்சியினர் வைத்துக்கொண்டு போர் புரிந்ததால் அதிகச் சேதம் ஏற்பட்டதென்று அந்த மெமோராண்டத் தில் காட்டியிருந்தார்.

இந்த மெமோராண்டத்தின் நகல் ஒன்றை பிரான்ஸி லிருந்த ராணுவத் தலைமை ஆபீசுக்கு அனுப்பினார்கள் பிரிட்

டிஷ் சர்க்கார். இதைப் படித்துப் பார்த்ததும் ராணுவ அதி காரிகளெல்லாம் மிகவும் கோபங்கொண்டு சர்ச்சிலைத் தூஷித்தனர். யுத்தம் முடிந்ததும், மேற்படி மெமோராண் டத்தில் குறிப்பிட்டவற்றை யெல்லாம் உண்மை விபரங்களு டன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, உலகத்திலேயே சர்ச்சி லைப் போன்ற அறிவாளியும் தீர்க்கதரிசியும் இல்லையென்று நிரூபிக்கப்பட்டது மன்றி, ராணுவ இலாக்காவிலேயே இந்த மெமோராண்டத்தை ஓர் இணையில்லாத காவிய மென்று கொண்டாடி, எல்லா ராணுவ ஆபீஸர்களும் இதைப் படித்து உருப்போட வேண்டுமென்றும் ஏற் பட்டது.

அதிகாரமும் பொறுப்பும் வகித்து இடைவிடாது உழைத்துவந்த சர்ச்சிலுக்கு இப்பொழுது அவருடைய சுறுசுறுப்புக்குத் தக்க உத்தியோகமும் அதிகாரமும் இல் லாமையால் அவரது ஊக்கம் குன்றி, பலம் குறைந்து, தேக ஆரோக்கியத்திற்கே பழுதும் ஏற்படலாயிற்று. டார் டனெல்ஸ் விஷயமாக விசாரிக்க ஏற்படுத்திய கமிட்டியின் விசாரணைகளும் அப்பொழுதும் முடிந்தபாடில்லை. அக்காலத் தில் சர்ச்சிலுக்குச் சித்திரக் கலையில் பிரேமை ஏற்பட்டிருந் தது. அவர் பதவியிலிருந்து இறங்கியதும், அவரால் சிருஷ்டிக் கப்பட்ட பீரங்கி மோட்டார்களைக் கையாண்டுவந்த படை யினர், அவர்களுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்வ தற்காக, சர்ச்சிலின் படமொன்றைத் தயாரித்து அவருக்குப் பரிசளிப்பதாகத் தீர்மானித்து, ஸர் ஜான் லாவரீ என்ற சித் திரக் கலை நிபுணரிடம் போய்ச் சர்ச்சிலின் படத்தைத் தயா ரிக்கச் சொன்னார்கள். அவரும், சர்ச்சிலை ஓர் ஆசனத்தி லமர்த்தி அவருடைய படத்தை வரைந்துவிட்டார். அந்தச்

சமயத்தில் சர்ச்சிலுக்கு ஏதோ ஒரு புது உணர்ச்சி ஏற்பட்டு, சித்திரக் கலையைக் கற்றுக்கொள்ளப் பிரியப்பட்டு ஸர் ஜான் லாவரீயின் சித்திரச் சாலையில் மாணவராகச் சேர்ந்தார். சில மாதங்களில், சித்திரக் கலையில், குறிப்பாக வர்ணந் தீட்டும் சித்திரக் கலையில், மிகவும் தேர்ச்சி பெற்று, தம் படங்களைக் கண்டோரெல்லாம் ஆச்சரியப்படும்படி முன்னேறினர். கண்காட்சிச் சாலைகளுக்கெல்லாம் அவருடைய சித்திரங்கள் அனுப்பப்பட்டன. லாயிட் ஜார்ஜும் தம் வீட்டில் சர்ச்சிலால் தீட்டப்பெற்ற 'சர்ச்சிலின் படம்' ஒன்றைப் பிரதானமான ஓர் இடத்தில் தொங்கவிட்டு, தம்மைக் காணவரும் நண்பர்களுக் கெல்லாம் அதைக் காட்டி ஆச்சரியப்படுவார்.

1916-ம் வருஷம் டிசம்பர் மாதம் பிரதம மந்திரியான ஆஸ்குவித் தம் பதவியை ராஜீநாமா செய்தார். லாயிட் ஜார்ஜ் பிரதம மந்திரியானர். சர்ச்சிலின் நட்சத்திரமும் உச்சத்திலேறி மறுபடியும் பிரகாசிக்கத் தொடங்கியது.

# 12. மீண்டும் பதவி பெறுதல்

சர்ச்சிலை மறுபடியும் மந்திரிப்பதவியில் அமர்த்தவேண்டு மென்று லாயிட் ஜார்ஜ் தீர்மானித்தார். ஆனல் எதிர்க் கட்சியினர் விடுவார்களா? டார்டனெல்ஸ் சம்பவத்தில் இவருடைய நடவடிக்கைகளை விசாரிக்க ஒரு கமிட்டி ஏற் படுத்தி யிருக்கும்போது, அந்தக் கமிட்டியின் முடிவான தீர்மானம் வெளியாவதற்கு முன்பு சர்ச்சிலை மந்திரி ஸ்தா னத்துக்கு எடுத்துக்கொள்ளக் கூடாதென்று விவாதித் தார்கள். கமிட்டியின் தீர்மானங்கள் சர்ச்சிலைப் பாதிக் கவே மாட்டாவென்று லாயிட் ஜார்ஜுக்கும் சர்ச்சிலுக்கும் நன்ருய்த் தெரியும். மற்றவர்களுக்கு என்ன தெரியும்?

யுத்தத்தை நடத்தும் முறைகளைப் பற்றிப் பேசுவதற் கென்று சட்டசபையின் ரகசியக் கூட்டமொன்று கூட்ட வேண்டுமென்று லாயிட் ஜார்ஜைச் சர்ச்சில் கேட்டுக் கொண்டவாறு, 1917, மே மாதத்தில் ரகசியக் கூட்டமும் கூடிற்று. சர்ச்சில் எழுந்து பேசினர்: 'நான் ஏற்கனவே என்னுடைய மெமோராண்டத்தில் குறிப்பிட்டிருக்கிறபடி நாம் திடுக்கிடும்படி நமது எதிரியின் நீர்மூழ்கிக் கப்பல் களின் அட்டகாசங்கள் நாளுக்கு நாள் அதிகரித்து வரு கின்றன. நான் இப்பொழுது உத்தியோகத்தில் இல்லாத தால், தக்க ஆதாரங்களுடன் உங்கள் முன்னிலையில் பேச முடியவில்லை. இந்த விஷயத்தில், ஒரு கோவணாண்டி யுத்தத்துக்குச் சென்ருல், எப்படி அவனல் எதிர்த்து நிற்க முடியாதோ அதே நிலைமையில்தான் நான் உங்கள் முன் னிலையில் நின்று பேசவேண்டி யிருக்கிறது. நமக்கு உதவி

புரிந்த ரஷ்யாவின் பலம் குன்றிவிட்டது. அமெரிக்கா வானது நமது உதவிக்கு எந்த நிமிஷத்திலும் வரும் என்று எதிரியும் எதிர்பார்த்துத்தான் இருக்கவேண்டும். அமெரிக்கர்கள் நம் உதவிக்கு வராமல் தடுத்துவிட வேண்டுமென்று அதற்குத் தக்கபடி எதிரியின் நீர்மூழ்கிப் படையின் பலமும் பன்மடங்கு அதிகரித்துக்கொண்டு வருகிறது. இந்த ஆபத்தினின்றும் நாம் தப்பவேண்டும். அமெரிக்காவின் உதவி நமக்குக் கிடைக்காவிட்டால் நமது பாடு ஆபத்துத்தான். ஆகவே, எதிரியின் நீர்மூழ்கிப் படையை நாம் எதிர்த்து, அதன் பலத்தை ஒடுக்கவேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். இனியும் சுணங்கக் கூடாது. அமெரிக்காவின் உதவி கிடைக்கும் வரையில் நம் ராணுவப் படையின் இப்போதைய பலம் குன்றாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டும்.' இதைக் கேட்ட சபையோர்கள் மிகவும் உற்சாகங் கொண்டு சர்ச்சிலுக்கு மறுபடியும் மந்திரிப் பதவி கொடுத்தால் நலமா யிருக்குமென்று எண்ணினர். சபையின் நோக்கத்தை அறிந்த லாயிட் ஜார்ஜ், அன்று மாலையில் சர்ச்சிலைத் தனியே அழைத்து, 'உங்களை வெடிமருந்து இலாக்காவுக்கு மந்திரியாய் அமர்த்தி யிருக்கிறேன்' என்று வெளியிட்டார். மறுதினம் அவ்வண்ணமே விவரம் பிரசுரமாயிற்று. கன்ஸர்வேடிவ் கட்சியினரும் பல பத்திரிகைகளும் இந்த நியமனத்தைக் கண்டித்தனர். ஆனால், மற்ற மந்திரிக ளெல்லோரும் சர்ச்சிலை மனமார வரவேற்றனர். பதவிக்கு வந்த சில தினங்களுக்குள் சர்ச்சில் மறுபடியும் தேர்தலுக்கு நிற்கும்படி ஏற்பட்டது. டண்டீ தொகுதிக்கே போட்டியிட்டார். பெரும்பான்மை யான ஓட்டுக்களால் எதிரியை முறியடித்தார்.

'இங்கிலாந்துக்காக யாரும் சர்ச்சிலைப் போல் பாடுபட வில்லை' என்ற கியாதியைத் தாம் பதவி பெற்ற வெகு சொற்ப தினங்களுக்குள் சம்பாதித்தார். புதிய புதிய வெடி குண்டுகளைச் சிருஷ்டிப்பதிலும், நூதன முறையில் டாங்கு களை உற்பத்தி செய்வதிலும், அவற்றிற்குத் தகுந்த நிபுணர் களைத் தேடி அமர்த்துவதிலும், எதிரியை முறியடிக்கத் தகுந்த நூதன சாதனங்களைக் கண்டுபிடிப்பதிலும் தம் காலத்தைக் கழித்துவந்தார். முன்பு ஏற்பட்டது போல் தம் மீது எந்தப் புகாரும் ஏற்படாவண்ணம் பல முக்கிய அங் கத்தினர்களைக் கொண்ட கமிட்டி யொன்றை ஏற்படுத்தி அதன் மூலம் எல்லாவற்றையும் நடத்திவந்தார். எந்த விஷயத் திலும் முன்னெச்சரிக்கையுடன் தயாரா யிருந்துவரும் இவரது ஒப்பற்ற சாமர்த்தியத்தை ராணுவ உலகெங்கும் மெச்சினர். அமெரிக்கப் படைகளுக்கு வேண்டிய சாத னங்களை ஏற்படுத்துவதற்காக அமெரிக்க சர்க்கார் சர்ச் சிலுக்கு ஒரு பெரிய அதிகாரத்தைக் கொடுத்து, ஏராள மான திரவியத்தையும் அவர் கையில் ஒப்புவித்து அவ்வப் போது வேண்டியவற்றைச் செய்யுமாறு கேட்டுக் கொண்டனர்.

வெடிமருந்து இலாக்காவை மட்டுமே கவனிக்காமல், யுத்த களங்களுக்குச் சென்று யுத்தத்துக்கு வேண்டிய வசதிகளை நேரிலேயே உணர்ந்து, விமானக் கப்பலில் திரும்பி வந்து, தக்க நடவடிக்கைகளை யெடுத்துக்கொள் வதில் சர்ச்சில் ஈடுபட்டிருந்தார். முற்பக லெல்லாம் வெடிமருந்து இலாக்காவைக் கவனிப்பார்; பிற்பகலில் விமானமேறிப் போர்முனைக்குச் செல்வார். விமானங் களில் பறந்துகொண்டே யுத்தத்தின் போக்கைக் கவனித்

துக்கொண்டிருப்பார். அவ்வப்போது சில குறிப்புகளை எழுதிக்கொள்வார். இரவில் வெகுநேரம் விழித்திருந்து, உலகினர் அறியும்பொருட்டு யுத்த சம்பந்தமான பல உண்மைகளை எழுதுவார். யுத்தம் முடியும்வரை, இவ்வாறே தம் நாட்களைக் கழிக்கலானர். 1918-ஆம் வருஷம் மார்ச் மாதத்தில் ஜெர்மன் படையின் முன்னேற்றம் வெகு துரிதமா யிருந்தது. எங்கும் ஒரே பரபரப்பு. பிரிட்டனைக் காக்கும் பொறுப்பு ஒவ்வொருவருக்கும் ஏற்பட்டது. அந்த நெருக்கடியான சமயத்தில் பிரிட்டன் எங்கும் வேலைநிறுத்தம் உண்டாயிற்று. தொழிலாளர்களின் அட்டூழியங்களைச் சொல்ல முடியாது. பிரிட்டிஷ் சர்க்கார் பயந்துவிட்டது. பார்த்தார் சர்ச்சில். பிரதம மந்திரியுடன் கலந்து யோசித்தார். தொழிலாளர் கூட்டங்கள் பலவற்றைக் கூட்டுவித்தார். யுத்தத்தின் பிறகு அவர்களுடைய கோரிக்கைகள் கவனிக்கப்படு மென்று சொல்லிப் பார்த்தார். வேறு பல சாதுரியங்களைக் கையாண்டும் பார்த்தார். பலன் ஏற்படவில்லை. தொழிலாளர்களுக்குள் பிளவு உண்டாக்கினர். அறிக்கைகள் பல விடுத்து, தொழிலாளர்கள் அவரவர் தொழிலைச் செவ்வனே முறைப்படி செய்யாவிட்டால் ராணுவத்தில் சேரும்படி பலவந்தப் படுத்தப்படுவார்கள் என்று ஒரு குண்டு போட்டார். உடனே பலன் கிடைத்தது. 'பந்திக்கு முந்திக்கொள், படைக்குப் பிந்திக்கொள்' என்ற பண்டைக்கால வழக்கம் 1918 - ஆம் வருஷத்திலும்கூட இங்கிலாந்தி லிருந்துவந்த தென்று இதன் மூலம் தெரிகிறதல்லவா? சர்ச்சில் கையாண்ட இந்த முறையினுல் அவர் தொழிலாளர்களால் வெறுக்கப்பட்டார். அவர் அதைப் பொருட்படுத்தவில்லை.

தேசத்துக்கேற்பட்ட மிகவும் நெருக்கடியான நிலைமையின் போது தம் செல்வாக்கையா கவனிப்பார் மகா தேசாபி மானியாகிய சர்ச்சில்? வெடிமருந்து இலாக்காவில் வெகு மும்முரமாக வேலைகள் நடந்தன. 'இவர் என்ன மந்திர வாதியோ, அல்லது செப்பிடுவித்தைக்காரரோ?' என்று பலர் அதிசயிக்கும்படி யுத்தத்துக்கு வேண்டிய வெடி மருந்து முதலியவற்றைத் தயாரித்தார். ஜெர்மானியர் 1918-ஆம் வருஷ முடிவில் தோற்றுவிடுவார்க ளென்று முற்றிலும் நம்புவதற்கு அறிகுறிகள் ஏற்பட்டன. ஆனால் சர்ச்சிலா இந்த அறிகுறிகளை நம்பிச் சும்மா இருப்பார்? 1919-ஆம் வருஷம் யுத்தம் நடந்தால் அதற்கு வேண்டி யிருக்கும் சாதனங்கள் எவ்வளவோ அவ்வளவையும் தயா ரித்து வைத்தார். ராஜிப் பேச்சு முடிந்து கையொப்பமிடும் வரையில் அவர் ஊக்கத்தைக் குறைக்கவே யில்லை. 'நாங் கள் தோற்றுவிட்டோம். யுத்தத்தை நிறுத்துங்கள்' என்று ஜெர்மானியர்கள் உலகறியும்படி அறிவித்த பிறகுதான் அவர் ஓய்வு எடுத்துக்கொண்டார். யுத்தம் நின்ற 1918-ஆம் வருஷம், நவம்பர் மாதம் 11-ஆம் தேதியன்று, சர்ச்சில் ஜோராக உடைதரித்து, அருமையான கைத்தடி யொன்றைக் கையிலேந்தி, வாயில் ஒரு பெரிய சுருட்டைப் பிடித்துக்கொண்டு, மோட்டார் வண்டியில் தம் மனைவியார் சகிதம் ஏறிக்கொண்டு, லாயிட் ஜார்ஜின் வீட்டுக்குப் போய், அவருக்குத் தம் வாழ்த்தைத் தெரிவித்தார். இவருக்கும் லாயிட் ஜார்ஜுக்கும் 14½ வருஷங்களுக்கு முன்பு ஏற்பட்ட நட்பு இன்று பன்மடங்கு அதிகரித்து, இருவரும் நட்பின் உன்னத ஸ்தானத்தை அடைந் தார்கள். உலகின் நாலாபக்கங்களிலிருந்தும் இவர்

களுக்கு வாழ்த்து மொழிகள் வந்தன. சர்ச்சிலை கன்ஸர்வேடிவ் கிளாட்ஸ்டன் என்றும், லாயிட் ஜார்ஜை லிபரல் டிஸ்ரேலி யென்றும் அழைக்கலானார்கள் உலகத்தினர்.

# 13. இரட்டை இலாக்கா மந்திரி

அரசாங்க நிர்வாகத்தில், மந்திரிகளில் ஒவ்வொருவரும் தத்தமக் கேற்பட்ட இலாக்காவே போதுமென்று உணர்வர். ஆனால், சர்ச்சில் மட்டும் அப்படிப்பட்ட ரகத்தைச் சேர்ந்தவரல்லர்.

1910-ஆம் வருஷம் நடந்த தேர்தலுக்குப் பிறகு 1915-ல் தேர்தல் நடந்திருக்க வேண்டும். மகா யுத்தத்தை முன்னிட்டு 1918 வரையில் தேர்தல் ஒத்திவைக்கப் பட்டது. 1918-ஆம் வருஷம் டிசம்பர் மாதம் பொதுத் தேர்தல் நடந்தது. டண்டீ தொகுதிக்கே மறுபடியும் சர்ச்சில் போட்டியிட்டார். மகத்தான வெற்றி பெற்றார். லாயிட் ஜார்ஜ் மந்திரி சபை அமைத்தார். சர்ச்சில், யுத்தக் காரியதரிசியாகவும், விமானப் படை இலாக்கா மந்திரியாக வும் நியமிக்கப்பட்டார். 1918-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் ஸ்திரீகளுக்கு ஓட்டுரிமை வழங்கப்பட்டது. ஆகவே, ஓட்டர்களின் எண்ணிக்கையும் உயர்ந்தது.

தேர்தலுக்குப் பிறகு சட்டசபை கூடிற்று. காப்டன் வெட்ஜ்வுட் பென் என்பவர் எழுந்து, சர்ச்சிலுக்கு இரண்டு இலாக்காக்களின் பொறுப்பை அளித்தது பற்றி விவாதித் தார். ஆகாயப் படை இலாக்காவின் உதவிக் காரியதரிசி யாகிய ஜெனரல் சீலீ யென்பவர் சர்ச்சிலின் நியமனத்தைக் கண்டித்து, தம் பதவியை ராஜீநாமா செய்தார்.

மோட்டார் சவாரியில் சர்ச்சிலுக்குப் பெரிய இன்பம் உண்டு. அது போலவே ஆகாயத்தில் பறந்து செல்வதிலும்

அவருக்கு ஒரு மகிழ்ச்சி. 1916-ஆம் வருஷம் முதல் 11 வருஷங்கள் வரை விமானப் போக்குவரத்து இலாக்காவில் ஏதாவது ஒரு பதவியை வகித்துவந்தார். முதன் முதல் 1912-ஆம் வருஷம் அவர் விமானமேறிச் சென்றார். மகா யுத்தத்தின்போது தம் விமானத்தைத் தாமே ஓட்டிக் கொண்டிருந்தார். 1918-ஆம் வருஷம் ஒரே தினத்தில் இரு முறை அவருடைய விமானம் கோளாறடைந்துவிட்டது. ஒருமுறை பிரிட்டிஷ் கால்வாயைத் தாண்டிச் செல்லும் போது விமானம் பழுதுபட்டதால், நல்ல வேளையாகச் சமுத்திரத்தில் விழுந்து விடாமல், பிரெஞ்சுக் கரையைச் சேர்ந்து விட்டார். எவ்வளவோ முயன்றும் அவரால் 'பைலட்' ஆக முடியவில்லை. விமானம் பலமுறை தவறியதைக் கண்டும் அங்குமிங்கும் பல விபத்துக்கள் ஏற்படுவதைக் கண்டும், விமானத்தில் சாதாரணப் பிரயாணியைப் போல் பிரயாணம் செய்வதையும் நிறுத்திவிட்டார். எவ்வளவோ பெரிய தைரியசாலியென்று அழைக்கப்படும் சர்ச்சிலுக்குக்கூட ஆகாயமென்றால் 'காபரா'தான்.

யுத்தக் காரியாலயத்தில் அவர் முதன் முதல் செய்யத் தொடங்கிய வேலை ராணுவ பலத்தைக் குறைப்பதே. யுத்தம் நின்றுவிட்டதால், சிப்பாய்களெல்லோரும் வீட்டுக்குப் போய்ச் சேரவேண்டுமென்று துடித்துக்கொண்டிருந்தனர். ராணுவத்திலுள்ள கண்டிப்பும், அதட்டலும், மிரட்டலும் அவர்களுக்கு இனிமேல் பிடிக்குமா? எல்லோரும் மூட்டைகளைக் கட்டுவதற்குக் காத்துக்கொண்டிருந்தனர். உத்தரவு வேண்டாமா? அதற்குத் தாமதம் ஏற்பட்டது. ராணுவத்தில் குழப்பங்களும், கலவரங்களும் ஏற்பட்டன. இவற்றை வளர விடுவதில் சர்ச்சிலுக்கு

விருப்பமில்லை. நிதானமாகச் சமாதானங்களை எடுத்துச் சொல்லி, சிப்பாய்களைக் கட்டுப்பாட்டினின்றும் விடுவிக்கும் பணியில் தீவிரமாய் இறங்கினர். 1919-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் மான்செஸ்டரில் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசும்போது சிப்பாய்களில் முக்கால் பாகத்தினர் விரைவில் விலக்கிவிடப்படுவார்களென்றும், கைப்பற்றிய பிரதேசங்களைப் பாதுகாத்துவரும் ராணுவப் படையைச் சேர்ந்தவர்களுக்கு முதலாளி வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் வேலை கொடுக்கத் தயாரா யிருக்கவேண்டு மென்றும் சொன்னர். ரஷ்யாவின் போல்ஷிவிக் இயக்கத்தை அடக்குவதற்காகச் சில படைகளைத்தான் நிறுத்தி வைத்துக்கொள்ளப் போவதாக உலவி வந்த பிரஸ்தாபத்தைக் கண்டித்தார். போல்ஷிவிஸத்தை முறியடிக்க வேண்டி பிரிட்டன் கட்டுப்பட்டிருக்கும் சில விஷயங்கள் சர்ச்சிலுக்குத் தெரியாது.

யுத்தக் காரியாலயத்துக்கு வந்து உட்கார்ந்து பழைய கட்டுக்களைப் புரட்டிப் பார்த்ததில், ரஷ்யாவின் போல்ஷிவிக் இயக்கத்தை ஒடுக்குவதற்காக ராஜவிசுவாசிகளுக்கு உதவி செய்வதென்று பிரிட்டன் கட்டுப்பட்டிருப்பதாகத் தெரிந்துகொண்டார். என்ன செய்வது? இவர் இந்தப் பதவியை ஏற்றுக்கொள்வதற்கு முன்னரே யுத்த மந்திராலோசனை சபை இந்த மாதிரிக் காரியத்தைச் செய்துவிட்டது. யுத்த மந்திராலோசனை சபையில் சர்ச்சிலுக்கு ஸ்தானம் கிடையாது. அந்தச் சபையோ யுத்தக் காரியாலயத்துக்குக் கட்டுப்பட்டதல்ல. என்ன செய்வார், பாவம்? பொதுக் கூட்டத்தில் தாம் கொடுத்த வாக்குறுதிக்கு மாருக போல்ஷிவிக் இயக்கத்தை ஒடுக்கக் கடமைப்பட்டிருக்கிருர். யுத்த மந்திராலோசனை சபையோ சர்

வாதிகாரம் படைத்தது. இதன் சர்வாதிகாரத்தை ஒடுக்கி விடவேண்டு மென்ற நிபந்தனையின் பேரில்தான் இவர் மந்திரிப் பதவியை ஒப்புக்கொண்டார். எனினும், அது நினைத்தவுடன் செய்துவிடக்கூடிய காரியமன்று.

ரஷ்யா விஷயத்தில் தலையிட இவருக்கு முதலில் விருப்ப மில்லை. இந்த விஷயத்தைப் பற்றி பாரிஸிலுள்ள சுப்ரீம் கவுன்சிலில் விவாதித்துத் தீரவேண்டு மென்று பிடிவாதம் செய்து, அதன்படி விவாதிக்கப்பட்டது. யுத்தத்தில் வெற்றி பெற்ற நேச தேசங்களின் பிரதிநிதிகளைக் கொண்ட இந்த சுப்ரீம் கவுன்சிலும், ரஷ்யப் புரட்சி இயக்கத்தைக் கட்டாயம் அடக்கிவிடத்தான் வேண்டு மென்று தீர் மானித்துவிட்டது. சர்ச்சிலும் கட்டுப்பட வேண்டிய தாயிற்று. இந்த விஷயங்களை விபரமாகத் தெரிந்து கொள்ளாத பொதுஜனங்கள் சர்ச்சிலைத்தான் நிந்தித்தார் கள். விதியின் விளையாட்டுக்க ளெல்லாம் இப்படித்தானே! 'பழியோரிடம் பாவமோரிடம்' என்பது கலியுகக் கூற்றல்லவா? சுப்ரீம் கவுன்சிலின் தீர்மானத்துக்குக் கட்டுப்பட்ட பின்பு அதன்படி நிறைவேற்றி வைப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யத் துணிந்தார் சர்ச்சில். அவர் பிரதம மந்திரியா யிருந்திருந்தால் ரஷ்யாவின் புரட்சி இயக்கத்தை முற்றிலும் ஒடுக்கியிருப்பார். ஏற்கனவே, ஆர்ச்சேஞ்சல், காக்கஸஸ், சைபீரியா முதலிய முக்கிய ஸ்தலங்களில் பிரிட்டிஷ் சைனியங்கள் முகாமி லிருந்ததால் ரஷ்ய இயக்கத்தை முறியடித் திருக்கலாம்.

லாயிட் ஜார்ஜுக்கு அபிப்பிராயம் வேறு விதமா யிருந்தது. ஏற்கனவே, போல்ஷிவிக் இயக்கத்தின் காற்று இங்கிலாந்துக்கும் அடித்து, போல்ஷிவிக் இயக்கத்துக்கு

ஆதரவு கொடுக்கும் கட்சியினர் பலர் இருந்தனர். லெனி னும், லிட்வினுபும் பெரிய ராஜதந்திரிகள். தங்கள் பிர சாரத்தாலும் வேறு பல கட்டுப்பாடுகளாலும், தங்கள் இயக்கம் புரட்சி இயக்கமல்லவென்றும், ரஷ்யாவில் ஒற் றுமை ஏற்படுத்தி நல்ல முறையில் ஆட்சி நடத்து வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து வருவதாகவும் உலகம் நம்பும்படி பிரசாரங்கள் செய்துவந்தனர். பல தேசத்தவரும் இதை நம்பினர். யுத்தத்திற்குப் பிறகு ஏற்பட்டிருந்த பல உள்நாட்டு நெருக்கடிகளுக் கிடையே ரஷ்ய இயக்கத்தில் தலையிடுவது லாயிட் ஜார் ஜுக்கு உசிதமாகத் தெரியவில்லை. ஆனல் சர்ச்சிலுக்கு மட்டும் லெனின், டிராட்ஸ்கி முதலியவர்களை நம்ப முடிய வில்லை. புரட்சி இயக்கம் உலகெங்கும் பரவி, பெரியதோர் பிரளயமே ஏற்பட்டுவிடப் போவதாக அவர் எண்ணிய தற்குச் சான்ருக, பிரிட்டனிலேயுள்ள அபேதவாதிகளும் இன்னும் பலரும் பிரிட்டிஷ் ராணுவத்தைக் கலைப்பதற்கு அநேக முறைகளைக் கையாண்டு வந்தனர். இவர்களுக்குச் சில பத்திரிகைகளின் ஆதரவும் இருந்துவந்தது. ஆகவே, லாயிட் ஜார்ஜின் அபிப்பிராயத்துக்கு மாருக, ரஷ்யப் புரட்சி இயக்கத்தை வேரறுத்துவிடத் துணிந்து, ரஷ்யாவி லிருந்த பிரிட்டிஷ் தளபதி ஜெனரல் டெனிக்கின் என்பவர் வசம், மகா யுத்தத்தின் பிறகு மிஞ்சிய சுமார் 70 கோடி பவுன் மதிப்புள்ள வெடி மருந்து பீரங்கி முதலியவற்றை ஒப்புவித்தார். இத்தகைய பிரிட்டிஷ் சாகசங்களை ஏற் கனவே எதிர்பார்த்திருந்த லெனினிடம் இந்த ஜம்பங்க ளெல்லாம் பலிக்கவில்லை. ஆகையால் சர்ச்சிலின் துடுக்கை எல்லோரும் கண்டித்து நிந்தித்ததுடன் அவரைத் துன்புறுத்

தவும் முற்பட்டனர். லாயிட் ஜார்ஜோ புரட்சி இயக்கத்தின் நோக்கங்களை நன்ருக உணரவில்லையாம். 1919-ஆம் வருஷம் நவம்பர் மாதத்தில் காமன்ஸ் சபையில் அவர் பேசும்போது, 'மகா யுத்தத்தின்போது போல்ஷிவிக் இயக்கத்தார் நமக்குப் பல வழிகளில் இடையூறுகள் இயற்றி வந்ததையும், அந்தச் சமயங்களில் வெள்ளை ரஷ்யர்கள் நமக்கு ஆதரவு அளித்து வந்ததையும் நாம் மறக்காமல் அவர்களுக்குப் பிரதி உபகாரம் செய்யக் கடமைப்பட்டிருக்கிருேம். எனினும், நாம் இந்த விஷயத்தில் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய அம்சங்கள் இரண்டு உண்டு. ஜெனரல் டெனிக்கினுடைய நோக்கங்கள்தான் அவை. முதலாவது என்னவென்ருல், ரஷ்ய போல்ஷிவிக் இயக்கத்தை முறியடித்து நல்ல அரசாங்கத்தை நிலைநிறுத்த வேண்டும் என்பது. இந்த நோக்கத்தில் நம் எல்லோருடைய அனுதாபமும் அவருக்குக் கிடைக்கும். ஆனுல் அவருடைய இரண்டாவது நோக்கம்தான் நமக்குப் பிடிக்கவில்லை. நம் லட்சியத்துக்கே மாருனது அந்த நோக்கம். அதென்னவென்ருல் ரஷ்யர்களிடம் ஒற்றுமையை நிலைநிறுத்துவது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு இது உயர்ந்ததா என்று நான் சொல்வதற்கில்லை. என் கட்சியைச் சேராத மகானுன லார்ட் பீக்கன்பீல்டு நமக்கு ஏற்கனவே ஓர் எச்சரிக்கை கொடுத்திருக்கிருர். "பிரம்மாண்டமான, எவ்விதமான எதிர்ப்பையும் தகர்த்தெறியத் தகுந்த, நரம்புகளை விறைக்கச் செய்யும் பெரிய பனி மலையைப் போல, ரஷ்ய போல்ஷிவிக் இயக்கத்தின் வேகம் பாரசீகம், ஆப்கானிஸ்தானம், இந்தியா முதலிய இடங்களைத் தாக்கிக்கொண் டிருக்கிறது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் திணறிப் போய்விடும்படி துரிதமாய்

முன்னேறிப் போய்க்கொண்டிருக்கிறது" என்று அவர் சொல்லியிருக்கிறார். இதை நாம் கவனிக்கவேண்டும். ரஷ்யர்களுக்குள் ஒற்றுமை ஏற்பட்டால் நம் பாடு என்னவாகும்?' என்று சொன்னார். இந்த முக்கியமான பேச்சை போல்ஷிவிக் இயக்கத்தார் டெனிக்கின் படைகளுக்கு ஒலிபரப்புக் கருவியின் மூலம் தெரிவித்தனர். அவ்வளவுதான். 70 கோடிப் பவுன் பெருமானமுள்ள யுத்த தளவாடங்களும், டெனிக்கினுடைய ஜம்பமும் ஒழிந்தன.

லாயிட் ஜார்ஜின் இந்தப் பேச்சினல் விளைந்த கேட்டைப் பற்றி 1920-ஆம் வருஷம் ஜனவரி மாதத்தில் சண்டர்லாந்தில் நடந்த பொதுக் கூட்டமொன்றில் சர்ச்சில் பேசுகையில், 'உலக சரித்திரத்திலேயே கண்டிராத அட்டகாசங்களையெல்லாம் இப்போது ரஷ்யாவில் காண்கிறோம். மனைவி மக்களைக் கொல்வதும், சொத்துக்களைக் கொள்ளையடிப்பதும் ரஷ்யாவில் சர்வ சாதாரணமாய் நடந்துவருகின்றன. யாராவது ஒருவன் இந்த அநியாயங்களைக் கண்டித்தால் அவனைத் தேசத்துரோகி யென்று அழைக்கின்றனர். ரஷ்யாவின் பழைய நிலைமையைப் பற்றி நினைக்கும்போது என் மனது பதைபதைக்கிறது. மகா உன்னத ஸ்திதியிலிருந்துவந்த தேசம். வெளி நாடுகளின் உதவியை எதிர்பார்க்காமல் சுயேச்சையாய்த் தனக்கு வேண்டிய உணவுப் பொருள்களை உற்பத்தி செய்துகொண்டு கௌரதையுடனிருந்தது மல்லாமல், உலகெங்கும் உணவுப் பொருள்களை விற்பனைக்கு அனுப்பிக்கொண்டிருந்த தேசம். வனப்பிலும், அறிவிலும், செல்வாக்கிலும் உயர்ந்த தேசம். இப்போது என்ன கேவலமான நிலைமைக்கு வந்துவிட்டது பாருங்கள்!

வறுமைப் பேய் தலைவிரித் தாடுகிறது. மக்களெல்லோரும் உணவுக்குத் திண்டாடுகிருர்கள். ஏன்? உணவுப் பொருள் கள் அந்தத் தேசத்தில் இல்லாத காரணத்தினுலன்று. லெனின், டிராட்ஸ்கி முதலியவர்களின் துர்க்குணங்களி ஞலேயே இந்த விபரீதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மானிட சமூக வளர்ச்சிக்கும், பொருளாதார வளர்ச்சிக் கும் ஏதுவாயிருந்த சாதனங்களும், தொழிலாளிகளுக்கும் முதலாளிகளுக்கும் இருந்த பரஸ்பர ஒற்றுமையும், கிராமங் களுக்கும் நகரங்களுக்கும் இருந்த போக்குவரத்து சாதனங் களும் தகர்த்தெறியப்பட்டன. போல்ஷிவிக் லட்சியம் கைகூடும் பொருட்டு எங்கு பார்த்தாலும் கலகங்களை ஏற்படுத்தியிருக்கிருர்கள். ரஷ்ய மக்களுக்கு விமோ சனமே கிடைக்காதபடி தேசமெங்கும் ஒரே பாழாய்க் கிடக்கிறது,' என்று மிகுந்த கவலையுடன் கூறினர். மீண்டும் பேசுகையில், 'தொழிற் கட்சியினரும் அபேதவாதிகளும் ரஷ்ய இயக்கத்துக்கு ஆதரவு காட்டி வருவதால், தொழிற் கட்சியினர் மந்திரி சபை அமைக்க முடியாதபடி நாம் பார்த் துக்கொள்ள வேண்டும். தனிப்பட்ட ஒரு கட்சிக்கு, மந் திரி சபை அமைக்கத் தகுந்த பலமில்லாவிட்டால், இப் பொழுது இருந்துவரும் கூட்டு மந்திரி சபையே அதிகாரத் தில் இருந்து வருவது மிகவும் உசிதம்' என்று சொன்னர். சர்ச்சிலின் துடுக்கான இந்த மொழிகளைக் கண்டித்து, தொழிற்கட்சியினரும் அபேதவாதிகளும் அவருக்குச் சகிக்க முடியாத கஷ்டங்களைக் கொடுத்துவந்தனர். இவற் றிற்கெல்லாம் அவர் அஞ்சவில்லை.

போல்ஷிவிக் இயக்கத்தின் மிருகத் தன்மையைப் பற்றி சர்ச்சில் பல பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழு

திய வண்ண மிருந்தார். சில கட்டுரைகளில், 'போல்ஷிவிக் இயக்கம் மேற்கு ஐரோப்பாவில் பரவ ஆரம்பித்தால் ஜெர்மனி எதிர்த்து நிற்குமென்றும், போல்ஷிவிக் இயக்கம் உலகெங்கும் பரவுவதற்கு ஏதுவாகவும், ஜெர்மனியை நடு நிலைமை வகிக்கும்படி செய்வதற்காகவும் கிழக்கு பிரஷ்யாவை ரஷ்யா ஆக்ரமித்துக்கொண்டால், போலந்தும் பிரிட்டனும் ஜெர்மனியின் பக்கம் சேரும்' என்றும் எழுதியிருக்கிறார். போல்ஷிவிக் இயக்கத்துக்கு ஆதரவளித்த ஆங்கிலேயர்களில் பலர் ஒன்றுசேர்ந்து சர்ச்சிலைக் கிண்டல் செய்வதற்காக, போல்ஷிவிக் பட்டமொன்றை அவருக்கு அளித்தனர்.

சர்ச்சிலும் லார்ட் பெர்க்கன்ஹெட்டும் எவ்வளவோ ஆட்சேபித்தும் கேளாமல், லாயிட் ஜார்ஜும் மந்திரி சபையும் போல்ஷிவிக் இயக்கத்தாரை ரஷ்ய அரசாங்கத்தாரென்று கௌரவப்படுத்தி, அந்த ரஷ்ய அரசாங்கத்துடன் ஒரு வியாபார ஒப்பந்தமும் செய்து கையொப்பம் இட்டுவிட்டனர். இதன் விளைவாக பிரிட்டனிலும் போல்ஷிவிக் இயக்கம் தலைவிரித் தாடலாயிற்று. இதன் தொந்தரவுகள் நாளுக்கு நாள் அதிகரிக்கவே, 6-வருஷங்களுக்குப் பிறகு, இந்த இயக்கத்தைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்களை யெல்லாம் வேலையிலிருந்து நீக்கிவிட்டனர்.

பிரிட்டிஷ் படைகளைக் கலைத்து, சிப்பாய்களைப் பிரித்தனுப்புவதற்கு சர்ச்சில் மிகவும் கடினமாக வேலைபார்த்து வந்தார். ரஷ்யாவைப் பற்றிய விஷயம் அதைவிடக் கடினமானது. ஆனால் இவை யெல்லாவற்றையும் விடக் கடினமான வேலையில் இவருடைய கவனத்தை முற்றிலும் செலுத்த வேண்டியதாயிற்று. வெர்ஸேல்ஸ் ஒப்பந்தப்படி

இராக் பிரதேசத்தை ஆளும் பொறுப்பு பிரிட்டனுக்கு ஏற்பட்டுவிட்டது. ஏராளமான பிரிட்டிஷ் சைனியங்கள் அந்தப் பிரதேசத்தில் வைக்கப்பட்டன. நிர்வாகச் செலவு மட்டும் வருஷத்திற்கு 4 கோடிப் பவுன் வரையில் ஏற்படும். பொது ஜனங்களிடத்தில் அமைதியே கிடையாது. இந்தச் சங்கடத்தை நிவர்த்திப்பது சர்ச்சிலைப் பொறுத்தது. என்ன செய்வார், பாவம்? ராணுவப் படைகளைக் குறைக்கவே கூடாது. செலவும் சுருங்கவேண்டும். அவர் லாயிட் ஜார்ஜிடம் போனார். 'மத்திய கிழக்கு இலாக்கா' என்று ஒரு புது இலாக்காவைச் சிருஷ்டிக்க வேண்டுமென்று கேட்டார். இது என்ன, நினைத்ததும் செய்துவிடக்கூடிய காரியமா? காலதாமதம் ஏற்பட்டது. யுத்தக் காரியாலயத்துக்கே எப்போதும் இந்தச் சங்கடம்தான். சர்ச்சில் அதுவரையில் காத்துக்கொண்டிருப்பவரா? 1920-ஆம் வருஷ முடிவில் கலோனியல் ஆபீசுக்குள் போனார். 'மத்திய கிழக்கு இலாக்கா'வை ஸ்தாபித்தார். இந்த இலாக்காவின் ஆதரவில் 1921-ஆம் வருஷ ஆரம்பத்தில் கெய்ரோவில், இராக் விஷயமாகப் பேசுவதற்கென்று, சிவில் அதிகாரிகளும் மிலிடெரி அதிகாரிகளும் கூடினார்கள். இந்தக் கூட்டத்தை நடத்திவைக்கும் பொருட்டு சர்ச்சில் கெய்ரோவுக்கு வந்து சேர்ந்தார். கலனல் லாரன்ஸ் என்பவரின் அரிய உதவிகளைக் கொண்டு பிரமாதமான ஓர் திட்டத்தை வகுத்தார். சர்க்காரையும் ஜனங்களையும் பாதிக்காதபடி மிகவும் சாமர்த்தியமாக நிர்வாகத் திட்டத்தை ஏற்படுத்தினார். இவருடைய சாமார்த்தியத்தைப் பிரமாதமாக வேறொரு துறையிலும் காட்டியிருக்கிறார். அதாவது, இராக்கிலிருந்த பிரிட்டிஷ் துருப்புகளை நீக்கிவிட்டு, அவற்றிற்குப் பதிலாக அவர்

விமானப் படைகளை அமர்த்தியதின் பலனாக நிர்வாகச் செலவு 40 கோடி பவுனிலிருந்து 5 கோடி பவுனுக்கு இறங்கிவிட்டது. இந்த ஏற்பாடானது அநேக விதத்தில் அனுகூலங் கொடுத்ததுமன்றி இராக்கின் நிர்வாகம் நாளுக்கு நாள் உன்னத நிலைமைக்கு வந்ததற்குக் காரணமாயும் இருந்தது. சர்ச்சில் வகுத்த இந்தத் திட்டத்தை இன்றைத் தேதிவரை யாரும் மாற்றியமைக்கத் துணியவில்லையாம். அப்படி மாற்றி அமைப்பதற்கு அவசியமும் ஏற்படவில்லையாம்.

இவர் கெய்ரோவிலிருந்த சமயம், பிரிட்டிஷ் மந்திரி சபையில் சில மாறுதல்கள் ஏற்பட்டன. போனர்லா என்பவர் மந்திரிப் பதவியிலிருந்து விலகிக்கொண்டதால் மந்திரி சபை திருத்தியமைக்கப்பட்டது. சர்ச்சில் குடியேற்றநாட்டு மந்திரியானார். ஆப்பிரிக்காவிலிருந்த பிரிட்டிஷ் நாடுகளில் பற்பல சீர்திருத்தங்கள் செய்துவிட்டு, அவர் கவனத்தை அயர்லாந்து விஷயத்தில் செலுத்தலானார். அயர்லாந்தின் ஸின்பீன் இயக்கத்தினருடன் சமரசப் பேச்சு நடத்தியதில் பெரும் பங்கு இவரைச் சேர்ந்தது. அயர்லாந்துக்குக் குடியரசு வழங்கும் விஷயத்தில் நடந்த முன்னேற்பாடுகள் எல்லாம் அவருடைய வீட்டிலேயே நடந்தன. அவர் வீட்டிற்கே ஸின்பீன் இயக்கத்தினர் வந்து உண்டுபேசிக்கொண்டிருந்தார்கள். ஒரு சமயம், போஜனம் முடிந்த பிறகு, ஸின்பீன் இயக்கத்தின் தலைவரான மைக்கேல் காலின்ஸ் என்பவர், ‘என்னை உயிருடனாவது சவமாகவாவது கொண்டுவருபவருக்கு 10,000 பவுன் இனம் என்று பிரிட்டிஷ் சர்க்கார் விளம்பரப் படுத்தியிருந்ததே!’ என்று புகார் கூறினார். உடனே சர்ச்சில் எழுந்து சென்று, சட்டம் போடப்பட்ட

படமொன்றை எடுத்துவந்தார். அதில் பின்வருமாறு அச்சிடப்பட்டிருந்தது: 'போயர் சர்க்காரின் அறிக்கை: உயிருடனாவது சவமாகவாவது................வின்ஸ்டன் சர்ச்சிலைக் கொண்டுவந்து ஒப்புவிப்பவருக்கு 25 பவுன் இனாம்'. இதை மைக்கேல் காலின்ஸுக்குக் காட்டி, 'தொகையைப் பார்த்தீர்களா? உங்கள் தலைக்கு 10,000 பவுன்! என் தலைக்கு 25 பவுன்தான். யாருடைய தலைக்கு மதிப்பு அதிகம்?' என்று சொல்லி எல்லோரையும் நகைக்கவைத்துச் சமாதானம் செய்தார். அயர்லாந்துக்குக் குடியரசு வழங்கிய ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டவர்களில் சர்ச்சிலும் ஒருவர். இந்த ஒப்பந்தத்துக்கு இரண்டு மாதங்களுக்குப் பிறகு இரண்டு ஐரிஷ்காரர்களால் ஸர் ஹென்ரி வில்ஸன் என்ற தளபதி லண்டன் நகரத்தில் கொல்லப்பட்டார். கொலையாளிகளைக் கண்டுபிடித்து, தக்க தண்டனை விதித்து, இனிமேல் அவ்வாறு நடக்காமலிருக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டிய பொறுப்பு அயர்லாந்தின் குடியரசைச் சார்ந்ததென்றும், இந்தச் சம்பவமானது ஒப்பந்தத் திட்டங்களுக்கு நேர் விரோதமானதென்றும் சர்ச்சில் சட்டசபையில் கர்ஜித்தார்.

# 14. ஓய்வும் சாந்தியும்

1922-ஆம் வருஷம் அக்டோபர் மாதத்தில் கன்ஸர்வேடிவ் கட்சியின் முக்கியக் கூட்டமொன்று சர்ச்சிலின் வீட்டில் கூடிற்று. லார்ட் கர்ஸான், லார்ட் பெர்க்கென்ஹெட், ஆஸ்டின் சேம்பர்லின் முதலிய முக்கிய பிரமுகர்கள் எல்லோரும் லாயிட் ஜார்ஜின் லிபரல் கட்சியுடன் கூட்டு மந்திரி சபை அமைக்கும் விஷயத்தில் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தனர். சில உபதேர்தல்கள் நடைபெறவிருந்த தொகுதிகளுக்குப் போய், பொதுக் கூட்டங்களில் பேசி, ஓட்டர்களின் ஆதரவைக் கூட்டு மந்திரி சபைக்குச் சாதகமாகப் பெறவேண்டுமென்று ஏற்பாடு செய்திருந்தார் சர்ச்சில். ஆனல் அது கைகூடவில்லை. சர்ச்சில் வியாதி வாய்ப்பட்டார். அதனல் நியூபோர்ட் தொகுதியின் உபதேர்தலில், கூட்டு மந்திரி சபை அமைப்பிற்குப் பாதகமாயிருந்த ஒரு கன்ஸர்வேடிவ் கட்சிக்காரர் தேர்ந்தெடுக்கப்பட்டார். லார்ட் கர்ஸானும் தம் வாக்கை மீறி லாயிட் ஜார்ஜுக்குப் பாதகமாய் உழைக்கலானர். பொதுத் தேர்தல் நடந்தது. கன்ஸர்வேடிவ் கட்சியினர் பெரும்பான்மையோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். லாயிட் ஜார்ஜும் சர்ச்சிலும் வீழ்ந்தனர். போனர்லாவும், ஸ்டான்லி பால்டுவினும் கன்ஸர்வேடிவ் மந்திரி சபையை அமைத்தார்கள்.

சர்ச்சிலுக்கு ஆபரேஷன் நடந்தது. ஆஸ்பத்திரியில் சிகிச்சையில் இருந்ததால் தேர்தல் பிரசாரம் செய்ய

முடியவில்லை. எந்தெந்த நூதன முறைகளையோ கையாண்டு பார்த்தார். தேர்தல் தினத்தன்று அவரை ஓர் ஆசனத்தில் அமர்த்தி, டவுன் ஹாலுக்குத் தூக்கிக்கொண்டுபோய் உட்கார வைத்திருந்தனர் அவருடைய சகாக்கள். ஒன்றும் பலிக்கவில்லை; படுதோல்வி யடைந்தார். 1900-ஆம் வருஷ முதல் தொடர்ச்சியாகப் பார்லிமெண்டு அங்கத்தினராயிருந்தவர், முதல் தடவையாக இப்பொழுதுதான் தோல்வி யடைந்தார்.

உடலைச் சொஸ்தப்படுத்திக்கொள்ளவேண்டி பிரான்ஸ் தேசத்தின் தென்புறத்திலுள்ள கானிஸ் என்னுமிடத்திற்குப் போனார். அங்கிருந்து பத்திரிகைகளுக்குப் பற்பல கட்டுரைகள் எழுதி ஏராளமான பொருள் சேகரித்தார். ஒரு சமயம் மிகவும் வருத்தத்துடன் ஒரு நண்பரிடம் பேசிக்கொண் டிருக்கும்போது, 'என்ன செய்வது? முன்னால் ஒரு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு தூங்குவதே என் தொழிலாகிவிட்டது. அதிகார மில்லாவிட்டால் இந்த உலகத்தில் உன்னால் ஒன்றுமே செய்ய முடியாது,' என்று சொன்னார். அவருடைய கம்பீரமான மலர்ந்த முகமும் மங்கலாயிற்று. கூனும் விழுந்தது. முகத்தில் சுருக்கம் கண்டுவிட்டது. வாழ்க்கையில் அவருக்கு இன்பமே கிடையாது.

முன்னொரு சமயம், 'லிபரல் கட்சித் தேர்தலில் தோற்றுவிட்டால், சட்டசபை வாழ்க்கையை விட்டொழித்து என் மூதாதையாகிய முதலாவது மார்ல்பரோ கோமானின் வாழ்க்கைச் சரித்திரத்தை எழுதத் தொடங்குவேன்' என்று சொல்லியிருக்கிறார். அதை இப்பொழுது நினைத்துக்கொண்டார். ஏதாவது எழுதித்

தீரவேண்டு மென்று முடிவுசெய்தார். தம் மூதாதையின் சரிதத்தைவிட, மகா யுத்தத்தைப்பற்றி எழுதுவதே உசித மென்று தீர்மானித்தார். மகா யுத்தத்தின் காரணங்கள், அதன் நிகழ்ச்சிகள், அவற்றில் தாம் எடுத்துக்கொண்ட பங்கு முதலியவற்றை விவரித்து எழுத ஆவல் கொண்டு, அக் கைங்கரியத்தை ஆரம்பித்தார். முற்பகல் முழுவதும் எழுதுவது, பிற்பகலில் சித்திரம் வரைவது, மாலையில் ஏதா வது விளையாடுவது என்று ஏற்படுத்திக்கொண்டார்.

மகா யுத்தத்தின் முதல் பாகம் 1923-ஆம் வருஷம் ஏப் ரல் மாதம் வெளிவந்தது. இரண்டாம் பாகம் அக்டோபரில் வெளியாயிற்று. இதனால் இவருக்கு 20,000 பவுனுக்குக் குறையாமல் கிடைத்தது. மூன்றும் பாகமும், நான்காம் பாகமும் நான்கு வருஷங்களுக்குப் பிறகு வெளிவந்தன. 1906-ஆம் வருஷம் அவர் தம் தந்தையின் சரிதத்தை வெளி யிட்ட பொழுது அவருடைய எழுத்து வல்லமையின் கீர்த்தி எங்கும் பரவலாயிற்று. மகா யுத்தச் சரிதையின் முதல் இரண்டு பாகங்களினால், சரித்திரம் எழுதவல்ல எழுத்தாளர் களில் உன்னத ஸ்தானம் பெற்றார்.

1923-ஆம் வருஷ ஆரம்பத்தில் தம் தாய்நாடு திரும்பி வந்து, ஒரு புது வீடு வாங்கினார். அதில் தம் நாட்களைக் கழிக்கலானார். வெளியில் எங்கும் விளையாடப் போவ தில்லை. எந்நேரமும், தம் வீட்டுக்குப் பின்புறமிருந்த பெரிய தோட்டத்திலும் பொட்டலிலும்தான் வேலை.

தோட்டத்தில் கொத்திக்கொண்டிருப்பதும் புதிதாக ஏரிகளைத் தோண்டுவதும், நீர்வீழ்ச்சிகளை உற்பத்தி செய் வதும்தான் இவருடைய பிரதான வேலைகள். யாராவது இவரைப் பார்ப்பதற்கு வந்துவிட்டால், தொலைந்தது. வந்த

வரும் இவருடன் வேலை செய்யவேண்டியதுதான். கைகளிலும் உடுப்புக்களிலும் சேற்றையும் மண்ணையும் பூசிக்கொண்டு போகவேண்டி ஏற்படும். முழங்கால் ஆழத்திலாவது நின்றுகொண்டு தண்ணீரை அங்குமிங்கும் பாய்ச்சி, அணைகளைக் கட்டுவதிலும், டார்டனெல்ஸைப் போன்ற இடங்களை உண்டாக்குவதிலும் இவருக்கு விசேஷ திருப்தி. வேலை செய்துவிட்டுத் தம் வீட்டுக்குள் நுழைந்தால், இவர் மனைவி அனுமதிக்கும் வரையில் வெளியில் காத்துக்கொண்டிருப்பார். சேற்றுடனும் மண்ணுடனும் வீட்டில் நுழைந்தால், கண்ணாடி போன்ற தளங்களும், மேஜை, நாற்காலி, சோபா முதலிய சாமான்களும் கெட்டுப்போய்விடும் அல்லவா? அவற்றையெல்லாம் பத்திரிகைக் காகிதங்களைப் போட்டு மூடி பந்தோபஸ்து செய்யும் வரையில் இவர் வெளியில் காத்துக்கொண்டிருப்பார்.

தோட்டத்தில் வேலை செய்துகொண்டிருக்கும் போது இவரைக் கவனித்தால், பலங் குன்றித் தளர்ந்து போய் விட்டாரென்று இவரைக் குறைகூறுபவர்களை மடையர்களென்றே நினைக்க ஏற்படும். இளம் வயதிலேயே இவர் தலையில் வழுக்கை ஏற்பட்டதாலும், கூன் விழுந்து விட்டதாலும் இவர் இன்னும் கொஞ்ச காலந்தான் ஜீவித்திருப்பார் என்று பலர் கருதினர். அது முற்றிலும் தவறு. இவருடைய சரீரக் கட்டும், பலமும், ஊக்கமும், தைரியமும் சிறிதும் குன்றவில்லை. கிளாட்ஸ்டனும், ஜெர்மன் கெய்ஸரும் மரம் வெட்டுவதில் எவ்வளவு சுறுசுறுப்புடனும் திடசாலிகளுமாயிருந்தனரோ, அது போலவே இவரும் மரங்களை வெட்டுவதில் வெகு ஊக்கமும் திடமும் உள்ளவர். மற்ற அறிஞர்களைப் போல் இவரும் இரவில் வெகுநேரம் வரையில் சுறு

சுறுப்பாயிருந்துவிட்டு, காலையில் ஆறு அல்லது ஏழு மணிக்கு எழுந்து, படுக்கையில் படுத்தபடியே தினசரிப் பத்திரிகைகளைப் படிப்பதும், உத்தியோக தஸ்தாவேஜுகளைக் கவனிப்பதும், தம் காரியதரிசிக்கு ஏதாவது வேலை கொடுப்பதுமாகக் காலங் கழிப்பார். இவர் எப்பொழுதும் சுருட்டுப் பிடித்துக்கொண்டுதான் இருப்பாராம். பெரிய சுருட்டொன்று இவர் வாயில் இல்லாவிட்டால் இவருக்குப் பைத்தியம் பிடித்தது போலிருக்குமாம்.

தந்தைக்கு இயல்பான வாஞ்சையிலும், கணவனுக்கேற்ற அன்பிலும், சகோதரப் பற்றிலும், மைந்தனின் கடமையிலும் இவரிடம் ஒரு குறைபாடும் கண்டுபிடிக்க முடியாது. எவ்வளவு கடினமான வேலையில் ஈடுபட்டிருந்தாலும், எவ்வளவு பெரிய ஆலோசனையில் ஆழ்ந்திருந்தாலும், வீட்டில் எங்கேயாவது குழந்தைகள் ஒரே கலாட்டா செய்வதைக் கேட்டால், 'குழந்தைகள், குழந்தைகள்! கவனியுங்கள்!' என்று கத்துவாராம். தோட்டத்துக்குப் போய்க் குழந்தைகளுடன் விளையாடிக்கொண்டும் இருப்பாராம்.

## 15. மீண்டும் அரசியல் போர்

என்னதான் சம்பவித்தாலும், அரசியல் பைத்தியம் விட்டுவிடுமா? 1923-ஆம் வருஷம் மே மாதம் 4-ஆம் தேதியன்று லண்டனில் ஒரு கூட்டத்தில் பேசும் போது, 'கூட்டு மந்திரி சபை பதவி யிழந்ததிலிருந்து அபேதவாதக் கட்சியின் பலம் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டு வருவதாகவும், அது கூடிய சீக்கிரம் அதிகாரம் வகித்து, நாட்டுக்கே பெரிய கேட்டை விளைவிக்குமென்பதில் சந்தேகமில்லை யென்றும் சொன்னார். மேலும் பேசும்போது, லிபரல் கட்சியினரும் கன்ஸர்வேடிவ் கட்சியினரும், மிதவாதக் கொள்கை படைத்த கூட்டு மந்திரி சபையைச் சீர்குலையச் செய்து, தத்தமக்குள்ளே சிறு சிறு பிளவுகளை ஏற்படுத்திக்கொண்டதன் காரணமாய், அபேதவாதிகள் தங்களுக்குள்ளே இருந்துவந்த வித்தியாசங்களை யெல்லாம் மறந்து எதிர்க் கட்சிகளை முறியடிக்கும் ஒரே நோக்கத்தைக் கைக்கொண் டிருக்கின்றனர். லிபரல் கன்ஸர்வேடிவ் கட்சிகளுக்குள் வேறுபாடும் முரண்பாடும் அதிகமாகக் காணப்படவில்லை. எனினும் ஆஸ்குவித்தைப் போன்ற தீவிர லிபரல் அங்கத்தினர், "கன்ஸர்வேடிவ் கட்சியுடன் ஒத்துழைப்பது மகா வெட்கக்கேடானது" என்று சொல்லியிருக்கிறார். இவர் சொல்லை நான் நம்பவும் இல்லை. இவரைப் பின்பற்றவும் நான் தயாராயும் இல்லை. இவர் கூறுவது இவருக்கே விளங்குகிறதோ இல்லையோ என்று நான் எண்ண வேண்டியிருக்கிறது. கன்ஸர்

வேடிவ் கட்சியினரின் ஆதரவு பெற்றே இவர் சபைக்கு வந்திருக்கிறு ரென்று மறந்துவிட்டார் போலும். இவருக்கு ஆதரவளித்தவர்கள் இவரை விரட்டியடிக்க வேண்டு மென்று விரும்புகிறேன். எதிர்க் கட்சியாகிய அபேதவாதக் கட்சியை எதிர்ப்பதை விட்டுவிட்டு லிபரல் கட்சியினர் லாயிட் ஜார்ஜை வெளியேற்றப் பார்க்கின்றனர்; கன்ஸர் வேடிவ் கட்சியினர் லார்ட் பெர்க்கன்ஹெட்டை விரட்டப் பார்க்கின்றனர்,' என்று சொல்லி வருந்தினர். அரசியல் வாதிகளும், பத்திரிகைகளும் சர்ச்சிலின் பேச்சைக் கண்டித் தனர். பொருமைக்காரரென்றும், கலகக்காரரென்றும் கூறினர். இவருடைய ஊழல்களை யெல்லாம் காட்டிப் பிரசாரம் செய்யவும் ஆரம்பித்தனர். இவர் மேற்சொன்ன வாறு பேசி முடித்து ஒரு வருஷம் கழிவதற்குள், அபேத வாதக் கட்சியினரும் தொழிற் கட்சியினரும் அசைக்க முடியாத பலம் பெற்று, ராம்சே மாக்டொனல்டின் கீழ் மந்திரி சபையையும் அமைத்தனர்.

பொதுத் தேர்தல் நடந்தது. வெஸ்ட் லீஸ்டர் தொகு திக்கு சர்ச்சில் போட்டியிட்டார். அவரை எதிர்த்தவர் சாமானிய ஆசாமியல்லர். பெதிக் லாரன்ஸ் என்னும் இவர் அபேதவாதக் கட்சியினரின் நம்பிக்கையையும் ஆதரவையும் பெற்றவர். இவரை எதிர்த்து நிற்பவர் யாராயினும் அவரை மானம் வாங்காது விடமாட்டார்கள். இந்தத் தொகுதி யில் வந்து சர்ச்சில் அகப்பட்டுக்கொண்டார். அபேத வாதிகள் இவரை எந்தெந்த முறையிலெல்லாம் அவமானப் படுத்தலாமோ அவற்றை யெல்லாம் பிரயோகித்துப் பார்த் தனர். சர்ச்சிலின் குணத்தைக் கேலி செய்தும், அவ ருடைய கூனை மிகைப்படுத்தியும், சுருட்டை பிரம்மாண்ட

மாக வாயில் வைத்துக்கொண்டிருப்பது போலவும், சிறிய தலையில் மகா பெரியதொரு தொப்பியை அணிந்துகொண்டிருப்பது போலவும், உலக்கை போன்ற தடியொன்றைக் கையில் வைத்து, கூனுடன் தள்ளாடி நடப்பது போலவும் பலவிதக் கார்ட்டூன் படங்களைத் தயாரித்து ஊரெங்கும் வழங்கினார்கள்.

ஒரு சமயம் அந்தத் தொகுதியில் அவர் பேச எழுந்திருக்கையில், 'ஐயாவைக் கண்டுபிடிப்பது கஷ்டமாயிருக்கிறது. மேடையும் இல்லையே! தயவுசெய்து நாற்காலி மேலேயே ஏறிக்கொண்டு பேசுங்கள்!' என்று ஒருவர் கிண்டலாகச் சொன்னார். சர்ச்சில் இதைப் பொருட்படுத்தாது, 'சட்டசபை ஆசனத்துக்கு என்னைத் தெரிந்தெடுக்க உங்களுக்குச் சித்தமிருக்கும் வரையில் நானும் நாற்காலியில் ஏறி நின்று பேசுவதற்குத் தயார்' என்று சொல்லி, உடனே நாற்காலியின் மேல் ஏறி நின்று பேசினார். இவர் பேச ஆரம்பித்ததும் அபேதவாதக் கட்சியினர் தங்கள் வேலைகளைத் தொடங்கிவிட்டனர். இவர் பேசுவதை யாரும் கேட்க முடியாதபடி கூச்சல் போட்டும் கலாட்டாக்கள் செய்தும் கலைத்துவிட்டனர். முடிவில் சர்ச்சில், 'குரைத்துக்கொண்டே விரட்டிவரும் நாய்களில் ஒன்றின்மேல்தான் கல்லை வீசி எறியலாம்; எல்லாவற்றையும் விரட்டி யடிப்பது அசாத்தியம்' என்று சொல்லிவிட்டு, ஒரு கட்டிடத்துக்குப் போய் மேல்மாடியிலிருந்து தம் சொற்பொழிவை ஆரம்பித்தார். காலிகள் சும்மா இருந்துவிடுவார்களா? பல ஜன்னல்களுக்கு நேரில் ஏணிகளை வைத்து ஏறிக்கொண்டு கலவரம் செய்தனர். கைகளை ஓங்கினர். வசைமொழி பொழிந்தனர்.

சர்ச்சில் என்ன செய்வார், பாவம்! பேசாமல் உட்கார்ந்து விட்டார். ஒரு சமயம் அவர், லண்டனுக்கு மிகவும் அவசரமாகத் தம் மோட்டார் வண்டியில் ஏறிப் போய் ஓர் இடத்தில் வண்டியை நிறுத்தியதும், காலிக் கூட்டத்தினர் அவருடைய வண்டியைச் சூழ்ந்துகொண்டு, வண்டியெல்லாம் எச்சில் மாரி பொழிந்தனர். ஒருவன் வண்டியின் ஜன்னலுக்குள் கையைவிட்டு அவரைப் பிடிக்கப் பார்த்தான். உடனே போலீஸாரால் கைதியாக்கப்பட்டான். விசாரணையின் போது, 'எனக்கென்னமோ சர்ச்சிலைக் கண்டாலே பிடிக்கவில்லை' என்று கூறினான்.

மறுபடியும் ஒரு சமயம் லீஸ்டர் தொகுதியில் இவர் பேசும்போது, தொழிற்கட்சியினர் பல கேள்விகளைக் கேட்டனர். 'தொழிற்கட்சிக்கும் தொழிலாளர் முன்னேற்றத்துக்கும் இதுவரையில் நீங்கள் என்ன சாதித்து விட்டீர்கள்?' என்று ஒருவர் கேட்டபோது, 'வர்த்தக போர்டு மசோதாவுக்குச் சட்டசபையின் ஆதரவைப் பெறுவதற்கு என் ஒருவனுடைய முயற்சியே பிரமாதமானது; வேலையில்லாதவர்களின் இன்ஷியூரன்ஸ் சட்டத்துக்கு என் முயற்சி கொஞ்சமல்ல. நிலக்கரிச் சுரங்கங்கள் சட்டத்துக்குப் பெரும் பாடு பட்டிருக்கிறேன். கடைகளின் வேலைநேர மசோதாவுக்குப் பெருங் கஷ்டங்கள் எடுத்துக்கொண்டிருக்கிறேன். சிறைச்சாலைகளின் சீர்திருத்தங்களுக்கும், அயர்லாந்துடன் ராஜி ஒப்பந்தத்துக்கும் நிகரில்லாத முறையில் உழைத்திருக்கிறேன். இதுவரையில் நடந்துவந்த தேர்தல் பிரசாரங்களிலெல்லாம் அயர்லாந்தைப் பற்றிக் கேள்விகள் எழாமல் இருந்ததில்லை. இப்பொழுது அயர்லாந்தைப் பற்றி ஏதாவது குறைகூறும் பேச்சு உண்டா? இவற்றிற்

கெல்லாம் நான் எடுத்துக்கொண்ட முயற்சிகள் உலகறிந்த விஷயங்க ளாயிற்றே? அறிவாளிகளாகிய நீங்கள் இவற்றை மறந்திருக்கலாமா?' என்று பதில் சொன்னார். அதன்பின் 'டார்டனெல்ஸ் தோல்விக்கு நீர்தானே காரணம்? அதற் கென்ன சொல்லப் போகிறீர்?' என்று கூட்டத்தில் ஒருவர் கேட்டார். 'டார்டனெல்ஸ் சம்பவத்தைப் பற்றிய உண்மைகளை நீங்கள் அறிந்துகொண்டு என்னைப் போற்றும் காலமும் சமீபித்துக்கொண்டிருக்கிறது. அதைப் பற்றி ஏற்கெனவே, பல வாயில்களாக என் சமாதானங்களைத் தெரிவித்திருக்கிறேன். சந்தர்ப்பம் வாய்க்குமானால், மறு படியும் டார்டனெல்ஸ் சம்பவத்தை நடத்திக் காட்டவும் சித்தமா யிருக்கிறேன். அதில் எனக்கிருந்த நம்பிக்கை இன்றைக்கும் உண்டு' என்று பதில் சொன்னார். இந்தச் சமயத்தில் 'பன்ச்' பத்திரிகாலயத்தைச் சேர்ந்த ஹெர்பெர்ட் என்பவர் அவருக்குத் துணையாக வந்து சேர்ந்தார். இவர், டார்டனெல்ஸ் சம்பவத்தின் போது, பிரிட்டிஷ் கடற்படை யின் ஒரு பகுதியில் சேர்ந்தவர். துருக்கியிலுள்ள காலிப் போலி என்ற இடத்தில் போர் நடத்தியவர். சர்ச்சில் சொன்ன பதிலை இவர் ஆமோதித்துப் பொதுஜனங்களின் ஆதரவைப் பெறுவதற்கு மிக்க முயற்சிகள் எடுத்துக் கொண்டார்.

என்னதான் பிரசாரம் செய்த போதிலும் அந்தத் தொகுதியின் பரிபூரண ஆதரவைப் பெற்ற பெதிக் லாரன் ஸைத் தோற்கடிப்பது கஷ்டந்தான். தேர்தல் நடந்தது. ஓட் டுக்கள் எண்ணப்பட்டன. பெதிக் லாரன்ஸுக்கு 13,634 ஓட்டுக்களும் சர்ச்சிலுக்கு 9,236 ஓட்டுக்களும் கிடைத்தன. சர்ச்சில் தோற்றார்.

சர்ச்சிலின் அரசியல் வாழ்க்கை இத்துடன் நின்று விடுமோ என்று அவருடைய நண்பர்கள் எல்லோரும் பயந்தனர். ஆனால் அவரா அயர்வார்? இத்தகைய விபரீத விளைவுகளுக் கெல்லாம் ஆஸ்குவித்தான் முக்கிய காரண மென்றும், கூட்டு மந்திரி சபையில் உள்நாட்டு விஷயங்களி லும் வெளிநாட்டு விஷயங்களிலும் பரஸ்பர ஒற்றுமை நிலவி யிருந்ததைப் புறக்கணித்து, அபேதவாத முன்னேற்றத்துக் குக் காரணமானவரும் அவர்தானென்றும் வருத்தத்துடன் பற்பல விடங்களில் எடுத்துக் கூறினர். எந்தக் கட்சியை நினைத்தாலும் அவருக்கு வெறுப்பே உண்டாயிற்று. ஏதாவது ஒரு முக்கிய இயக்கத்தைக் குறித்துச் சுயேச்சை யாகவே இனிமேல் தேர்தல் போட்டிகளில் கலந்துகொள்ள வேண்டுமென்று தீர்மானித்துவிட்டார்.

1924-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் வெஸ்ட்மின்ஸ்டர் தொகுதியின் ஸ்தானங்களில் ஒன்று காலியாயிற்று. இந்தத் தொகுதியில் போட்டியிட்டு வெற்றிபெறுவதென்றால் அது முடியாத காரியம். தொன்றுதொட்டு வரும் ஒரு வகுப் பினருக்கு மட்டும்தான் அங்கே செல்வாக்கு உண்டு, எதிர்ப்பவர்கள் படுதோல்வி யடைவது நிச்சயமாதலால், எதிர்ப்பில்லாமலேயே இந்தத் தொகுதியின் அபேட்சகர் தெரிந்தெடுக்கப்படுவார். பார்லிமெண்டு சபைகளும், வெஸ்ட்மின்ஸ்டர் அபே யென்ற உலகப் பிரசித்திபெற்ற கோவிலும், சர்க்காரின் முக்கிய காரியாலயங்கள் பூராவும் இந்தத் தொகுதியில்தான் இருக்கின்றன. ஓட்டர்கள் எல் லோரும் பெரிய பெரிய பிரமுகர்களும் அரசியல்வாதிகளும் தான். அரசியல் விஷயங்களில் ஒப்பற்ற திறமை வாய்ந்த வர்களுக்குத்தான் இங்கு போட்டிக்கு இடமுண்டு. ஜன

ரல் நிக்கல்ஸன் என்ற சட்டசபை அங்கத்தினர் காலமான தால் இந்தத் தொகுதிக்குப் போட்டி நடக்கலாயிற்று. காலஞ்சென்ற அங்கத்தினரின் குமாரரான காப்டன் ஒ. நிக்கல்ஸன் என்பவரை, கன்ஸர்வேடிவ் கட்சியினர் தங்கள் சங்கத்தின் அபேட்சகராக நிறுத்த யோசித்தார் கள். ஆனல் அந்தத் தொகுதியின் ஓட்டர்கள் அதற்கு அனுசரணையாக இல்லை. தொழிற்கட்சியின் பலம் அதி கரித்துவரும் அந்தச் சமயத்தில், அபேதவாதக் கிளர்ச்சியை எதிர்த்து வெற்றிபெறும் ஆற்றலும், லிபரல் கட்சியினரை யும் கன்ஸர்வேடிவ் கட்சியினரையும் ஒற்றுமைப்படுத்தும் திறமையும், சொல் வல்லமையும், அனுபவமுமுள்ள வீரர் ஒருவரையே, வழக்கத்துக்கு மாருக இந்த முறை தெரிந் தெடுக்கவேண்டு மென்று அபிப்பிராயப்பட்டனர். ஆகவே, கன்ஸர்வேடிவ் சங்கத்தினர், சர்ச்சிலை அழைத்து, ‘காப் டன் நிக்கல்ஸனையாவது உங்களையாவது கன்ஸர்வேடிவ் கட்சியின் சார்பாக நிறுத்துவதென்று நாங்கள் யோசித் திருக்கிருேம். உங்கள் இருவர் பெயர்களும் நம் சங்கத் தின் ஓட்டுக்கு விடப்படும். அந்தப் போட்டியில் தங்கள் பெயர் நிராகரிக்கப்பட்டால், சங்கத்தின் தீர்மானத்தை மதித்து, தேர்தல் போட்டியில் யாதொரு பங்கும் எடுத்துக் கொள்ளாமலிருக்கக் கட்டுப்படுவீர்களா?’ என்று கேட்ட னர். இந்த நிபந்தனையை அவர் ஒப்புக்கொள்ளவில்லை. ஆகையால் கன்ஸர்வேடிவ் கட்சியின் சார்பாக காப்டன் நிக்கல்ஸன் ஓர் அபேட்சகராக நின்ருர். அந்தத் தொகுதி யில் சர்ச்சிலுக்கும் பல நண்பர்கள் இருந்தனர். அபேத வாதத்தை எதிர்க்கும் சுயேச்சைவாதியாக சர்ச்சிலை நிறுத்திவைத்தனர். அபேதவாதக் கட்சியின் சார்பாக

பென்னர் பிராக்வே நிறுத்தப்பட்டார். தீவிரவாதிகள் ஸ்காட் டக்கர்ஸ் என்பவரை நிறுத்தினர். சர்ச்சிலே எதிர்த்து நின்ற மூன்று அபேட்சகர்களும் அந்தத் தொகு தியில் மிகுந்த செல்வாக்குடையவர்கள். பிரபல சங்கங்க ளால் ஆதரிக்கப்படுபவர்கள். சர்ச்சிலுக்கோ சொந்தத் தொகுதியில் செல்வாக்கு மில்லே, எந்தச் சங்கத்தின் ஆதரவு மில்லே. தம் சொந்த சாமர்த்தியத்தைக் கொண்டும் சில நண்பர்களின் உதவியைக் கொண்டும் போட்டியிட வேண் டும். தேர்தல் நடப்பதற்கு இன் னும் 8 தினங்கள் தான் இருந் தன. இதற்குள் என்ன செய்துவிட முடியும்? அவர் நண் பர்களில் சிலர் ஒன்றுகூடினர். லிவர்பூல் தொகுதியின் கன்ஸர்வேடிவ் அங்கத்தினரான ஜேம்ஸ் ரான்கின் என்ப வருக்கு இந்தத் தொகுதியில் ஒரு மாளிகை யுண்டு. அதைத் தேர்தல் பிரசாரக் காரியாலயமாக அவர் சர்ச்சிலிடம் ஒப்பு வித்தார். லார்ட் உட்ஹவ்ஸ், ஸர் ஆர்ச்சிபால்டு ஸிங்க்ளேர், கமாண்டர் லாக்கர் லாம்ப்சன் முதலியவர்கள் சேர்ந்த ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. பற்பல விண்ணப்பங் கள் விடுக்கப்பட்டன. எதிர்பாராத விதமாய், பெரிய பெரிய பிரமுகர்கள் எல்லோரும் சர்ச்சிலுக்கு ஒத்தாசை யாக வந்தனர். விளம்பரங்கள் நவீன முறைகளில் செய்யப் பட்டன. ஒரு சமயம் சர்ச்சில் ஒரு தெருவில் போய்க் கொண்டிருக்கும்போது, வீட்டுச் சுவர்களில் பெரிய நோட்டீஸ்கள் பலவற்றைக் கண்டார். ஒன்றில் தம் முடைய மூத்த புத்திரியின் பெரிய புகைப்பட மொன்றை, 'தந்தைக்கு ஓட்டுக் கொடுங்கள்' என்ற வாசகத்துடன் கண்டார். தமக்காகத் தம் நண்பர்கள் எடுத்துக்கொண்ட பிரயாசையைக் கண்டு ஆச்சரியப்பட்டார். 'மார்னிங்

போஸ்ட்' என்ற பத்திரிகையைத் தவிர, எல்லாப் பத்திரிகைகளும் அவரை ஆதரித்தன. ஒவ்வொரு ஓட்டரின் வீட்டிலும் பிளவுகள் ஏற்பட்டன. தாய் தந்தையர் காப்டன் நிக்கல்ஸனை ஆதரித்தால், புத்திரர்கள் சர்ச்சிலை ஆதரித்தனர். வயோதிகர்கள் எதிரியை ஆதரித்தால், சர்ச்சிலை இளம் சிங்கங்கள் ஆதரித்தன. 150 வருஷங்களுக்கு முன்பு ஒரு சமயம் இதே தொகுதியில் நடந்த தேர்தலில் மூன்றும் ஜார்ஜ் மன்னரால் நன்கு மதிக்கப்பெற்று ஆதரவளிக்கப்பட்ட அபேட்சகர் ஒருவரை சார்லஸ் ஜேம்ஸ் பாக்ஸ் என்பவர் போட்டியிட்டபோது நாடெங்கும் ஒரே பரபரப்பாயிருந்ததாம். அதற்குச் சமானமாகவே யிருந்ததாம் சர்ச்சில் போட்டியிட்ட இந்தத் தேர்தலும். ஆனால், கன்ஸர்வேடிவ் கட்சியினரின் பழமையான கோட்டை யல்லவா இந்தத் தொகுதி! அவர்களின் ஆதரவில்லாவிடில் ஜெயம் பெறுவது கஷ்டம்தான். தேர்தலுக்குப் பிறகு ஓட்டுக்கள் எண்ணப்பட்டன. காப்டன் நிக்கல்ஸனுக்கு 8,187 ஓட்டும், சர்ச்சிலுக்கு 8,144 ஓட்டும் கிடைத்தன. 43 ஓட்டுக்களால் சர்ச்சில் தோற்றுர். மிகவும் சிறுபான்மையான ஓட்டுக்களால் நிகழ்ந்த இந்தத் தோல்வியை யாரும் பொருட்படுத்தவில்லை. சர்ச்சிலின் ஊக்கமும் வேகமும் குறைந்துவிட்டது என்று நினைத்த எதிரிகள் ஏமாந்தனர். அபேதவாதிக்கும், தீவிரவாதிக்கும் மிகச் சிறுபான்மை ஓட்டுக்களே கிடைத்தன. ஆகவே, கன்ஸர்வேடிவ் கட்சியினருக்கு இவர் திறமையில் நம்பிக்கை பிறந்தது. அபேதவாதிகளை முறியடிக்கும் ஆற்றல் இவரிடம் மிகுதியா யிருப்பதை உணர்ந்தனர். பல மேடைகளில் ஏறி, சர்ச்சில் அபேதவாதக் கட்சியைக் கண்டித்துப் பேசியதின் பயனுக

ராம்சே மாக்டொனல்டின் அபேதவாத சர்க்கார் விழுந்தது. பிறகு சர்ச்சில் எப்பிங் தொகுதிக்குப் போட்டியிட்டு, பெரும்பான்மையான ஓட்டுக்களால் பெரியதோர் வெற்றி பெற்ருர். இவருக்கு 19,843 ஓட்டுக்களும், லிபரல் கட்சிக்கு 10,080 ஓட்டுக்களும், அபேதவாதிக்கு 3,268 ஓட்டுக்களும் கிடைத்தன. கன்ஸர்வேடிவ் கட்சிக்குப் பெரும்பான்மை யான ஸ்தானங்கள் கிடைக்கவே அதன் அங்கத்தினர்கள் சர்ச்சிலைக் கவனிக்கவில்லை.

# 16. நிதி மந்திரி

பிரதம மந்திரியான பால்டுவின் மட்டும் அந்தத் தடவை கொஞ்சம் புத்திசாலியாக நடந்துகொண் டார். சர்ச்சிலைப் பொக்கிஷ மந்திரி யாக்கினர். 48 வருஷங் களுக்கு முன் அவருடைய தந்தை அலங்கரித்த ஸ்தானத்தை இப்பொழுது சர்ச்சில் கைப்பற்றினர். எந்த அரசியல்வாதி யும் சர்ச்சிலைப் போல் அநேகமாய் எல்லா இலாக்காவிலும் மந்திரியா யிருந்தது கிடையாது. இவருடைய தந்தையார், தம் பொக்கிஷ மந்திரிப் பதவியைக் காலிசெய்துவிட்டுப் போகும்போது, வழக்கத்துக்கு மாருக, தம் மேலங்கியை தமக்குப் பின் அந்த ஸ்தானத்துக்கு வருபவருக்குக் கொடுத்துவிட மறுத்து, தம்முடன் எடுத்துக்கொண்டு போய்விட்டாராம். அவர் இறந்ததும், தம் மகனுக்கு ஒரு காலத்தில் அந்த அங்கி உதவக்கூடுமென்று மிகவும் ஜாக் கிரதையாக அதை ஒரு பெட்டியில் வைத்திருந்தாராம் சர்ச் சிலின் தாயார். இப்பொழுது அந்த அங்கியைத் தரித்துக் கொண்டு வந்து தம் ஆசனத்தில் உட்கார்ந்தார் அவர் மைந்தர்.

நாட்டின் அபிவிருத்திக்கும், சர்க்காரின் நோக்கங் களைப் பாதுகாப்பதற்கும் அவசியமான பல சட்டங்களைச் சர்ச்சில் அமுலுக்குக் கொண்டுவந்தார். இறக்குமதியாகும் பல சரக்குகளுக்கு வரிகளை விதித்தும், சிலவற்றிற்கு வரிகளை உயர்த்தியும், வருமான வரிகளைக் குறைத்தும், வேலையில் லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்குப் பலவித முறை

களை உண்டாக்கியும் நாட்டின் பொருளாதாரத்தை உயர்த்தி வந்தார். காமன்ஸ் சபையில் ஒருவர் இவரை, 'என்ன உமது கொள்கைகள் மாறிக்கொண்டே இருக்கின்றனவே?' என்று கேட்டபோது, 'ஆம், விருத்தியடைவதற்கு மாறுதல் ஏற்படுவது அவசியமானதுதான். அடிக்கடி மாறுவதால் குறிப்பிட்ட ஒரு விஷயத்தில் பூரணப் பாண்டித்யம் பெறலா மென்பது அநுபவ சித்தாந்தம்' என்று பதில் கூறி, கேட்டவர் வாயை அடைத்தார். பந்தயப் போட்டிகளுக்குப் புதிய வரிகளை விதித்து, பந்தயங்களுக்குச் சென்று சூதாடுபவர்களின் தொகையைக் குறைத்தார். சூதாட்டத்தினுல் எத்தனையோ குடும்பங்கள் சீர்குலைந்து போய்விட்டன. ஆகவே, இந்தப் பந்தய வரிகள் குடும்ப ஸ்திரீகளுக்கு நல்ல பயனைக் கொடுத்தன. பெண்களெல்லோரும் சர்ச்சிலை வாயார வாழ்த்தினர்.

இந்தச் சமயத்தில், அபேதவாதிகளும் தொழிற்கட்சியினரும் சேர்ந்து, நாட்டில் ஒரு பெரிய கிளர்ச்சியைக் கிளப்பிவிட்டனர். நாடெங்கும் வேலை நிறுத்தம் உண்டாயிற்று. ஜனங்களுடைய துன்பங்கள் சொல்லி முடியாது. எங்கு பார்த்தாலும், சச்சரவுகளும், குட்டிச் சண்டைகளுந்தான். இந்த இயக்கத்தை உடனே கிள்ளி எறியாவிட்டால் நாட்டுக்கே பேராபத்து நேர்ந்துவிடு மென்று எல்லோரும் கருதினர். தொழிலாளர்களின் கிளர்ச்சியாதலால், எல்லா வியாபார ஸ்தலங்களும் மூடப்பட்டன. போக்கு வரத்து சாதனங்கள் தடைப்பட்டன. சுகாதார இலாக்காவின் நிலைமையைச் சொல்லி முடியாது. பத்திரிகைகள்கூட நின்றுவிட்டன. இந்த அபாய நிலைமையிலிருந்து நாட்டை விடுவிக்கும் பொறுப்பு சர்ச்சிலின் தலையில் விழுந்

தது. பத்திரிகை உலகில் அவருக்குள்ள திறமையைக் காட்டும் சந்தர்ப்பம் வந்தது. பத்திரிகை முதலாளிகளின் கூட்டமொன்றைக் கூட்டுவித்தார். கவர்ன்மெண்டு சார்பாக ஒரு பத்திரிகை ஆரம்பிக்கும் விஷயத்தைப்பற்றி ஆலோசித்தனர். ஒருவரும் ஆதரவளிக்க முன்வரவில்லை. கொஞ்ச நேரத்திற்குப் பிறகு 'மார்னிங் போஸ்ட்'டின் முதலாளிகள் முன்வந்தனர். தங்கள் கட்டிடங்களையும் அச்சு யந்திரங்களையும், வேலை நிறுத்தம் முடியும்வரையில் சர்க்காரிடம் ஒப்புவிக்கத் தயாரானார்கள். ஆனால், அச்சுப் பொறுக்கிச் சேர்ப்பதற்கும், யந்திரங்களில் பதிப்பிப்பதற்கும் தொழிலாளர் வேண்டுமல்லவா? அவர்களும் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டிருந்ததால் என்ன செய்வதென்று விழித்தனர். மேற்படி தொழில்களில் திறமை வாய்ந்த சில முதலாளிகளும் உத்தியோகஸ்தர்களும் இருந்தனர். அவர்களுடைய உதவியைக் கொண்டு, தம் மேற்பார்வையில் 'பிரிட்டிஷ் கேஜட்' என்ற ஒரு சர்க்கார் பத்திரிகையை ஆரம்பித்தார். சில வாலன்டியர்-மோட்டார் ஸ்தாபனங்களை ஏற்படுத்தியதால் நாடெங்கும் இந்தப் பத்திரிகை வழங்கலாயிற்று. முப்பது லக்ஷம் சந்தாதாரர்கள் சேர்ந்துவிட்டனர். பத்திரிகை-உலக சரித்திரத்திலேயே, முதன் முதல், விளம்பர உதவியில்லாமல் விற்பனையைக் கொண்டே நிர்வாகம் செய்து வந்த பத்திரிகை இது ஒன்றுதான். இந்தப் பத்திரிகை செய்துவந்த பிரசாரங்களால் வேலை நிறுத்த இயக்கம் தோற்றது. இந்தப் பத்திரிகைக்குத் தொழில் புரிந்துவந்த பிரமுகர்களெல்லோரும் தத்தம் பத்திரிகைகளுக்குத் திரும்பிப் போக நேர்ந்ததால் இந்தப் பத்திரிகையின் ஆயுளும் முடிந்தது. சுரங்கங்களில் வேறு பல நெருக்கடிகளும்

கஷ்டங்களும் உண்டாயின. அவற்றையும் பல முறைகளைக் கொண்டு சர்ச்சில் நிறுத்தினார்.

பிறகு, ஐரோப்பா சுற்றுப் பிரயாணத்துக் கென்று புறப்பட்டார். இத்தாலிக்குச் சென்று முஸோலினியைக் கண்டு பேசினார். அந்தச் சர்வாதிகாரியின் வேலைத் திறமையையும் வாழ்க்கையையும் பற்றி மிகவும் உயர்வாகப் புகழ்ந்திருக்கிறார். எகிப்துக்குப் போனார். போகும் வழியில் ஒட்டகை முதுகிலிருந்து கீழே விழுந்தார். 'பிரமிட்'களின் படங்களை வரைந்து வர்ணந் தீட்டினார். நார்மண்டிக்குப் போய்க் காட்டுப் பன்றிகளை வேட்டையாடினார். ஒழிந்த நேரங்களில், தம் உலக மகா யுத்த சரித்திரத்தின் 3-வது, 4-வது பாகங்களின் புரூப்களைத் திருத்தினார். ரஷ்யா முதலிய இன்னும் பல இடங்களைச் சுற்றிப் பார்த்துவிட்டுப் பின்னர் தாய்நாடு திரும்பினார்.

வர்த்தக சங்கங்களின் வேலை நிறுத்தங்களைச் சட்ட விரோத மாக்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யப் போவதாக சர்க்காரால் அறிவிக்கப்பட்டது. ரயில்வே தொழிலாளர்களின் தலைவர் தாமஸ் என்பவர், 'மேற்படி ஏற்பாடுகளைப் பற்றி வர்த்தக சங்கத்தார்களைக் கலந்து யோசிக்க சர்க்கார் தவறிவிட்டது எந்தக் காரணத்தைக் கொண்டு?' என்று கேட்டபோது, சர்ச்சில் எழுந்து, 'குற்றம் செய்த சோல்ஜர் ஒருவனை ராணுவக் கோர்ட்டில் விசாரிக்கும் போது, அந்தக் கோர்ட்டின் தலைவர் குற்றவாளியைப் பார்த்து, "ஏனப்பா நாங்கள் உன்னை விசாரிப்பதில் உனக்கு ஏதாவது ஆட்சேபம் உண்டா?" என்று கேட்டாராம். அதற்குக் குற்றவாளி, "உங்களைக் கட்டோடு எனக்குப் பிடிக்கவில்லை" என்றானாம். இந்தக் கதையைப்

போல்தான் முடிந்திருக்கும், வர்த்தக சங்கங்களுடன் நாங்கள் கலந்து யோசித்திருந்தால்' என்று சொல்லி எல்லோருக்கும் நகைப்பை உண்டாக்கினர்.

இவருடைய 1927-ஆம் வருஷத்திய வரவு செலவுத் திட்டம் மிகவும் சாமர்த்தியமாய் அமைக்கப்பட்டது. 1926-ல் நாடெங்கும் வேலை நிறுத்தங்கள் செய்ததன் பயனுகப் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டதைச் சமாளிக்கும் பொருட்டு, புகையிலை வரியைச் சிறிது உயர்த்தியும், பிராந்தி முதலிய குடி வகைகள், நெருப்புப் பெட்டி, டயர்கள் முதலியவற்றின் சுங்கங்களை உயர்த்தியும், இரண்டு பாகமாக வசூலித்து வந்த வருமான வரிகளை ஒரே முறையில் வசூல் செய்ய ஏற்பாடுகள் செய்தும், வரவு செலவுத் திட்டத்தைத் திறமையுடன் வகுத்துத் தம் கீர்த்தியை நிலை நாட்டினர். ' இவர் என்ன செய்யப் போகிறரோ ? ' என்று பயந்திருந்தவர்களும், இவரை வெறுத்தவர்களும் இந்தத் திட்டத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டனர்.

1927-ஆம் வருஷத்தில் கோடை காலத்தில் நாடெங்கும் பலத்த அரசியல் விவாதங்கள் நடந்தன. பால்டுவினும், சர்ச்சிலும் பலவிதக் கொள்கைகளில் வேறுபாடுள்ளவர்கள். இவ்விருவருந்தான் கன்ஸர்வேடிவ் கட்சியின் முக்கியத் தூண்களாக இப்போது விளங்கினர். கட்சியின் லட்சியங்களுக்கு மாருகப் பிரதம மந்திரியான பால்டுவின் பற்பல விஷயங்களில் துடுக்காக ஈடுபட்டிருந்தார். உதாரணமாக, இந்திய அரசியல் சீர்திருத்தங்களில் தம் கட்சியின் கொள்கைகளைக் கவனிக்கவில்லையாம். லார்டு இர்வினுடைய தூண்டுகோலாலும், ' சுத்த மண்டு'வான ஸர் ஸாமுவேல் ஹோரின் உதவியாலும், தம் கட்சியினர் யாரும் வெறுக்கத்

தருந்த ஒரு மசோதாவை சபைக்கு முன் கொண்டு வந்தாராம். லிபரல் கட்சியினரோ அல்லது அபேதவாதக் கட்சியினரோ இந்த மசோதாவைச் சமர்ப்பித்திருந்தால் கன்ஸர்வேடிவ் அங்கத்தினரில் நூற்றில் ஒருவர்கூட இதை அனுமதித்திருக்க மாட்டார்களாம்.

சர்ச்சில் தம்மாலான மட்டும் எதிர்த்து நின்ருர். என்றுமில்லாத ஆவேசத்துடன் இந்தியா மசோதாவை அறவே எதிர்த்து அரிய சொற்பொழிவுக ளாற்றினர். எல்லாக் கட்சிகளின் பிரதிநிதிகளையும், மகா நிபுணர்களையுங் கொண்ட சைமன் கமிஷனுடைய சிபார்சுகளைப் பல விஷயங்களில் பால்டுவின் கவனிக்கவே யில்லையாம். பால்டுவின் மட்டும் சிரித்துக்கொண்டே தம் வேலையைக் கவனித்தாராம். சர்ச்சிலைச் சட்டை பண்ணுமல் ஸர் ஸாமுவேல் ஹோரைக் கொண்டே காரியங்களை நடத்திவிட்டாராம். சர்ச்சிலை எதிர்த்துத் திறமையுடன் விவாதிப்பதில் இந்தச் சமயத்தில் பிலிப் ஸ்நோடன் என்பவருக்கு நிகர் வேறு யாருமில்லை. இவ்விருவருக்கும் எந்தச் சமயத்திலும் காமன்ஸ் சபையில் யுத்தம் நடந்த வண்ணமாய்த்தான் இருக்குமாம்.

1931-ஆம் வருஷம் மந்திரி சபை திருத்தி யமைக்கப் பட்டது. சோஷலிஸ்டு கட்சியினரும் கன்ஸர்வேடிவ் கட்சியினரும் கூட்டு மந்திரி சபை அமைத்தனர். சர்ச்சில் அதில் சேர்க்கப்படவில்லை. பால்டுவினுடைய காரியங்களெல்லாம் குழப்பமாகத்தா னிருக்குமாம். அதனுல் சர்ச்சிலுக்கும் இவருக்கும் அபிப்பிராய பேதங்கள் உண்டு.

சர்ச்சிலின் தாயார் அமெரிக்கமாதல்லவா? தந்தையின் ஆங்கிலக் குணங்களும் தாயின் அமெரிக்கக் குணங்களும்

இவரிடத்தில் மிக விசித்திரமாய் அமைந்திருந்தன. தம் தாய் பிறந்த நாட்டில் இவருக்கு ஒரு பிரேமை யுண்டு. மகா யுத்தத்தின் போது அமெரிக்க சர்க்கார் இவருக்குக் கொடுத்த அதிகாரத்தை மிகவும் சிலாகித்துப் பேசுவார். சில சந்தர்ப்பங்களில் தம் நண்பர்களுடன் பேசிக்கொண் டிருக்கும்போது, 'நான் ஒரு தனிப்பட்ட கூட்டத்தைச் சேர்ந்தவனே யல்ல. எனக்குக் கிடைத்த அரசியல் செல் வாக்குகளை யெல்லாம் என் சமர்த்தைக்கொண்டே சண்டை போட்டுச் சம்பாதித்தேன். எனினும் யாரையும் விட என் மேல்தான் பலருக்கு வெறுப்பு அதிகம்' என்றார். ஒரு கூட்டத்திலும் சேராது தன்னந் தனியே உழைத்ததுதான், பலர் அவரை வெறுப்பதற்குக் காரணம் என்று அவர் யூகிக்கவில்லை போலும். மனத்தில் ஒன்றையும் ஒளிக்காமல் கபடமற்ற முறையில் வாழ்க்கையை நடத்திவரும் ஒருவனை அநேகர் விரும்பமாட்டார்கள். சூது வாதுகளைக் கைக் கொள்ளாமல் முன்னேற்ற மடைந்து கீர்த்தியை விரும்பும் ஒருவனுக்கு நண்பர்களைக் காட்டிலும் விரோதிகளே அதிக மல்லவா? அத்தகைய உத்தமன் ஒருவனுக்கு வெற்றி மேல் வெற்றி கிடைத்துவிட்டால் இரக்க மென்பதை அவன் எதிர்பார்க்கவே முடியாது. சர்ச்சிலுடன் நெருங்கிப் பழகாதவர்கள்தான் அவருடைய குண விசேஷங்களை அறியாமல் அவரை நிந்திப்பவர்கள். அவருடன் நெருங்கிப் பழக ஆரம்பித்துவிட்டால் அவரை விட்டுப் பிரியவே மனது வராது.

அவர் கூறியிருப்பது போல், போராடியே தம் வாழ்க் கையில் முன்னேறி வந்தார். 1921-ல் அவருடைய தாய் இறக்கும் வரையில் தம் சொற்பொழிவைக் கொண்

டும் எழுத்து வல்லமையைக்கொண்டுமே அவர் ஜீவனத்தை நடத்தி வந்தார். தாய் இறந்ததும் அவருடைய 30,000 பவுன் பெறுமானமுள்ள சொத்து இவருக்குக் கிடைத்தது. அதே வருஷம், லார்ட் ஹெர்பெர்ட் வென்-டெம்பெஸ்ட் என்பவரின் உயிலின்படி இவருக்கு வருஷா வருஷம் 5,000 பவுன் கிடைப்பதாயிற்று.

இவர் இயற்றிய புத்தகங்களில், 'சவ்ரோலா', 'மாலகந்தின் ராணுவப் படையின் கதை', 'அதீனியம்', 'ஆற்று யுத்தம்', 'போயர் யுத்தம்' (இரண்டு பாகங்கள்), 'லார்ட் ராண்டால்ப் சர்ச்சில்' (தம் தந்தையின் சரிதம்), 'ஆப்பிரிக்காவில் என் வழிநடை', 'உலக யுத்தம்' ஆகியவை முக்கியமானவை.

கன்ஸர்வேடிவ் கட்சியினின்று முதலில் விலகி, லிபரல் கட்சியில் சேர்ந்து, பிறகு திரும்பவும் கன்ஸர்வேடிவ் கட்சிக்கே வந்து இப்பொழுது அந்தக் கட்சியின் உயிர் போன்று விளங்கினர் சர்ச்சில். எதிர்காலத்தில் என்னென்ன நேரும் என்பதைப் பெரும்பாலோர் அப்பொழுது உணரவில்லை. ஆனல், சர்ச்சில் மட்டும், இன்னொரு பெரும் போர் வரப்போவதைக் கூறி எச்சரித்துக்கொண்டேயிருந்தார்.



பிரிட்டனின் கடற்கரை வெறும் மணல் - கரை அன்று. கரை முழுதும், மேலே காண்பது போல், பீரங்கிகள் ஏற்றி வைக்கப்பட்டிருப்பதால் ஒவ்வொரு அங்குலமும் உருக்குக் கடற்கரை என்றே சொல்லலாம்

# 17. இரண்டாவது உலக மகா யுத்தம்

இரண்டாவது உலக மகா யுத்த ஆரம்பத்தின் போது சேம்பர்லின் பிரதம மந்திரியாக இருந்து வந்தார். சர்ச்சில் கடற்படை மந்திரி.

இந்த மகா யுத்த வரலாறுகளைக் கவனிப்பதற்கு முன்னால், பிரிட்டன் அனுஷ்டித்துவந்த அந்நிய நாட்டுக் கொள்கையை ஆராய வேண்டியது அவசியம்.

செக்கோஸ்லோவேகியா சம்பந்தமாக மூனிக்கில் ஒப்பந்தம் ஏற்படும்வரை, பிரிட்டன் யுத்தத்துக்குத் தயாராயில்லாததோடு, ஜெர்மனியை எதிர்த்துப் போராட வேண்டிய அவசியம் ஏற்படுமென்று சேம்பர்லின் நம்பவில்லை. இதனால் ஹிட்லரின் முரட்டுத்தனத்துக்கும் விதண்டாவாதங்களுக்கும் அவர் எவ்வளவோ விட்டுக் கொடுத்து வந்தார். உறுதியும் தெளிவும் இல்லாத சேம்பர்லின் கொள்கை உலகப் பிரசித்தமானவை. முரட்டு சர்வாதிகாரிகளுக்கு விட்டுக்கொடுத்து வந்தால் எல்லாம் சரிப்பட்டுவிடும் என்பது அவர் நம்பிக்கை.

சேம்பர்லின் இத்தகைய நம்பிக்கையோடு ஹிட்லருக்கு விட்டுக்கொடுத்ததற்குக் காரணங்கள் இல்லாமலில்லை. ஜெர்மனிக்கும் ரஷ்யாவுக்கும் இருந்துவந்த பகை தீராத ஒன்றென்று சேம்பர்லின் கருதினார். பிரிட்டனும் போருக்குப் போதிய அளவில் தன்னைத் தயாரித்துக் கொண்டிருக்கவில்லை. எனவே, ஹிட்லருக்கு விட்டுக்கொடுக்க வேண்டிய அவசியமும் இருந்தது.

ஆகையால், எப்படியாவது பிரிட்டனுக்கு ஆபத் தொன்றும் நேர்ந்துவிடக் கூடாதென்று, உலகமே கண்டு பதறும்படி, சுதந்தரமே உருவெடுத்து விளங்கிய குடியரசு களைக்கூட ஹிட்லருக்கு விட்டுக் கொடுத்தார் சேம்பர் லின். இது மட்டுமன்று, ஹிட்லர் அடுத்தபடியாக ரஷ்யா மீது பாயவேண்டுமென்ற விருப்பத்தோடு அவர் ஹிட்ல ரைத் தட்டியும் கொடுத்தார். ரஷ்யாவுக்குத் தெரிவிக் காமலே, அதைக் கலக்காமலே, மூனிக் ஒப்பந்தம் மூடு மந்திரமாக முடிந்தது.

இதில் ரஷ்யாவுக்குச் சொல்ல முடியாத ஆத்திரம். உலகம் அதைப் பார்த்துச் சிரித்தது. 'சர்வதேச விவ காரங்களில் உனக்கு ஓர் இடம் உண்டா?' என்று உலகம் தன்னைப் பார்த்துக் கேட்பது போல் ரஷ்யா கருதிக்கொண்டது.

மூனிக் ஒப்பந்தத்துக்குப் பின், பிரிட்டனுடைய போக்கில் ஒரே ஒரு மாறுதல்தான் ஏற்பட்டிருந்தது. பிரிட்டன் தன்னைத் துரிதமாகப் போருக்குத் தயாரித்துக் கொண்டது. ஜெர்மனியோடு யுத்தம் தொடுக்கவேண்டிய, அல்லது ஹிட்லரின் விடாப் பிடியை ஆயுத பலத்தால் ஒடுக்கவேண்டிய அவசியம் விரைவில் ஓடி வந்துகொண் டிருப்பதாக அது உணர்ந்துவிட்டது. ஆகவே, அவசர அவசரமான ஆயுத விஸ்தரிப்பு நடந்தது.

என்றாலும், ரஷ்ய-ஜெர்மன் உறவு விஷயத்தில் பிரிட் டன் கொண்டிருந்த மனப்பான்மை மட்டும் மாறவில்லை. ரஷ் யாவுக்கு ஓர் அந்தஸ்தை யளிக்க பிரிட்டன் விரும்பாதது கூடப் பெரிதில்லை. ரஷ்ய-ஜெர்மன் விரோதமோ அல் லது உறவோ எப்படிப்பட்டது என்பதைக்கூட பிரிட்டன்

சரியாக அறியவில்லை. பிரிட்டிஷ் அந்நிய நாட்டுக் கொள் கையில் இது சரித்திர முக்கியத்துவம் பெற்ற ஒரு விஷயம். சோவியத் ரஷ்யாவின் ஒத்துழைப்பைப் பெறு வதற்காக, ஏற்கனவே மூனிக் ஒப்பந்தத்திலே மூக்கறு பட்டுத் துடித்துக்கொண்டிருந்த அந்தத் தேசத்திற்கு, லாயிட் ஜார்ஜ் குறிப்பிட்டது போல, இரண்டாந்தர, மூன்றாந்தர, நான்காந்தர, மட்டமான ஒரு பேர்வழியைச் சர்க்காரிலிருந்து சேம்பர்லின் தூதாக அனுப்பி வைத்தார்.

1939, ஆகஸ்ட் 21-ஆம் தேதி உலகம் திடுக்கிட்டு எழுந்தது. நம்ப முடியாத ஒரு விஷயம் ஏற்பட்டுவிட்டது. ரஷ்ய - ஜெர்மன் அனுக்ரமிப்பு ஒப்பந்தம் ஏற்பட்டு விட்டது. ஜெர்மனிக்கு ரஷ்யா மூலப் பொருள்கள் கொடுப்பதாயும் ஏற்பாடு செய்யப்பட்டது. ரஷ்ய - ஜெர் மன் விரோதத்தில் நம்பிக்கை வைத்திருந்த பிரிட்டனை இது தூக்கிவாரிப் போட்டது.

இந்த ஒப்பந்தம் ஏற்பட்டதால், ஹிட்லர் தமது படை யெடுப்பை ஐந்து நாட்களுக்குப் பின்னே தள்ளிவைத்தார். போர், ஆகஸ்ட் 25-ஆம் தேதியிலிருந்து செப்டம்பர் முதல் தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டது.

ஹிட்லர் கோரிய டான்ஸிக் பிரதேசத்தையும் போலந்து ரேழி எனப்படும் காரிடாரையும் விட்டுக் கொடுப்பதற்குப் போலந்து உடன்படவில்லை. ஹிட்லர் தாம் சொன்னபடி, செப்டம்பர் முதல் தேதி இரவில், 800 மைல் முனையில் 80 டிவிஷன்களை அனுப்பி வைத்தார்.

போலந்துக்குப் பிரிட்டன் அளித்திருந்த வாக்குறுதி யின்படி, செப்டம்பர் 3-ஆம் தேதி காலை பிரிட்டன்

ஜெர்மனி மீது யுத்தம் தொடுப்பதாகப் பிரகடனம் செய்தது. சில மணி நேரத்தில் பிரான்ஸும் இவ்வாறே செய்தது.

போலந்து வீரத்துடன் ஜெர்மானியரை எதிர்த்துப் போராடியது. ஆயினும் ஜெர்மனியின் ஆயுத பலத்துக்கு முன், அது பாந்தள் வாயிற் சிக்கிய தேரை போலத் துடித்தது. செப்டம்பர் 17-ஆம் தேதி கிழக்குப் போலந்திலே ரஷ்யச் செஞ்சேனைகளும் புகுந்தன.

சேம்பர்லின் சர்க்கார் லட்சக் கணக்கான துண்டுப் பிரசுரங்களை ஜெர்மனியில் இறைத்துக் கொண்டிருந்தனர். ஆயினும் நாஜித் துருப்புகள் லட்சக் கணக்கான போலந்து மக்களை வதைப்பது நிற்கவில்லை. நேச தேசத் துருப்புகள் ஸீக்பிரீட் அரணைத் துளைத்து ஜெர்மனிக்குள் புகுமென்ற நம்பிக்கை உலக முழுதும் இருந்தது. முடிவில் போலந்து தான் வீழ்ந்தது. அடுத்தபடியாக ஹிட்லருக்கு இரையாக வேண்டிய நிலைமை நார்வேக்கு ஏற்பட்டது. இடையில் பிரிட்டிஷ் கப்பல்கள் பல ஆங்காங்கு ஜெர்மன் சப்மரைன்களால் மூழ்கடிக்கப்பட்டன.

நார்வே அப்போது நடுநிலைமை நாடு. டென்மார்க்கும் அப்படியே.

ஜெர்மானியருடைய கப்பல்களை நடுக் கடலில் நிற்கும் படி செய்யவேண்டு மென்பதற்காக, ஏப்ரல் 8-ஆம் தேதியன்று சர்ச்சிலின் உத்தரவின் பேரில், பிரிட்டிஷ் கடற்படை நார்வே கடலில் கடற் கண்ணிகளை விதைத்தது. ஜெர்மனி இதை ஆட்சேபித்தது.

ஜெர்மன் பிரசார மந்திரி கோயபெல்ஸுக்கு இது போதாதா? வெறும் வாயை மெல்லும் ஒருவனுக்கு

அவல் போட்டாற் போலத்தான். நார்வேமீது படை யெடுக்க வேண்டியது அவசியம் என்று நாஜிகள் கூச்சல் போடும்படியான அளவுக்கு, ஜெர்மனியில் பிரசாரம் செய்துவிட்டார். உண்மையில், ஜெர்மன் கடற்படை ஏற் கனவே 7-ஆம் தேதியன்று நார்வே துறைமுகங்களைக் கைப்பற்றுவதற்காக அனுப்பப் பட்டிருந்தது.

நடுநிலைமை வகித்த போதிலும், நார்வேயினால் இரும்பு வகையில் ஜெர்மனி சாதகமடைந்தே வந்தது. இதே போல் உணவு வகையில், டென்மார்க்கின் நடுநிலைமை ஜெர் மனிக்குத்தான் அனுகூலமா யிருந்தது.

ஆகையால் நார்வே, டென்மார்க் ஆகியவற்றின் மேல் ஜெர்மனி படையெடுக்காதென்ற நம்பிக்கையின் பேரில், பிரிட்டன் நார்வேயைச் சுற்றி கடற் கண்ணிகளைப் போட்டு, நம்ஸாஸில் 12,000 துருப்புகளை இறக்கிற்று. டிரான்ட் ஹீம் துறைமுகத்தில் பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்களும் வைக் கப்பட்டிருந்தன.

ஆனால் நார்வேயில் ஏற்கனவே ஹிட்லரின் 'ஐந்தாவது படையினர்' இருந்தனர். நார்வேயை எளிதில் வசப் படுத்திவிடலா மென்ற உறுதி ஏற்பட்டதும், ஹிட்லரின் நாஜிப் படை டென்மார்க் வழியாக நார்வேயை நோக்கிச் சென்றது. டென்மார்க் எதிர்க்கவில்லை. நார்வே போகிற போக்கில், டென்மார்க்கின் உணவுப் பொருள்களைத் தின்று கொண்டே ஜெர்மன் படைகள் சென்றன. டென்மார்க், வாய் திறந்து எதிர்த்துப் பேசாமல், ஹிட்லரிடம் அடி பணிந்தது.

நார்வே போய்ச் சேருமுன், ஐந்தாம் படையினரால் நார்வே அலங்கோலப்பட்டுக் கிடந்தது. போர் நடந்ததே

யாயினும், வெகு சுலபமாகவே நாஜிகள் அதை வசப்படுத்தி விட்டனர். பிரிட்டிஷ் துருப்புகளை நார்வேயிலிருந்து வெளியேற்றி பிரிட்டனுக்குக் கொண்டுவந்ததே, பிரிட்டனுக்குப் பிரமாதமான வெற்றியெனக் கொண்டாடும்படியான நிலைமை ஏற்பட்டது. பிரிட்டனின் நிலைமை கவலைக்கிடமானதாக ஆயிற்று.

இந்தச் சமயத்தில்தான் பிரிட்டனில் ஒரு பெரிய குழப்பம் ஏற்பட்டது. பார்லிமெண்டு சபைகள் கூடின. சேம்பர்லினை எல்லோரும் ஒருமுகமாகத் தாக்கினர். பதவியை ராஜீநாமா செய்துவிட்டு வெளியேறும்படியும் கூறினர். சேம்பர்லினுடைய சமாதானங்கள் பலிக்கவில்லை. கட்சி பேதங்களின் விளைவுகளாலும், அர்த்தமில்லாத கட்டுப்பாடுகளாலுமே யுத்தத்தில் எதிர்பாராத விபரீதங்கள் நடந்தனவாம். ஆகவே, மந்திரி சபையைக் கலைத்து, சர்வ கட்சியினரையும் கொண்ட ஒரு புதிய மந்திரி சபையை அமைக்கவேண்டுமென்று எல்லோரும் ஆத்திரத்துடன் கூறினர்.

ஜெர்மனியின் நார்வே படையெடுப்பைப் பற்றிய ஓர் அறிக்கையை சர்ச்சில் 1940, ஏப்ரல் 11-ஆம் தேதியன்று பார்லிமெண்ட் மெம்பர்கள் முன்பு சமர்ப்பித்தார். சபை முழுவதும் மிகுந்த ஆவலுடன் சர்ச்சிலின் பேச்சை எதிர்பார்த்திருந்தனர். சர்ச்சில் எழுந்ததும் அங்கத்தினர் பலத்த கரகோஷம் செய்தனர். சர்ச்சில், ஜெர்மனி நார்வே மீது படையெடுத்துவிட்டதால், பல மாதங்களாக யுத்தத்தில் ஏற்பட்டிருந்த அமைதி உடைந்துவிட்டதென்றும், நார்வேயின் மேற்குக் கடற்கரை ஓரமாக நேச தேசங்களின் முற்றுகைக்குள் சிக்காமல் ஜெர்மனிக்கு வேண்

டிய சாமான்கள் கிடைத்து வந்ததாகவும், சர்வ தேசக் கோட்பாடுகளுக்கு நேச தேசத்தார் மதிப்பு வைத்து வந்ததாலேயே இவ்வசதி இருந்துவந்தது என்றும், இதை ஜெர்மனி துர்விநியோகப் படுத்திக்கொண்டது என்றும் கூறினர். நடு நிலைமை நாடுகள் எல்லாம் முன்னல் ஜெர் மனிக்கு வேண்டிய வசதிகளை யெல்லாம் செய்துகொடுத்து விட்டு, கடைசியில் தமக்கே ஆபத்து வந்ததும், பிரிட்டனின் உதவியை நாடுவதை அவர் எடுத்துக் காட்டினர். முடிவில், 'விரோதியின் எந்தத் துவேஷத்தையும் சமாளித்து, உலக லட்சியத்தில் வெற்றிபெற நமது பூர்ண ஆயுளையும், ஊக் கத்தையும் செலவிடத் தயாரா யிருக்கிறேம்!' என்று கூறி அமர்ந்தார். அவர் பேசிய நேரம் 63 நிமிஷம். எல்லா அங்கத்தினரும் அவர் பேச்சை அமைதியாகக் கேட்ட னர். எதிர்க் கட்சியினருக்குக்கூட பிரிட்டிஷ் கடற்படை யில் பூர்ண நம்பிக்கை ஏற்பட்டது. சர்ச்சிலின் அறிக்கை யில் கண்ட உண்மைகளை அமெரிக்கர்களும் பிரமாதமாகப் புகழ்ந்தார்கள்.

மே மாதம் 7-ஆம் தேதி சபை கூடிற்று. நார்வேயில் பிரிட்டிஷ் படைகள் தோற்றுவிட்டது பற்றி எங் கும் ஒரே கலவரமா யிருந்தது. சேம்பர்லின் பேசப் போகிருர் என்று எல்லோரும் அவரை ஆத்திரத்துடன் எதிர்நோக்கினர். சேம்பர்லின் வந்து சபையில் நுழைந்த தும், 'சேம்பர்லின் கோட்டையை விட்டார்!' என்று கை தட்டி இழிவுபடுத்தி வரவேற்றனர். அவர் பேசுகையில் ஏதேதோ சமாதானங்களை எடுத்துரைத்தார். ஒருவருக் கும் திருப்தியில்லை. 'மந்திரி சபைக்குச் சாமர்த்தியம்

கிடையாது. பிரிட்டனுக்கே ஆபத்து ஏற்பட்டிருக்கும் இந்த நிலைமையில் என்ன செய்யப்போகிறீர்கள்?' என்றனர். சுமார் ஒரு மணி நேரம் பேசிய பின்பு லாயிட் ஜார்ஜ் கேட்ட கேள்விக்கு, சர்ச்சிலுக்கு சர்வாதிகாரம் கொடுத்திருப்பதாகச் சொன்னார் சேம்பர்லின்.

மறு தினமும் சபை கூடிற்று. சேம்பர்லின் - மந்திரி சபை மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப் பட்டது. சேம்பர்லின், ஸர் ஸாமுவேல் ஹோர், ஸர் ஜான் ஸைமன் ஆகிய இம்மூவரும் இந்த யுத்தம் வராமல் தடுக்க லாயக்கற்றவர்களென்று தெரிந்துவிட்டதால் இவர்களை மந்திரி ஸ்தானங்களிலிருந்து விலக்கிவிட வேண்டுமென்று கர்ஜித்தனர் அங்கத்தினரில் பலர். சர்ச்சில் அவர்களுக்கு உபதேச மொழிகள் கூறி, இந்த நெருக்கடியில் தமக்குள்ளே இருந்துவரும் அபிப்பிராய பேதங்களை மறந்து, எல்லோரும் ஒன்றுபட்டு, சமாதான முறையில் தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்வதுதான் உசிதமென்று புகன்றார். மறுதினம் சேம்பர்லினைப் பிரதம மந்திரியாகக் கொண்ட சர்க்காரில் இருப்பது அசாத்தியமென்று தொழிற் கட்சித் தலைவர்கள் தெரிவித்துவிட்டனர். எல்லாக் கட்சிகளுக்கும் திருப்திகரமான ஒரு புதிய தேசீய சர்க்காரை அமைப்பதற்குத் தம்முடைய ராஜீநாமா உதவக்கூடுமென்றால் அதற்குத் தாம் தயாராயிருப்பதாகத் தெரிவித்து விட்டார் சேம்பர்லின்.

## 18. பிரதம மந்திரி சர்ச்சில்

மே மாதம் 10-ஆம் தேதி மாலை நேரத்தில் சேம்பர் லின் மன்னர்பிரானைக் கண்டார். தம் பதவியை ராஜீநாமா செய்தார். சர்ச்சில் பிரதம மந்திரி யானார். மந்திரி சபை திருத்தியமைக்கப்பட்டது. சர்ச்சில் பிரதம மந்திரிப் பதவியை ஏற்றுக்கொண்ட பிறகு, 13-ஆம் தேதியன்று கூடிய காமன்ஸ் சபையின் முதல் கூட்டத் துக்கு அவர் வந்தபோது, சபையில் எல்லாக் கட்சியாரும் குதூகலமாக ஆரவாரம் செய்து அவரை வரவேற்றனர். 'ஜெர்மனியை எதிர்த்து நடக்கும் இந்த யுத்தத்தை வெற்றி கரமாக நடத்துவதற்குப் பூரண ஐக்கியத்துடனும் திட சங் கற்பத்துடனும் இந்நாடு கொண்டுள்ள உறுதிக்குப் பிரதி நிதியாக இப்போது அமைக்கப்பட்டுள்ள சர்க்காரை இந்த சபை வரவேற்கிறது' என்ற வாசக அமைப்புடன் சர்ச்சில் பிரேரேபித்த நம்பிக்கைப் பிரேரேபணை சபையில் ஏகமன தாக நிறைவேறியது. பின்பு சர்ச்சில் எழுந்து பின்வரு மாறு பேசினர் :

'வெள்ளிக்கிழமை யன்று மன்னர் என்னை அழைத்துப் புது மந்திரி சபையொன்றை அமைக்கும்படி, கட்டளையிட்டார். புதிய மந்திரி சபையில் எல்லாக் கட்சியினருக்கும் இடம் தரப்படவேண்டு மென்பதே இந்தச் சபையின் விருப்பமென்பது சென்ற வாரம் நன்றாகத் தெரிந்தது. எதிர்க் கட்சியினரைச் சேர்த்து, தேசிய ஐக்கியத்துக்குப் பிரதிநிதியான ஐந்து பேர்

கொண்ட ஒரு யுத்த மந்திரி சபையை அமைத்திருக்கிறேன். மூன்று கட்சிகளின் தலைவர்களும் அதில் பெரிய நிர்வாகப் பதவிகளை ஏற்றுக்கொண்டனர். கடற்படை, தரைப்படை, விமானப்படை ஆகியவற்றின் பதவிகளும் அவ்வாறே பூர்த்தி செய்யப்பட்டன. நிகழ்ச்சிகள் வெகு வேகமாக நடந்துவரும் சமயத்தில், இந்த வேலையை ஒரே நாளில் செய்து முடிப்பது அவசியமாயிற்று. மற்ற முக்கியமான பதவிகளுக்கும் நேற்று நியமனம் செய்தாகிவிட்டது. மற்ற சில மந்திரிகளை நாளையே நியமித்துப் பூர்த்திசெய்துவிடலாம்.

'நாம் இப்போது சரித்திரத்திலேயே மிக நெருக்கடியான யுத்தத்தினிடையே காரியம் செய்கிறோம். பல விடங்களில் நாம் யுத்தம் நடத்தி வருகிறோம். நார்வேயிலும், ஹாலந்திலும், வேறு இடங்களிலும் யுத்தம் நடக்கிறது. மத்தியதரைக் கடலில் தயாராயிருக்க வேண்டி யிருக்கிறது. ஒரு விமான யுத்தம் இடைவிடாமல் நடக்கிறது. உள்நாட்டில் பல உற்பத்தி வேலைகளை நடத்தவேண்டி யிருக்கிறது. இவ்வளவு நெருக்கடியான சமயத்தில் நான் அதிக நேரம் பிரசங்கம் செய்வதற்கில்லை. அதுபற்றிச் சபையினர் மன்னிக்கவேண்டும். என் சகாக்களைப் பற்றியும், பழைய சகாக்களைப் பற்றியும், நண்பர்களைப் பற்றியும் சம்பிரதாய முறைப்படி நான் சில வார்த்தைகள் சொல்ல வேண்டியதைக்கூட இப்போது சொல்லாததுபற்றி யாரும் தப்பர்த்தம் செய்துகொள்ளக் கூடாது.

'இந்தச் சபைக்கு நான் ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். சர்க்காரில் சேர்ந்துள்ள என் சகாக்களிடமும் நான் கூறினது அதுதான். அதாவது :—நான் உங்களிடம் சமர்ப்பிக்கக் கூடியது ரத்தம்,

உழைப்பு, கண்ணீர், நெற்றி வேர்வை இவைதான் ; வேறெதுவுமில்லை. மிகவும் கடுமையான ஒரு சோத னையை நாம் எதிர்நோக்கி நிற்கிறோம். பல மாதங் கள் நாம் பல கஷ்டங்களுக்கு உட்படவேண்டும். நமது கொள்கை என்னவென்று யாரேனும் கேட்டால், "யுத்தம் நடத்துவது ஒன்றே எங்கள் கொள்கை" என்று சொல்லவேண்டும். தரையில் யுத்தம், வானில் யுத்தம், கடலில் யுத்தம், நமது முழு பலத்தையும் உப யோகித்து யுத்தம், கடவுள் தந்த வலிமை முழுவதையும் உபயோகித்து யுத்தம் ; மனித அக்கிரம ஜாப்தாவில் மிக வும் இருள் சூழ்ந்த அநியாயமான ராட்சஸத்தனமான கொடுங்கோன்மையை எதிர்த்து யுத்தம் : இத்தகைய யுத்தத்தை நடத்துவதுதான் நமது கொள்கை. யுத்தத் தில் நமது லட்சியம் என்ன ? ஒரே வார்த்தையில் பதி லளிக்கிறேன். "வெற்றி" என்பதுதான் அது. எவ்வ ளவு அபாயம் நேரிடினும் வெற்றி ; எவ்வளவு தியாகம் செய்தாயினும் வெற்றி ; வெற்றியை அடையும் பாதை எவ்வளவு நீண்டதாயினும், எவ்வளவு கடினமாயினும், வெற்றியை அடைந்தே தீருவது. அதுதான் நமது லட்சியம்.

'இந்த யுத்தத்தில் நாம் தோற்றால், பிறகு நாம் உயி ருடனிருக்க முடியாது. இன்னொன்றும் ஞாபக மிருக்கட் டும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் பிழைத்திருக்க முடியாது. மனித வர்க்கம் படிப்படியாக முன்னேறிக்கொண்டே யிருக்கவேண்டு மென்ற பரம லட்சியம் அடியோடு மாளும். ஆனால் அந்த விபரீதம் ஏற்படா தென்ற முழு நம்பிக்கை யுடனும், குதூகலத்துடனும், நான் என் கடமையை ஏற்றுக்கொண்டுள்ளேன். இந்தச் சமயத்தில் எல்லோ ருடைய உதவியையும் ஆதரவையும் பெற எனக்கு உரிமை

உண்டென்று நம்புகிறேன். ஐக்கியத்துடன் கைகோத்து முன்னேறுவோம், வாருங்கள்!'

சர்ச்சில் பேசிய இந்தப் பேச்சு சபையோரின் பரிபூரண ஆதரவைப் பெற்றதுடன், இன்னும் உலக மக்களின் செவிகளில் ஒலித்துக்கொண்டே யிருக்கிறது.

பிரான்ஸில் அபாயகரமான நிலைமை ஏற்பட்டிருந்த போது சர்ச்சில் லண்டன் ரேடியோ மூலம் செய்த சொற்பொழிவு வருமாறு:

'ஏகாதிபத்தியம், நமது நாடு, நேச நாடுகள் இவற்றின் வாழ்வில், சுதந்திரத்துக்கே சோதனையாக விபரீதங்கள் நடந்து வரும் இந்தத் தருணத்தில், முதல் தடவையாகப் பிரதம மந்திரி யென்ற முறையில் நான் உங்களுக்குச் சொல்வதாவது: பிரான்ஸிலும் பிளான்டர்ஸிலும், பிரம்மாண்டமான ஒரு யுத்தம் நடைபெறுகிறது. விமான குண்டு வீச்சு சகிதமாய், கனமான கவசங்களைக் கொண்ட டாங்கிகளுடன் ஜெர்மானியர், மாகினோ அரணுக்கு வட புறமுள்ள பிரெஞ்சுத் தற்காப்புக் கோட்டைகளைத் தகர்த்துக்கொண்டு பிரான்ஸுக்குள் பிரவேசித்தனர். எதிரியின் கவச மோட்டார் படைகள், தற்காப்பற்ற திறந்த வெளியாயுள்ள பிரதேசங்களைப் பாழாக்கி வருகின்றன. அவைகள் வெகுதூரம் வரை, உள்ளே பிரவேசித்து பீதியையும் குழப்பத்தையும் பரப்பி வருகின்றன. அவற்றிற்குப் பின்னால், லாரிகளில் காலாட் படைகளும், அவற்றிற்குப் பின்னால் திரள் திரளாக யுத்த தளவாடங்களைத் தாங்கி நாடுகளைக் கொள்ளையடிப்பதற்கு வேண்டிய சாதனங்களும் வந்துகொண்டிருக்கின்றன. இதைக் கண்டு நாம் பீதியடைந்துவிடக் கூடாது. பிரெஞ்சு சைனியத்திடமும், அதன் தலைவர்களிடமும் எனக்குப் பெரும்

நம்பிக்கை உண்டு. கான்கிரீட் அரண்களின் பின்னு விருந்துகொண்டு எதிரியின் தாக்குதலைத் தடுத்து நிற்பதை விட்டுவிட்டு, ஆவேசத்துடன், சிறிதும் தளராமல் எதிரியைத் தாக்குவதில் நாம் முனையவேண்டும். இந்த வீராவேச உணர்ச்சியானது ராணுவத் தலைவர்களிடம் மட்டுமின்றி ஒவ்வொரு சோல்ஜரிடமும் காணப்படவேண்டும். இதுவரையில் கண்ட காட்சியில் நாம் ஜெர்மன் விமானப் படைகளை எளிதில் முறியடித்துவிடலாமென்று தோன்றுகிறது. நமது பலம் குறைவா யிருந்தும் எதிரியின் விமானச் சேதம் கொஞ்ச நஞ்சமல்ல. பிரெஞ்சுப் படைகளும், பிரிட்டிஷ் படைகளும் சற்றும் மனங் குன்றுமல் எதிரியை எதிர்த்து விரட்ட முயன்ருல், வெகு விரைவில் வெற்றி கிடைக்குமென்பதில் சந்தேகமில்லை.

'ஹாலந்தை நிர்மூலமாய்ச் சாம்பலாக்கிய நாஜி சைனியங்கள் இன்னும் சில தினங்களுக்குள் நமது நாட்டின்மீது கவனத்தைச் செலுத்தும் என்பதை நாம் எதிர்பார்க்கத்தான் வேண்டும். அதைச் சமாளிக்க நாமெல்லோரும் தயாரா யிருக்கிரு மென்று எல்லோர் சார்பாகவும் நான் தெரிவிக்கிறேன். அந்தக் கடும் சோதனை நமக்கு வரத்தான் போகிறது. அச்சமயம், போர் முனையில், நமது சோல்ஜர்கள், மாலுமிகள், விமானிகள் ஆகிய வாலிபர்கள் சகித்துவரும் எல்லா அபாயங்களையும் பெருமையுடன் சந்தோஷமாய்ப் பகிர்ந்துகொள்ள இந்தத் தீவில், எல்லா ஆண்களும் பெண்களும் தயாரா யிருப்பார்கள்.

'யுத்தத்தில் வெற்றி பெற வேண்டுமானல்', தேவையான ஆயுதங்களையும், குண்டுகளையும், வெடி மருந்துகளையும், விமானங்களையும், இன்னும் மற்ற சாதனங்களையும்,

வேண்டிய அளவுக்கு மேல் நாம் தயாரித்துக் கொடுத்தாக வேண்டும். விரைவாக, அதிகப்படி விமானங்கள், டாங்கு கள், குண்டுகள், பீரங்கிகள் முதலியவற்றைத் தயாரிக்க வேண்டும். ஜீவாதாரமான யுத்த தளவாடங்கள் ரொம்ப வும் அவசரமாகத் தேவை. சக்தி மிகுந்த ஆயுத பலத் துடன் கூடிய எதிரிக்கு மாருக அவை நமது பலத்தை அதிகப்படுத்தும். அவை உபயோகிக்கப்பட்டுச் செலவாகி வருகையில், நம் கையிருப்புக் குறையாம விருக்கும்படி துரிதமான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். சுணங்க லாகாது. பிரான்ஸிலிருந்து இந்தப் போர் நம் தீவை அணுகும். அப்பொழுது ஏற்படுவதுதான் முதல்தரமான போராட்டமாய் இருக்கும். அந்த நெருக்கடியான காலத் தில் எவ்வகை முயற்சிகளையும் நாம் எடுத்துக்கொள்ளத் தயங்க மாட்டோம். நம் பரிபூரண முயற்சியையும் செய்து காட்டுவோம்.

'சொத்துரிமை, தொழிலாளரின் வேலை நேரம் முதலியவற்றை, சுதந்திர வாழ்க்கை, நமது மானம் முதலி யவற்றைக் காப்பதற்காக, நாம் பிரதிக்ஞை செய்து கொண்டு செய்யப்போகும் போராட்டத்துடன் ஒப்பிட் டால் அவை எம்மாத்திரம்? மன்னரின் கட்டளைப்படி, எல்லாக் கட்சிகளும், அபிப்பிராயங்களும் பிரதிநிதித்வம் பெற்றுள்ள ஒரு சர்க்காரை நான் அமைத்திருக்கிறேன். எத்தனையோ தகராறுகளும் வித்தியாசங்களும் இதற்கு முன் எங்களிடையே இருந்ததுண்டு. ஆனுல் இப்பொழு தோ, ஒரே பந்தம் நம் எல்லோரையும் பிணைத்திருக்கிறது. வெற்றி கிடைக்கும் வரை போர் செய்தே தீருவோம். அடிமைத்தனத்துக்கும், மானக் கேட்டுக்கும் ஒருகா லும் பணிவதில்லை என்ற உறுதிதான் நம் எல்லோ ரையும் ஒன்ருக்கியிருப்பது. நம் பலத்தாலும் நேச தேசங்

களின் கூட்டுறவாலும் நாம் வெற்றி பெற்று, இதுவரை யில் தங்கள் சுதந்திரங்களை இழந்த நாடுகளுக்கும் மற்ற ஜனநாயக அரசுகளுக்கும் சுதந்திரத்தை வழங்கி நம் கீர்த் தியை உலகெங்கும் பரவச் செய்வோம்.'

பின்பு, மே மாதம் 23-ஆம் தேதியன்று, பிரெஞ்சு மேற்கு முனையின் ஸ்திதியை அறிந்துகொள்ள வேண்டி ராணுவ ஆலோசனையாளருடன் பிரான்ஸுக்குப் போனார். நேச தேசத் துருப்புகள் சமாளிக்க முடியாததின் கார ணத்தைத் தெரிந்துகொண்டு திரும்பிவந்தார். பிரிட்டிஷ் தீவுகளுக்கு ஆபத்து நெருங்கிவருவதை உணர்ந்து, நாட் டைப் பாதுகாக்கவேண்டிய பெரு முயற்சியை எடுத் துக்கொண்டார். தொழிற் சங்க காங்கிரஸுடன் இணைக் கப்பட்டுள்ள கவுன்சில்கள் அடங்கிய விசேஷ மகா நாட்டுக்கு அனுப்பின ஒரு கடிதத்தில், 'நம் நாட்டின் தேவைகள் அத்யாவசியமானவையாகவும் கடுமையானவை யாகவும் இருக்கின்றன. அவற்றை நாம் சமாளிக்காவிட் டால் வெகு நஷ்ட மடைவோம். இப்போது, தேசீய காரி யத்துக்காகப் புதிய ஐக்கியத்தை அஸ்திவாரமாகக் கொண்டு சர்க்கார் அமைக்கப்பட்டிருப்பதால் இந்தத் தேவைகளை நம்மால் சமாளிக்க முடியும். இந்தக் கோரிக்கைகளிலிருந்து எழும் கடமைகளை, ஸ்தாபனங்களிலுள்ள தொழிலாளர்கள், கட்டுப்பாடாக மனமொப்பி ஏற்பார்களென்று பரிபூரண மாக நம்பிக்கொண்டிருக்கிறோம். தொழிலாளர்களின் சகிப்புச் சக்தி, தியாகம் செய்ய அவர்களுக்குள்ள திறமை ஆகியவற்றின் மீது அந்தக் கடமைகளின் பொறுப்பைப் போடுமாறு நிர்ப்பந்திக்கப்பட்டிருக்கிறது. நிலைமையின் நெருக்கடி மணிக்கு மணி அதிகமாகி வருகிறது. நாட்டை

யும் சுதந்திரத்தையும் பாதுகாக்க அபார முயற்சி செய்ய வேண்டும். இந்நாட்டுச் சாதனங்கள் பூராவும் திரட்டப் படவேண்டும்,' என்று குறிப்பிட்டிருந்தார்.

பெல்ஜியம் சரணாகதி அடைந்த பிறகு மே மாதம் 28-ஆம் தேதி கூடிய காமன்ஸ் சபையில் சர்ச்சில் பின்வருமாறு பேசினார்:

'போர் முனையிலுள்ள பெல்ஜியம் மன்னர் ஜெர்மன் அதிகாரிகளிடம் ஒரு முக்கியஸ்தரை அனுப்பி, பெல்ஜியப் போர் முனையில் யுத்தத்தை நிறுத்திவிட வேண்டுமென்று கேட்டுக்கொண்ட விஷயத்தைச் சபையினர் அறிவீர்கள். இந்த நடவடிக்கைகளில் கலந்துகொள்ள வேண்டியதில்லையென்று பிரிட்டிஷ், பிரெஞ்சு ஜெனரல்களுக்கு உடனே தாக்கீதுகள் அனுப்பப்பட்டன. ஜெர்மன் ராணுவ அதிகாரிகள் பெல்ஜிய மன்னரின் கோரிக்கைக்கு இணங்கினர். இதன் பேரில், இன்று விடியற்காலை 4 மணி முதல் பெல்ஜியன் சைனியங்கள் ஜெர்மன் சைனியங்களை எதிர்ப்பதை நிறுத்தின. பெல்ஜிய சைனியங்களின் சேனாதிபதி யென்ற முறையில் பெல்ஜிய மன்னர் எடுத்துக்கொண்ட நடவடிக்கையைப் பற்றி இந்த நெருக்கடியான சமயத்தில் நாம் ஒரு தீர்ப்பும் சொல்வதற்கில்லை. பெல்ஜிய சைனியம் வெகு தீரமாகப் போர் புரிந்தது. எதிரிக்குப் பெரும் சேதங்களை விளைத்தது. தானும் சேத மடைந்தது.

'மன்னரின் செய்கையை பெல்ஜிய சர்க்கார் ஒப்புக் கொள்ளவில்லை. இதில் இவர்கள் கலந்துகொள்ளாமல், தாங்கள்தான் பெல்ஜியத்தின் சட்ட பூர்வமான சர்க்கார் என்று இவர்கள் பிரகடனம் செய்து, நேச தேசத்தினர் கட்சியில் இருந்துகொண்டு, யுத்தத்தைத்

தொடர்ந்து நடத்துவதெனத் தீர்மானித்திருக்கின்றனர். வெகு அவசரமான வேண்டுகோளுக் கிணங்கியே நேச தேசத் துருப்புகள் இந்த நாட்டின் உதவிக்குச் சென்றன வென்பதை பெல்ஜிய மன்னர் மறந்தது வருந்தத் தக்கது. பெல்ஜியம் சரணுகதி யடைந்ததின் பயனுக நேச தேச சைனியங்கள் எக்கச்சக்கமாக மாட்டிக் கொண்டிருக்கின்றன. மிகக் கட்டுப்பாட்டுடன் போராடித்தான் வருகின்றன. இவைகள் என்ன செய்யப் போகின்றன என்று நான் இந்தச் சமயத்தில் தெரிவிக்கக் கூடாது. எனினும், கஷ்டமும் சிரமமுமான தகவல்களைக் கேட்க நீங்கள் உங்களைத் தைரியப்படுத்திக் கொள்ளவேண்டும். என்னவானுலும் சரி, சுதந்திர இயக்கத்தைப் பாதுகாக்க நம் கடமைகளினின்றும் நாம் திரும்பமாட்டோம். இறுதியில் நமக்குத்தான் வெற்றி!'

ஜூன் மாதம் 4-ஆம் தேதியன்று காமன்ஸ் சபையில் சர்ச்சில் பேசுகையில், 'செடனிலும் மியூஸ் நதிக் கரையிலுமுள்ள பிரெஞ்சுத் தற்காப்புகள் மே மாதம் இரண்டாவது வாரத்தில் உடைபட்ட தருணம் முதல், பெல்ஜியம் மன்னரின் வேண்டுகோளுக் கிணங்கி, அந்நாட்டுக்குப் போயிருந்த பிரிட்டிஷ், பிரெஞ்சு சைனியங்கள் தப்புவதற்கு ஒரே வழி ஏமியன்ஸுக்கும் தென்புறமாகவும் பின்வாங்குவதுதான். ஆனுல் இந்த உபாயத்தை உடனே புரிந்து கொள்ள முடியவில்லை. இடைவெளியை மூடிவிட முடியுமென்று பிரெஞ்சு ராணுவத் தலைவர்கள் முதலில் நினைத்தார்கள். வடக்கேயுள்ள சைனியங்கள் போர்புரிந்துகொண்டிருந்தன. அப்பொழுது பின்வாங்கியிருந்தால், திறமையான 20 டிவிஷன்க ளடங்கிய பெல்ஜிய சைனியம் நிச்சய

மாக அழிக்கப்பட்டிருக்கும். பெல்ஜியத்தை அதன் கதிக்கு விட்டுவிட நேர்ந்திருக்கும். எனவே ஜெர்மன் சைனிய பலம் எவ்வளவு தூரம் உட்பிரவேசிக்க முடியுமென்று தெரிந்த வுடன், ஜெனரல் வேகாண்டு என்னும் புதிய பிரெஞ்சு தள பதி வல்லமையுடன் அணிவகுத்தார். ஆனல் ஜெர்மானியர் முன்னும் பின்னும் வந்து சூழ்ந்துகொண்டனர். பல வகைப்பட்ட 400 கவச இயந்திர சாதனங்களைக் கொண்ட 8, 9 டிவிஷன்களை எதிரிகள் உபயோகித்தனர். அதனல் நமக் கும், பிரதான பிரெஞ்சு சைனியங்களுக்கும் எவ்விதமான போக்கு வரத்துமில்லாமல் துண்டித்துவிடப்பட்டது. பிரிட் டிஷ், பிரெஞ்சு, பெல்ஜிய சைனியங்களைச் சூழ்ந்துகொண்டு விட்டார்கள். ஒரே ஒரு துறைமுகத்துக்கும் அதை யடுத் துள்ள கடற்கரைக்குந்தான் அவர்களால் பின்வாங்க முடி யும். இந்தச் சமயத்தில் நமது வர்த்தகக் கப்பல்களும் விமா னப் படைகளும் நமக்கு உதவி யளித்ததன் பயனுக எதிரி யின் விமானங்களின் பலம் சற்று குறையவே, 5½லக்ஷம் சைனியங்களை நமது தீவுக்குக் கொண்டுவந்து சேர்த்தோம். இதுவும் ஓர் வெற்றிதான்' என்றும், இன்னும் பல விவரங் களையும் எடுத்துக் கூறி, நடந்துவரும் போரின் கொடிய போக்கைப் பற்றியும், பிரிட்டிஷ் ஆகாயப் படையின் தீரத் தைப் பற்றியும் எடுத்துரைத்தார்.

பிரெஞ்சு மந்திரி சபை கலைந்தது. ஜூன் மாதம் 16-ம் தேதி யன்று, ஜெர்மனியின் துரிதமான முன்னேற்றத்தைச் சமாளிக்க முடியாமல் பிரெஞ்சு சர்க்கார் பாரிஸ் நகரை விட்டுப் பின்வாங்கி ஓடிவிட்டனர். மார்ஷல் பெட்டெய்ன் என்பவரின் தலைமையில் புது சர்க்கார் அமைக்கப்பட்டது. ஜூன் 17-ஆம் தேதி சரணுகதியடைந்து ஜெர்மனியுடன்

சமாதான உடன்படிக்கைக்காக வேண்டியவற்றைச் செய்யத் துணிந்தனர். மார்ஷல் பெட்டேய்னின் ஆப்த நண்பரான ஜெனரல் பிராங்கோ (ஸ்பெயின் தேசத்தின் சர்வாதிகாரி) பிரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் மத்தியஸ்த தூதராக நடந்துகொண்டார்.

அன்றைய இரவு சர்ச்சில் ரேடியோ மூலம் அறிவித்ததாவது :

'பிரான்ஸிலிருந்து அமர்க்களமான செய்தி வந்திருக்கிறது. இவ்விதக் கொடிய துர்ப்பாக்கியத்துக்கு ஆளான வீர பிரெஞ்சு மக்களுக்காக நான் துக்கிக்கிறேன். அவர்களிடம் நமக்கிருக்கும் நேச உறவு மாறாது. பிரான்ஸின் மேதை மீண்டும் எழுச்சி பெறும் என்ற நமது நம்பிக்கையும் மாறாது. பிரான்ஸில் நடந்த விளைவு பிரிட்டிஷ் நம்பிக்கையையும் நோக்கத்தையும் மாற்றவில்லை. உலக லட்சியத்தைப் பாதுகாக்க நாம் மட்டுமே தனித்து நின்று போராட வேண்டியதாகிவிட்டது. இந்தப் பெரிய கவுரவத்திற்குத் தக்கவாறு, நம்மால் கூடியதை நாம் செய்வோம். நம் தீவைக் காப்பாற்றுவோமாக. ஹிட்லரின் ஆபத்திலிருந்து மனிதர் மீளும்வரை நாம் போராடித்தான் ஆகவேண்டும். முடிவில் எல்லாம் நன்மையாகவே முடியுமென்று நாம் நிச்சயமாக நம்புகிறோம்.'

ஜூன் மாதம் 18-ஆம் தேதியன்று காமன்ஸ் சபை நிரம்பி யிருந்தது. மனக் கொதிப்புடன் சர்ச்சில் எழுந்து பேசினார் :

'செடானிலும் மியூசிலும் பிரெஞ்சு முனை திட்டமாகச் சிதறிய தென்பதை அறிந்ததும் பெல்ஜியத்திலிருந்த

வடசேனைகளை வாபஸ் வாங்க பிரெஞ்சு ராணுவத் தலைவர்கள் தவறியதால் ஏற்பட்ட பிரம்மாண்டமான ராணுவ விபரீதத்தைப் பற்றி முன் தடவை நான் இச்சபையில் பேசினேன். அந்தத் தாமதத்தால் 15,16 பிரெஞ்சு டிவிஷன்கள் நஷ்டமாயின. அத்துடன் அந்த நெருக்கடியான நேரத்தில் பிரிட்டிஷ் துருப்புகள் போரிட முடியாமல் போய்விட்டது. நமது சேனையையும் பிரெஞ்சுத் துருப்புகளையும், மொத்தம் 120 ஆயிரம் பேர்களை பிரிட்டிஷ் கடற்படை டன்கர்க்கிலிருந்து மீட்டது. ஆனால், அத் துருப்புகளின் பீரங்கிகளும், கவச மோட்டார்களும், இன்னும் பல நவீன சாதனங்களும் நஷ்டமாயின. இந்த நஷ்டத்தை ஈடு செய்யச் சில வாரங்கள் பிடித்தன. அந்தச் சில வாரங்களின் முதல் பகுதியிலேயே பிரான்ஸின் போர் அபஜயமானது.

'இந்தப் போரில், மிகுந்த கஷ்டங்களுக் கிடையில் பிரெஞ்சு சேனை வீரத்துடன் எதிர்த்துப் போராடியதையும், எதிரிக்கு ஏராளமான நஷ்டங்களை விளைவித்ததையும், விரோதிகள் களைத்துப் போயிருந்ததையும் நாம் கவனிக்கும்போது, சிறந்த பயிற்சி வாய்ந்த துருப்புகள் அடங்கிய அந்த 20 டிவிஷன்களை இழக்காதிருந்தால், அவையே வெற்றியைத் தேடித் தந்திருக்க முடியும். அந்த டிவிஷன்களை பிளான்டர்ஸில் இழக்க நேரிட்டது. அவற்றின் உதவி யில்லாமலே ஜெனரல் வேகாண்டு போரிட வேண்டியதாயிற்று. மூன்று பிரிட்டிஷ் டிவிஷன்கள் மட்டுமே, அல்லது அதற்குச் சமமான தொகையுள்ள பிரிட்டிஷ் துருப்புகளே பிரிட்டிஷ் சோல்ஜர்களுடன் கைகோத்துப் போரிட முடிந்தது. அவர்கள் மிகக் கஷ்டப் பட்டார்கள். ஆனால் அவர்கள் புரிந்த போர் வியக்கத் தக்கதே. எவ்வளவு துரிதமாக முடியுமோ அவ்வளவு

துரிதமாக நாங்கள் ஒவ்வொரு சோல்ஜரையும் ஆயுத சாதனங்களுடன் அனுப்பினோம். குற்றச் சாட்டுக்காக நான் இந்த விஷயங்களைச் சொல்லவில்லை. இந்தப் பெரிய போரில் 12 முதல் 14 பிரிட்டிஷ் டிவிஷன்கள் வரையில் போரிடும்படி அனுப்ப நாம் ஏற்பாடு செய்ய ஏன் முடியவில்லை என்பதை விளக்கிக் கூறவே நான் இவற்றை விவரிக்கிறேன். சரித்திரம் எழுத தஸ்தாவேஜுகளைப் பொறுக்கும் ஆசிரியர்களுக்காக நான் இந்த விஷயங்களைப் பகிரங்கப்படுத்துகிறேன்.

'வீணாகக் குற்றச்சாட்டுகள் சொல்லிக்கொண் டிருப்பதில் பயனில்லை. நம் உள்நாட்டு விவகாரங்களிலும் நாம் இதே மனப்பான்மையுடன்தான் நடந்துகொள்ள வேண்டும். அபாயம் ஏற்படுவதற்கு, கடந்த வருஷங்களில் பொறுப்பாளியாக இருந்த சர்க்காரின் நடத்தையைப் பற்றியும், பார்லிமெண்டின் நடத்தையைப் பற்றியும் விசாரித்து, தீர்ப்புக் கூறவேண்டுமென்று விரும்புவோர் பலர் இருக்கின்றனர். நமது விவகாரங்களை நிர்வகிக்க, முன் பிருந்த சர்க்கார்களைக் கண்டிக்க விரும்புவது தீமையானதும் மதியீனமானது மாகும். இறந்த காலம், நிகழ் காலம் இவ்விரண்டுக்கு மிடையே நாம் சச்சரவுகளை ஆரம்பித்தால், எதிர்காலத்தை இழந்தவர்கள் ஆவோம் என்பது நிச்சயம். இதைக் கவனிக்கத் தவறுதீர்கள்.

'ஆகவே, நான் தற்போதுள்ள மந்திரிகளுக்குள் எவ்வித வித்தியாசத்தையும் கருதப் போவதில்லை. எல்லாக் கட்சிகளையும் ஐக்கியப்படுத்தும் பொருட்டு, பெரியதோர் நெருக்கடியில் இந்த மந்திரி சபை அமைக்கப்பட்டது. இம் மந்திரி சபையைப் பார்லிமெண்டின் இரு சபைகளும் ஏகமனதாக ஆதரித்தன. மந்திரிகளாகிய நாங்கள் ஒன்றுபட்டு நின்று காமன்ஸ் சபையின் அதிகாரப்படி நாட்டை

ஆளவும், போரை நடத்தவும் போகிறோம். இவ்விதக காலத்தில், தினசரி தமது கடமையைத் தவறாமல் நிறை வேற்ற முயலும் ஒவ்வொரு மந்திரியும் நன்கு மதிக்கப் படவேண்டும். அவருக்குக் கீழ் உள்ள உத்தியோகஸ்தர் கள் காலந் தவறாமல் மந்திரியின் சட்டளைகளை நிறை வேற்றவேண்டும். இப்படி நடக்காவிடில், இனியும் நிலைமையைச் சமாளிக்க முடியாது போய்விடும். யுத்தத் தைப்பற்றிய விஷயங்களில் பல இன்னும் நமக்குத் தெளி வாகவில்லை. சிறிது காலத்தில் அவை தெளிவாகலாம். வியாழக்கிழமை யன்று காமன்ஸின் ரகசியக் கூட்ட மொன்று நடக்கும். அக்கூட்டத்தில், மெம்பர்களின் அபிப்பிராயங்களை, சர்வ சுதந்திரத்துடன் வெளியிடலாம். ஜீவாதாரமான விஷயங்களைப் பற்றி விவாதிக்கலாம்.'

மீண்டும் அவர் கூறியதாவது:

'கடந்த சில தினங்களில், யுத்த ஆரம்பத்தில் நாம் அனுப்பிய 4 லக்ஷம் சோல்ஜர்களில் $3\frac{1}{2}$ லக்ஷம் சோல்ஜர் களவரை பத்திரமாக இந்நாட்டுக்குத் திரும்பிவந்து விட் டனர். மற்றவர்கள், பிரெஞ்சுக்காரர்களுடன் சேர்ந்து, இன்னும் அங்குமிங்கும் போர் புரிந்து வருகின்றனர். கடந்த 9 மாத காலமாக பிரான்ஸில் சேமித்து வைக் கப்பட்டிருந்த ஏராளமான பண்டங்களையும், யுத்த தள வாடங்களையும் இந்நாட்டுக்குக் கொண்டுவந்துவிட் டோம். ஆகவே இப்போது நம் தீவில், மிக்க பலமான சேனை இருக்கிறது. ஏற்கனவே ஜெர்மானியருடன் வெற்றிகரமாகப் போர்புரிந்த பல்லாயிரக் கணக்கான பிரிட்டிஷ் சோல்ஜர்களும் இருக்கிறார்கள். இப் பொழுது பிரிட்டனில் $12\frac{1}{2}$ லக்ஷம் சோல்ஜர்களுக்கு மேல் இருக்கின்றனர். இதோடு 5 லக்ஷம் ஸ்தலத் தற்

காப்புத் தொண்டர்களும் இருக்கின்றனர். அவர்களில் ஒரு பிரிவினருக்கு ஆயுத சாதனம் அளிக்கப்பட்டிருக்கிறது. நமது தற்காப்புத் திட்டத்தின்படி ஒவ்வொரு ஆடவரையும் சேர்த்திருக்கிறோம். ஒவ்வொருவருக்கும் ஆயுத சப்ளை செய்திருக்கிறோம். கூடிய சீக்கிரம் நமது ஆயுதங்கள் பன்மடங்கு அதிகமாகுமென்று எதிர்பார்க்கிறேன். ஏராளமானவர்களுக்கு யுத்தப் பயிற்சியும் அளிக்கப் போகிறோம். ஒவ்வொரு பிரஜையும் ஏதாவது ஒரு சேவை புரிவார். கனடாவின் துருப்புகளும் பிரங்கிப் படைகளும் நமக்கு ஒத்தாசை செய்ய வந்திருக்கின்றன.

'இவ்வளவு படைகளிருந்தும், பிரான்ஸில் நடந்த பெரிய போரில் ஏன் இவைகள் கலந்துகொள்ளவில்லை என்ற கேள்வி கிளம்பியது. வெளியே சென்று போரிடக்கூடிய சாதனம் பெற்றவை 12 டிவிஷன்களேதான் இருக்கின்றன. பிரான்ஸும் நம்மிடமிருந்து இதற்கு அதிகமாய் எதிர்பார்க்கவில்லை.

'பிரிட்டனில் நமது படைகள் வாரா வாரம் அதிகரிக்கும். நம் நாட்டின்மீது எதிரி படையெடுத்து வந்தால், அவன் பிரம்மாண்டமான சேனையை அனுப்ப வேண்டியிருக்கும். அந்தச் சேனைக்கு அவசியமான வெடிமருந்துகளும் இதர சப்ளைகளும் தொடர்ச்சியாக வர வேண்டும். அவற்றைத் தடுக்க, நமது கடற்படை தன் கடமையைச் செய்யும். நமது கடற்படையை நாம் மறந்துவிடக் கூடாது. கடல் தாண்டிப் படையெடுப்பு நடத்துவது பற்றி 30 வருஷ காலமாய் ஆலோசனை செய்து வருகிறேன். கடந்த மகா யுத்தத்தின் ஆரம்பத்தில், நமது தேசத்திலிருந்து, எல்லாத் துருப்புகளையும் அனுப்பிவிடும்படி நான் அனுமதித்தேன். அது பற்றி

நான் பிரிட்டிஷ் கடற்படை சார்பாகப் பொறுப்பை ஏற்றுக்கொண்டேன். பிரதேசக் காவல்படை பயிற்சி பெருத நிலைமையில் அப்பொழுது இருந்தது. அந்த யுத்தத்தில், ஜெர்மானியரிடம் பெரிய கப்பற்படை யிருந் தும் அவர்களின் படையெடுப்பைத் தடுத்துவிடத் தகுந்த ஆற்றல் நம் படைக்கு இருந்தது. இன்றைய ஜெர்மனியின் கடற்படையைக் கவனிக்குமிடத்து, அத னிடம் பெரிய கப்பல்கள் இரண்டு கூடக் கிடையாது. இத்தாலியக் கடற்படையும் ஏதோ விஷமங்கள் செய்து வருவதாக நாம் கேள்விப்படுகிறேம். இத்தாலியின் கையிருப்பைப் பார்ப்பதற்கு நம் கடற்படை துடித்துக் கொண்டிருக்கிறது.

'ஏராளமான கடற்படை யில்லாமல் நம் தீவை அணுக முடியாது. பிரிட்டிஷ் கால்வாய் எங்கும் கண்ணி களைப் போட்டு வைத்திருக்கிறேம். கால்வாயிலுள்ள வழிகள் நமக்கு மட்டும்தான் தெரியும். எனினும், விரோதி தந்திரமும், கபடமும், புதிய சதிகளைக் கையா ளும் சாமர்த்தியமும் வாய்ந்தவ ஞகையால், நாம் மிக்க உஷாராக இருக்கவேண்டும். பயிற்சி வாய்ந்த பண்டி தர்கள் நவீன முறைகளைக் கற்பனை செய்தும், அவற் றிற்குப் பரிகாரங்களைத் தேடிக்கொண்டும் உழைத்து வருகிறார்கள்.

'ஆகாய மூலம் படையெடுப்பு நடக்கலாம் என்ற பெரிய பிரச்னை எனக்கு ஞாபகத்துக்கு வருகிறது. இரு சாரார் விமானப் படைகளும் போர்புரிய நேரிடுமென்று எதிர்பார்க்கிறேன். நம் விமானப் படையின் பலத் திலும் சாமர்த்தியத்திலும் எனக்கு நம்பிக்கை உண்டு. இதற்கிடையில், பாரச்சூட் துருப்புகள் மூலமும், விமா னங்கள் மூலமும் இறக்கப்பட்ட துருப்புகளாலும் படை

> யெடுக்கலா மென்றும் எதிர்பார்க்கிறேன். அப்படி இறக்கப்படும் துருப்புகளுக்கும் தரையிலும், வானிலும் நல்ல வரவேற்பு அளிக்க நாம் தயாரா யிருக்கிறோம். பிரான்ஸின் விதி எவ்வாறு முடியுமென்று தெரிய வில்லை. அது உடன்படிக்கையின் விதிகளைப் பொறுத் திருக்கிறது.'

என்றும் கேட்டிராத மின்னற்போரை இப்பொழுது நடத்திக்கொண்டு உலகத்தையே ஆட்டி வைக்கும் எதிரி யின் பக்கம் ஒரே மூளைதான் வேலை செய்கிறது. ஹிட்ல ரின் அரட்டலுக்கும் மிரட்டலுக்கும், அவருடைய புளுகு களுக்கும் மிருகத்தன்மைக்கும், சிறிதும் சளைக்காது, உலக விடுதலைக்கும் கௌரவத்துக்கும், எதிர் நின்று போராடும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலும் ஒரே மூளைதான் வேலை செய்கிறது. ஜெர்மனிக்கும், நேசதேசக் கட்சிகளுக் கும் நடக்கும் இக்கொடிய யுத்தத்தை, ஒரு புறத்தில் ஹிட்லரும், மறு புறத்தில் சர்ச்சிலுமே நடத்தி வருகிறார்கள் எனக் கூறலாம்.

# 19. அலை கடல் அரசி

ஆஸ்திரியா, செக்கோஸ்லோவேகியா, போலந்து, டென்மார்க், நார்வே, ஹாலந்து, பெல்ஜியம், லக்ஸம்பர்க் முதலிய வீர சுதந்திர நாடுகளெல்லாம் ஹிட்லரின் மகா ஆச்சரியமான மின்னல் யுத்தத்தில் படுவீழ்ச்சி யடைந்ததையும், எஞ்சி நிற்கும் ஹங்கேரி, ருமேனியா, பல்கேரியா, யுகோஸ்லேவியா, ஸ்விட்சர்லாந்து, கிரீஸ், துருக்கி முதலிய ஐரோப்பிய நாடுகளும் ஹிட்லரின் பாய்ச்சலை ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்து நடுங்கிக்கொண்டிருப்பதையும் உணர்ந்த மகா மேதாவியான சர்ச்சில் சிறிதும் சளைக்கவில்லை. தற்காப்புக்குப் போதிய வசதிகளுடன் எதிரியின் தாக்குதலுக்குப் பிரிட்டன் தயாரா யில்லாததை நன்கறிந்திருந்தும், எதிரியின் விமானப் படையின் அட்டகாசங்களை ஒடுக்கத் தகுந்த ஆற்றல் பிரிட்டிஷ் விமானப் படைக்கு உண்டா என்ற சந்தேகம் தம் மனத்தை வருத்திய போதிலும், பிரிட்டனுடைய பூகோள அமைப்பிலும், பிரிட்டிஷ் மக்களின் தியாக புத்தியிலும், ஒற்றுமையிலும் அவர் திடமான நம்பிக்கை கொண்டிருந்தார். ஆகையால் ஹிட்லரின் சமாதான பிரேரங்கிக்குச் சற்றும் இணங்காமல், வீழ்ச்சி யடைந்த நாடுகளுக்கு அபயமளித்து, மற்ற நாடுகளுக்கு உசற்சாக மூட்டி, 'நாஜி இயக்கத்தைப் பூண்டோடு அறுக்கும் வரையில் யுத்தம் புரிந்தே தீருவோம்; சமாதானமும் சுதந்திரமும் குலைந்து நிற்கும் ஐரோப்பிய நாடுகளுக்குச் சுதந்திர உரிமையை நிரந்தரமாக ஏற்படுத்தும் வரையில்

போராடியே தீருவோம்!' என்று சர்ச்சில் வீறுகொண்டு முழங்கினார். இந்த மன உறுதி கண்டு அச்சு நாடுகளும் திகைத்தன.

பிரிட்டனுக்குள் படையெடுப்பதை ஹிட்லர் ஒத்தி வைத்துக்கொண்டதோடு நில்லாது, சற்று நிதானித்தே தம் முழுப்பலத்துடன் அதைத் தாக்கவேண்டுமென்றும் முடிவு செய்துகொண்டார். உலகப் பிரசித்தி பெற்ற பிரெஞ்சுச் சேனைகளை இரண்டே வாரங்களில் முறியடித்துவிட்டு, அதே மூச்சில் பிரிட்டனைத் தாக்குவதாகப் போட்டிருந்த திட்டம் குட்டிச் சுவராயிற்று. ஹிட்லர் மனத்தில் இந்த வல்லிடி வீழ்ந்ததற்குச் சர்ச்சிலின் சாதுரியங்களே காரணம்.

ஹிட்லர் சற்று நிதானிக்கத் தொடங்கிய சந்தர்ப்பத்தைத் தாமும் சாமர்த்தியமாக உபயோகித்துக்கொள்ள ஆரம்பித்தார் சர்ச்சில்.

சுதந்திரத்தைப் பறிகொடுத்த நாடுகளின் மந்திரி சபைகளைப் பிரிட்டனில் கூட்டினார். அந்தந்த நாட்டில் சுதேசப் படைகளையும் திரட்டலானார். சுதந்திர பிரான்ஸ் என்ற ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்தி, அதற்குத் தலைவராக மார்ஷல் டி' காலே என்பவரை நியமித்து, பிரெஞ்சுப் படைகளைத் திரட்டி, பிரெஞ்சு மக்களுக்கு மறுபடியும் போரில் ஓர் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஊட்டலானார்.

ஹிட்லரால் விச்சியில் ஏற்படுத்தப்பட்ட பினாமி பிரெஞ்சு சர்க்காரிடம் பிரெஞ்சுப் பிரஜைகளுக்கு வெறுப்பும் அவநம்பிக்கையும் ஏற்படும்படி தூண்டத் தொடங்கினார். எதிரியின் படையெடுப்பைத் தடுப்பதற்கு வேண்டிய

ஏற்பாடுகளை ஒய்வில்லாமல் செய்து வரலானர். ஆங்காங்கே கடற்கண்ணிகளை விதைத்தும், கடற்கரையில் வேவுப் படைகளை அமர்த்தியும், ஆகாயத்தில் பலூன் அரண்கள் கட்டியும், விமான எதிர்ப்புப் பீரங்கிகளைப் பல இடங்களில் ஸ்தாபித்தும், நாஜி விமானப் படையெடுப்பால் பிரிட்டிஷ் பிரஜைகளின் உயிருக்கு அதிகச் சேதம் விளையாமல் தடுப்பதற்கு வேண்டிய வசதிகளை ஏற்படுத்தினர்.

பிரிட்டனை ஜெர்மனி தாக்க நேர்ந்தால் அமெரிக்காவின் சுதந்திரமும் ஜனநாயகமும் எவ்வாறு சீர்குலையக் கூடுமென்றும், பிரிட்டன்மீது நடத்தப்படும் படையெடுப்பு அமெரிக்காவின்மீது படையெடுப்பதற்கான முதல் நடவடிக்கை யென்று அமெரிக்கரே கூறும்படியாகவும் ஒரு புதிய நிலைமையை சர்ச்சில் ஏற்படுத்தினர். அமெரிக்கர்களுக்கும் அமெரிக்க சர்க்காருக்கும் பயங்கர நிலையை உணர்த்தி, அமெரிக்காவுக்கு அருகாமையிலுள்ள பிரிட்டிஷ் தீவுகளை யெல்லாம் அமெரிக்காவிடம் ஒப்படைத்து, அமெரிக்காவின் சகல உதவிகளையும் பெறலானர்.

1940, ஆகஸ்ட் மாதம் 15-ஆம் தேதிக்குள் இங்கிலாந்தில் புகுந்து யுத்தம் நடத்த முடியுமென்று ஹிட்லர் போட்ட திட்டம், முதல் முதலாவதாகச் சீர்குலைந்தது. ஐரோப்பாவுக்கு உலகத்தின் நாலா பக்கங்களி லிருந்தும் கடல் மார்க்கமாய் வந்துகொண்டிருந்த உணவுப் பொருள்களையும் முக்கியமான எண்ணெய் வசதிகளையும் சர்ச்சில் முற்றிலும் தடை செய்துவிட்டதால் ஜெர்மனியின் ஊக்கமும் குன்றியது.

சர்ச்சிலின் தீவிர முயற்சிகளெல்லாம் எதிரியின் படையெடுப்புக்களிலிருந்து பிரிட்டனைப் பாதுகாத்துக் கொள்ள

வல்லவைதானு என்று சந்தேகித்தவர்கள், ஹிட்லர் போட்ட திட்டம் முதல் முதலாவதாக பிரிட்டன் விஷயத் தில் அவலமாய்ப் போனது கண்டு, பிரமித்தனர். இத் தகைய ஓர் அரிய வெற்றிக்குக் காரணஸ்தர் சர்ச்சிலே அல்லவா?

நாஜி விமானங்களின் படையெடுப்பு சாதாரணமான தன்று. வெடிகுண்டு விமானங்கள் கூட்டங் கூட்டமாயும், அலைஅலையாயும் வந்து, குண்டுகளை லண்டன் போன்ற முக்கிய நகரங்களில் வீசின. இவ்வெடி விமானங்களுக் குத் துணையாய் ஜெர்மன் போர் விமானங்களும் ஏராள மாய் வரும். வெடி விமானங்கள் குண்டுகளை வீசும் போது, எதிர்ப்பு ஏற்படாதபடி போர் விமானங்கள் உதவியா யிருக்கும். இப்படி இரவு பகலாய் லண்டன் மீதும், சுற்றுப்புறங்களிலும் குண்டு போடுவதைக் கண்டு, பிரிட்டிஷார் கதி கலங்காமல் இருப்பதோடு, அன்றாட அலுவல்களில் ஈடுபட்டும் இருக்கிருர்கள் என்ருல், பிரிட்டிஷாருடைய நெஞ்சு எவ்வளவு உரமாயும், அவர்கள் எத்தகைய கட்டுப்பாட்டுடனும் இருக்கவேண்டும்! மன் னர் வசிக்கும் பக்கிங்ஹாம் மாளிகை முதல் ஏழைத் தொழிலாளர் வசிக்கும் குடிசைகள் ஈருக, மாட மாளிகை களும் கூடகோபுரங்களும் சேதமுற்று, ஆண்களும் பெண் களும், சின்னஞ் சிறுர்களும், காதலரும், நோயாளிகளும் காயப்பட்டும் கொல்லப்பட்டும் இருப்பதை நேரில் கண்டு, ஜனங்கள் மனமொடியாமல், தம் அன்ருட வாழ் வில் ஈடுபடுவ தென்ருல், அது மனிதருக்குள்ள சாதாரண இயல்பா? இல்லை. 'உயர்ந்த லட்சியத்துக்காகப் போராடு கிறேம்' என்ற மன உறுதியிலேதான் இத்தகைய தியாக

உணர்ச்சி பிறக்க முடியும். இதைத்தான் பிரிட்டனிலே, மனித சரித்திரத்துக்கே புதுமையான ஒரு விதத்திலே, சர்ச்சில் சிருஷ்டித்திருக்கிறார். இயற்கையாக எழ வேண்டிய இரக்க உணர்ச்சிக்குப் பதிலாக, வீரம் செறிந்த வைராக்கியம் உண்டாகும்படி சர்ச்சில் செய்திருக்கிறார். இந்த இரண்டாவது மகா யுத்தத்திலே, தனியே நின்று பிரிட்டன் படையெடுப்பைச் சமாளிப்பதில், இது ஒரு பெரிய அதிசயம். சர்ச்சில் தலைமையில், லட்சக்கணக்கான ஆங்கில வாலிபர்களும், பெண்களும், என்ன வந்தாலும் நாஜிக் கொடுமைக்குத் தலை வணங்குவதில்லை என்ற உறுதியுடன், உயிரைத் துரும்பாக மதிக்கின்றனர். இதனால், அன்று போல் இன்றும், பிரிட்டன் 'அலை கடல் அரசி'யாக நிமிர்ந்து நிற்க முடிகிறது.



பிரிட்டனுக்கு உதவியாக கனடாவிலிருந்து வந்துள்ள விமானிகள்

# 20. சாம்ராஜ்யத் தலைவர்

இந்த உலக மகா யுத்தத்திலே கடல் யுத்தம் மிக முக்கியமான அம்சமாக விளங்குகிறது. யுத்தம் ஆரம்பித்தவுடன், ஹிட்லரின் நாசகாரிகளும் ஜெர்மன் சப்மரைன்களும் அன்றாடம் பிரிட்டிஷ் கப்பல்களைத் தாக்கி மூழ்கடித்துக்கொண்டே வந்தன. கடற் கண்ணிகளும் காந்தக் கண்ணிகளும், பிரிட்டிஷ் கப்பல்களை மட்டுமின்றி, நடுநிலைமை வகிக்கும் நாடுகளின் கப்பல்களையும் நாசப் படுத்தி வந்தன.

யுத்த ஆரம்பத்தில் சர்ச்சில் கடற் படை மந்திரியா யிருந்தார் என்று சொன்னோ மல்லவா? பிரிட்டனைப் பொறுத்தமட்டில், யுத்த ஆரம்பத்தின் போது அதனுடைய கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டு ஏராளமான நஷ்டம் ஏற்பட்டுக்கொண்டு வந்தது. இதைச் சர்ச்சில் சிறிதுகூட மறைக்காமல் தினந்தோறும் பிரிட்டனுக்கு ஏற்பட்ட கப்பல்களின் நஷ்டத்தை, அவைகளுடைய எண்ணிக்கை, எடை, அவைகளிலிருந்த பொருள்கள், கப்பல்கள் இன்ன ரகத்தைச் சேர்ந்தவை ஆகிய விபரங்களோடு, வெளியிட்டுக் கொண்டு வந்தார். அதே சமயம் கோயபெல்ஸின் பொய்ப் பிரசாரத்துக்கும் தக்க பதிலளித்துச் சவால் விடுத்துக் கொண்டு வந்தார். உள்ள கஷ்டத்தை அப்படியே பொது மக்களிடம் தெரிவித்து, தமது திடமான நம்பிக்கையையும் எடுத்துக் கூறி, அவர்களுக்குத் தென்பூட்டும் சுபாவம்

பிரிட்டிஷார்களுக் குள்ளேயே சர்ச்சிலுக்குத்தான் அதிக மாய் உண்டென்பதை உலகத்தார் இந்த யுத்த ஆரம்பத்தி லேயே உணர்ந்தனர். இந்த முறையை அவர் ஒருபோதும் கைவிட்டதில்லை.

கப்பற் படை விஷயத்தில் சர்ச்சில் தனிச் சாமர்த்தியம் படைத்தவர். ஹிட்லர், பிரிட்டிஷ் படைகள் சிறிது நேரத் தில் நாசமாக்கப்படுமென்று புளகாங்கித மடைந்திருந்த போது, மாந்திரீகத்துக்குச் சமானமான சக்தியாலும் யுக்தியாலும் 3,35,000 வீரர்களைக் கொண்ட சேனுபலத் தையும், எண்ணிலடங்காத யுத்த தளவாடங்களையும் டன் கர்க்கிலிருந்து காப்பாற்றி பிரிட்டனுக்குக் கொண்டு வந்து சேர்த்த சர்ச்சில் அல்லவா அவர்!

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு மத்தியதரைக் கடல் இதயம் போன்றது. மத்தியதரைக் கடலில் பிரிட்ட னுக்கு அடுத்தாற்போல் செல்வாக்குப் பெற்றிருப்பது இத்தாலி. பிரிட்டனைக் கவிழ்த்துத் தானே முழு ஆதிக்கமும் பெற்றுவிட வேண்டுமென்பது முஸோலினி யின் ஆசை. இந்த ஆவலோடு அவர் பல காரியங்களைச் செய்து வருகிறார். கிரீஸ் தேசத்தை வசப்படுத்தி, ஸிரியா வில் குழப்பம் ஏற்படுத்தி, விமான நிலயங்களுக்கு வேண் டிய வசதிகளை ஏற்படுத்திக்கொண்டு, எகிப்து தேசத்தைப் பலதிறப் படைகளைக் கொண்டு தாக்கி, சூயஸ் கால் வாயைக் கைப்பற்ற வேண்டுமென்பது அவருடைய கனவு. மத்தியதரைக் கடலிலும் செங்கடலிலும் ஆதிக்கம் செலுத் தினல் மத்திய கீழ்த் தேசங்களும் ஆப்பிரிக்காவும் தம் ஆதிக்கத்துக்கு வந்துவிடும் என்று முஸோலினி விரும்பியது நாளிதுவரை ஈடேறவில்லை.

மார்ஷல் பெட்டெய்னிடம் ஹிட்லர் உடன்படிக்கை முயற்சிகளைச் செய்துகொண்டிருக்கும்போது, கிரீஸ்மீது முஸொலினி படையெடுக்க லானர். இதை எதிர்பார்த்திருந்த சர்ச்சில் முன்னமேயே சில முக்கிய ஏற்பாடுகளைச் செய்து வைத்திருந்தார். கிரீஸுக்கும் பிரிட்டனுக்கும் ஏற்பட்டிருந்த ஒப்பந்தப்படி சகல விதமான உதவிகளையும் கிரீஸ் தேசம் அடையும்படி செய்தார். இந்த உதவியைப் பற்றி நவம்பர் 5-ஆம் தேதி, காமன்ஸ் சபையில் சர்ச்சில் பேசும்போது, ‘ நடுநிலைமை வகித்து வந்த கௌரவம் வாய்ந்த கிரீஸ் தேசத்துக்கு நாம் செய்யக்கூடிய உதவி ஒன்றே ஒன்றுதான். அது நம்மால் ஆனமட்டில் உதவி செய்வதே. கடற் படை உதவியும், விமானப் படை உதவியும் செய்வதற்கும் பலமான ஏற்பாடுகள் செய்யப்பட்டு விட்டன. மற்றப் படைகளும் கிரீஸுக்கு உதவி புரியப் போய்க்கொண்டிருக்கின்றன. நாம் செய்திருக்கும் ஏற்பாடுகளின் விவரங்களைத் தெரிந்துகொள்ள சபையோர் விரும்ப மாட்டார்களென்று நம்புகிறேன். பிரமாதமாகச் சொன்னல், நான் ஏதோ மிகைப்படுத்திக் கூறுவதாக எண்ணுவீர்கள். குறைவாகச் சொல்லிவிட்டால், அந்த உதவி போதாதென்று பயப்பட்டு விடுவீர்கள். உள்ளவற்றை அப்படியே சொன்னலோ, அது மிகவும் அபாயமான அறிவிப்பாகும். ஏனெனில், இத்தகைய உண்மைகளைத் தான் நம் விரோதிகள் தெரிந்துகொள்ள விரும்பிக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். நம்மாலான சகல உதவிகளையும் கிரீஸுக்கு அளிக்கிறோம் என்பதை மட்டும் நீங்கள் அறிவது நலம் ’ என்று, விபரங்களைத் தெரிவிக்காமலே, தாமும் குற்றத்துக்கு ஆளாகாமல், இதுவரை எவரும்

செய்யாத ஒரு புதிய முறையில், சாமர்த்தியமாகத் தைரிய மூட்டி வைத்தார்.

சமீபத்தில் அமெரிக்காவிடமிருந்து கிடைத்த ஐம்பது நாசகாரிகளின் ஒரு பகுதி இங்கிலாந்தை அடைந்து விட்டது. இவற்றில் முதலில் துறைமுகத்தை யடைந்த நாசகாரிக்கு 'வின்ஸ்டன் சர்ச்சில்' என்ற பெயரை மாட்சிமை தங்கிய ஜார்ஜ் மன்னர் சூட்டியிருக்கிறார். இதற்கேற்றவாறு, இந்த நாசகாரிகளைக் கொண்டு நாஜிகளை முறியடிப்பதோடு நில்லாது, சகல யதேச்சாதிகாரங்களையும் ஒழித்து, இந்த யுத்தத்திலே வெற்றி பெற்று, உலக மக்கள் அனைவரும் போற்றும்படியாக அகில உலக சுதந்திரத்தை நிரந்தரமாய் ஸ்தாபிக்க சர்ச்சில் அடிகோலுவாராக.

சக்தி பிரஸ் லிமிடெட், (சாந்தி பிரஸ்), சென்னை.

ஜெர்மன் விமான அசுரன்

# கோயரிங்



இவருடைய வாழ்க்கைச் சரித்திரத்தை ஒவ்வொருவரும் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். ஆசிரியர் தி. ஜ. ர., கோயரிங்கின் வாழ்க்கையையும், நாஜி இயக்கத்தின் சரித்திரத்தையும், ஜெர்மனி கோரமான கொடும்போரில் செய்துவரும் அட்டகாசங்களையும், ஒரு வருஷ யுத்த விவரத்தையும் இந்த நூலில் வெகு தெளிவாக வர்ணித்திருக்கிறார்.

விலை அணு 12 : : தபால் செலவு தனி